# ஆண்டாள் அருந்தமிழ்



தமிழியற்புலம்
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி
குற்றாலம்



# ஆண்டாள் அருந்தமிழ்

பதிப்பாசிரியர்
முனைவர் க. மீனாகுமாரி,
முதல்வர் (பொறுப்பு)
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,
குற்றாலம்

75

தேனருவி வெளியீடு
குற்றாலம்

[redacted]


நூல் : ஆண்டாள் அருந்தமிழ்

வகை : கட்டுரைகளின் தொகுதி

முதற்பதிப்பு : அக்டோபர் 2006

படிகள் : 1000

பக்கங்கள் : viii + 108

வெளியீடு : தேனருவி வெளியீடு<br>தமிழியற்புலம்<br>ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி<br>குற்றாலம்

அச்சீடு : நாஞ்சில் ஆப்செட் பிரிண்டர்ஸ்,<br>67/1 கோர்ட் ரோடு,<br>நாகர்கோவில் - 629 001,<br>தொலைபேசி (04652) 233853.





This Book is Published with the Financial Assistance of **Tirumala Tirupati Devasthanams** under their scheme "Aid to Publish Religious Books"

## அணிந்துரை

# ஆண்டாள் அருந்தமிழுக்கு நல்லதோர் ஆற்றுப்படை

பேராசிரியர் **இரா. மோகன்**
**ஒப்பிலக்கியத் துறைத் தலைவர், தமிழியற்புலம்**
***மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 629 021.***

நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்த நாயன்மார்கள் அருளிய திருமுறைகள் பன்னிரண்டு, உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனாய்க் கண்டுகளித்து ஞானத்தமிழ் பாடிய ஆழ்வார்கள் பன்னிருவர், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் தனிச்சிறப்பு வாய்ந்தது குறிஞ்சிமலர், ஓர் ஆண்டிற்கான மாதங்கள் பன்னிரண்டு - இப்படிப் பன்னிரண்டு என்ற எண்ணின் பெருமைகளைப் பறைசாற்றிக் கொண்டே போகலாம். பன்னிரு ஆழ்வார்களுள் ஒரே ஒரு பெண் - ஒப்பற்ற பெண் - ஆண்டாள் மட்டுமே **'ஆண்டாள் அருந்தமிழ்'** என்னும் இத்தொகுப்பில் பன்னிரு ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றிருப்பது ஒரு தற்செயல் நிகழ்வாயினும், நயக்கத்தக்கதாகும்; 'என்ன பொருத்தம் இந்தப் பொருத்தம்' என்று வியந்து போற்றத்தக்கதும் ஆகும்.

"ஆங்கிலம் வாணிகத்தின் மொழி என்றும், இலத்தீன் சட்டத்தின் மொழி என்றும், கிரேக்கம் இசையின் மொழி என்றும், ஜெர்மன் தத்துவத்தின் மொழி என்றும், பிரெஞ்சு தூதின் மொழி என்றும், இத்தாலியம் காதலின் மொழி என்றும் கூறுவது, ஒருபுடை ஒக்குமெனின், தமிழ் 'இரக்கத்தின் மொழி' எனக் கூறுவது இனிது பொருந்தும். 'பக்தியின் மொழி' எனலுமாம்" என்பர் தனிநாயக அடிகளார். 'பக்தியின் மொழி'யைத் திறம்படக் கையாண்ட பெண்பாலர் இருவர். ஒருவர், சைவ சமயத்தைச் சார்ந்த காரைக்கால் அம்மையார்; இன்னொருவர், வைணவ சமயத்தைச் சார்ந்த ஆண்டாள் நாச்சியார். 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி' எனச் சிறப்பிக்கப் பெறும் ஆண்டாள் பாடிய அருந்தமிழின் பல்வேறு பரிமாணங்களையும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள பன்னிரு கட்டுரைகளும் பாங்குறப் புலப்படுத்தியுள்ளன.

'ஆண்டாள் பாசுரங்களில் இயற்கை' என்பது நூலில் இடம் பெற்றிருக்கும் முதல் கட்டுரை. இதில் முனைவர் மீனாகுமாரி கனகராஜ், ஆண்டாள் பாசுரங்களில் இயற்கையின் எழிலை இறைமையோடு கலந்து தரும் அன்புகலந்த பக்தியின் வெளிப்பாடு காணப்படுவதைத் தக்க சான்றுகள் தந்து நிறுவியுள்ளார்.

'ஆண்டாள் பாடல்களில் பெண்மொழி' என்ற இரண்டாம் கட்டுரையில் முனைவர் வே. சசிகலா, பெண்மொழி பற்றி இன்றைய திறனாய்வாளர்கள் முன்வைக்கும் கருத்துக்களைப் புரட்டிப்போடும் வகையில் ஆண்டாளின் பாசுர மொழி வீரியம் கொண்டு விளங்குவதை எடுத்துக்காட்டியுள்ளார். 'ஆண்டாளின் பாடல்களைப் பெண்பேச்சு எனல்

பொருந்தாது. ஏனெனில் நாயகன் நாயகி பாவனை இங்கில்லை, நாயகியே அவள்தான். எனவே பெண்ணின் பேச்சு போன்றது அன்று. பெண்ணின் பேச்சேதான். அந்தப் பேச்சு வீச்சுடையதாய் இருக்கிறது. எல்லாக் கலாச்சாரக் கட்டுப்பாடுகளையும் தகர்த்தெறிகிறது.' என்னும் ஆய்வாளரின் கருத்து ஆழ்ந்த விந்தைக்கு உரியதாகும்.

முனைவர் பி. பார்வதி படைத்துள்ள 'ஆண்டாள் பாடல்கள் காட்டும் சமுதாயம்' என்னும் மூன்றாம் கட்டுரை, நீராடல், நோன்பு நோற்கும் முறை, திருமண முறைகள், மக்களின் பழக்க வழக்கங்கள் என்னும் நான்கு கோணங்களில் ஆண்டாள் பாசுரங்கள் புலப்படுத்தும் அக்காலச் சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

'ஆண்டாள் பாடல்களில் இலக்கை அடையத் துடிக்கும் அகத்தவம் பாவை நோன்பு. புறத்துவம் காமன் நோன்பு ஆகும்' என்னும் கருத்தின் விரிவாக்கமே முனைவர் ஆ. இசக்கியம்மாளின் 'ஆண்டாள் பாடல்களில் உணர்வு வெளிப்பாடு' என்னும் நான்காம் கட்டுரை ஆகும்.

முனைவர் மு. சுப்புலெட்சுமி 'ஆண்டாள் பாசுரங்களில் இசை' என்னும் தம் கட்டுரையில், ஆண்டாளின் பாசுரங்கள் தமிழிசைக்குச் சிறப்புச் சேர்ப்பதோடு மட்டுமன்றி, தமிழ்ப் பண்பாட்டின் மரபைப் பறை சாற்றுபவைகளாகவும் அமைவதை அழகுற எடுத்துக்காட்டியுள்ளார்.

முனைவர் சீ. சுலோர்மணி பாண்டியன் தம் கட்டுரையில் ஆண்டாள் பாடல்களில் மிளிரும் நாட்டுப்புறப் பாங்கினை நயமுறச் சுட்டிக் காட்டியுள்ளார். 'பண்டிதர் மட்டுமல்லாது பாமரரும் தான் அனுபவித்த இறையின்பத்தை அனுபவிக்க இனிய எளிய சொற்களால் ஆண்டாள் பாடல்களைப் புனைந்துள்ளமை'யை இக்கட்டுரை தக்க சான்றுகள் காட்டி நிறுவியுள்ளது.

முனைவர் மா. களஞ்சியம்மாள் தம் கட்டுரையில் ஆண்டாளின் 'நாச்சியார் திருமொழி'யில் இடம்பெற்றுள்ள அக மரபுகள் குறித்து நுண்ணிதின் ஆராய்ந்துள்ளார். ஆண்டாள் பாடல்களில் பக்தி உணர்வோடு காதல் உணர்வும் இணைந்து இடம்பெற்றிருக்கும் பாங்கினை 'நாச்சியார் திருமொழியில் அக மரபு' என்னும் கட்டுரை அழகுறப் படம்பிடித்துக் காட்டியுள்ளது.

ஆண்டால் பாசுரங்களில் சமய உணர்வின்வழி தமிழ் உணர்வு வெளிப்பட்டிருக்கும் பான்மையை முனைவர் பா. வேலம்மாளின் 'ஆண்டாளும் அழகுத் தமிழும்' என்னும் எட்டாவது கட்டுரை அடையாளம் காட்டியுள்ளது.

திருமதி சு. ஈஸ்வரியின் கட்டுரை திருப்பாவையின் பல்வேறு சிறப்புக் கூறுகளைப் பட்டியல் இட்டுக் காட்டியுள்ளது. 'பெண்ணுக்குத் தளரா முயற்சியும், சாதிக்கும் திண்ணிய நெஞ்சமும் வேண்டும் என்பதைப் பெண்களுக்கு ஆண்டாள் பாசுரம் உணர்த்துகிறது' என இக்கட்டுரை உணர்த்தும் ஆய்வு முடிவு மண்ணுலகில் மங்கையராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் மனங்கொள வேண்டிய வாழ்வியல் பாடம் ஆகும்.

முனைவர் சு.மு. மகாலெட்சுமியின் கட்டுரை ஆண்டாள் பாசுரங்களில் இடம்பெற்றுள்ள தொன்மக் கதைகளை அலசி ஆராய்ந்துள்ளது. புள்ளி விவரங்களின் அடிப்படையில் ஆய்வாளர் இக்கட்டுரையை உருவாக்கியுள்ள திறம் போற்றத்தக்கதாகும்.

திருமதி. மு. மகேஸ்வரியின் கட்டுரை ஆண்டாள் பாசுரங்களில் பயின்றுவரும் தன்னுணர்ச்சிக் கருத்துக்களை விளக்குவதாக அமைந்துள்ளது. இக்கட்டுரையின் மூலம் ஆண்டாளின் பாடல்கள் தன்னுணர்ச்சிப் பாடல்கள் என்பதை நிலைநாட்டியுள்ளார் ஆய்வாளர்.

தெலுங்குத்துறை விரிவுரையாளர் திருமதி. என். கங்காபவானி தம் கட்டுரையில் திருப்பாவையில் வாமன அவதாரம், இராம அவதாரம், கிருஷ்ண அவதாரம் குறித்து இடம்பெற்றிருக்கும் செய்திகளை நிறந்தினிது கூறியுள்ளார். திருப்பாவையில் ஆண்டாள் மற்ற அவதாரங்களைவிட கிருஷ்ண அவதாரம் பற்றிக் கூடுதலாகப் பேசியிரு ப்பதையும் அதற்கான காரணத்தையும் இக்கட்டுரை சுட்டிக்காட்டி இருப்பது பாராட்டத்தக்கது.

நிறைவாக ஒரு கருத்து : 'வீட்டைக் கட்டிப் பார்! கல்யாணம் பண்ணிப் பார்!' என்று உலகநடப்பில் செய்வதற்கு அரிய செயல்களாக இரண்டைச் சுட்டுவார்கள். நாம் இவ்விரண்டோடு மூன்றாவதாக இன்னொன்றையும் சேர்த்து 'வீட்டைக் கட்டிப் பார்! கல்யாணம் பண்ணிப் பார்! கருத்தரங்கு நடத்திப் பார்' எனப் புதுமொழி படைக்கலாம். இன்றைய சூழலில் ஒரு கருத்தரங்கை நடத்திக் காட்டுவது என்பது அரிது; கருத்தரங்கக் கருத்துக்கள் காற்றோடு கரைந்து போய்விடாத வகையில் நூல் வடிவில் தொகுத்துத் தருவது என்பது அரிதினும் அரிது ஆகும். செயற்கரிய இச்செயலைச் சீருடனும் சிறப்புடனும் முடித்துக் காட்டியமைக்காக முனைவர் க. மீனாகுமாரி அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். முத்தாய்ப்பாக, 'மலரும் நினைவு'களாக இருசுவைக் குறிப்புக்கள் : முதலாவது தமிழ் முதுகலை வகுப்பில் (1970-'72) என்னுடன் பயின்ற தோழி முனைவர் மீனாகுமாரி; முனைவர் பட்ட ஆய்வுக்கு யான் கு.ப.ரா.வின் சிறுகதைகளை எடுத்துக்கொள்ள, மீனாகுமாரி ந. பிச்சமூர்த்தியின் படைப்புக்களை எடுத்துக் கொண்டார். இலக்கிய உலகம் கு.ப.ரா.வையும் ந. பிச்சமூர்த்தியையும் 'இரட்டையர்கள்' எனச் சிறப்பித்துக் கூறும். இரண்டாவது, என் திருமணம் என் விருப்பப்படியே 02-06-1976-இல் திருவில்லிபுத்தூரில் ஆண்டாள் திருக்கோயிலில் நிகழ்ந்தது; ஆண்டாள் என் உயிரினும் உணர்விலும் கலந்த ஓர் இலக்கிய ஆளுமை. எனவே, இரட்டிப்பு மகிழ்ச்சியும், மனநிறைவும் ததும்பி நிற்க, 'ஆண்டாள் அருந்தமிழ்' என்னும் இந்நூலுக்கு அணிந்துரை எழுதியுள்ளேன். ஆய்வுக் கட்டுரைகள் படைத்துள்ள அனைத்துப் பேராசிரியப் பெருமக்களுக்கும் என் நெஞ்சார்ந்த நல்வாழ்த்தும் பாராட்டும்!

இரா. மோகன்

# முன்னுரை

**மென்னடை அன்னம் பரந்து விளையாடும்**
**வில்லிப்புத்தூர் உறைவான்தன்**
**பொன்னடிகாண் பதோர் ஆசையினால் என்**
**பொருகயற் கண்இணை துஞ்சா;**
**இன் அடிசிலொடு பால் அமுதூட்டி**
**எடுத்த என் கோலக்கிளியை**
**உன்னோடு தோழமை கொள்ளுவன் குயிலே;**
**உலகளந்தான் வரக்கூடவாய்! - ஆண்டாள்**

பெரியாழ்வார் என்னும் பெருந்தகை, பரமனருளால் பெற்ற பெருஞ்செல்வம் ஆண்டாள் என்னும் அருந்தமிழ்ச் செல்வி. இவள் பூமித்தாயின் அவதாரமாகப் பிறந்தவள் என்று பெரியாழ்வாரே வாயார வாழ்த்தி வளர்ந்தெடுத்த அருமகள். குழந்தைப் பருவத்திலேயே இறைஞானம் வரப்பெற்ற அந்த அருட்கொழுந்தைப் 'பிஞ்சாய்ப் பழுத்தாள்' என்றும் 'அஞ்சு குடிக்கொரு சந்ததி' என்றும் மணவாள மாமுனிகள் புகழ்ந்துரைத்த பெருமகள். அந்த ஞானப் பூங்கொடியுரைத்த அருந்தமிழ்ப் பாசுரங்கள் திருப்பாவையும், நாச்சியார் திருமொழியுமாகும். ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னரே வைணவத்தின் ஆழ்ந்த தத்துவப் பொருள் நுணுக்கங்களை இனிய, எளிய, அழகு தமிழில் எடுத்துரைத்தவள்.

இவ்விரு செந்தமிழ்த் திருப்பாசுரங்களும் மனிதகுலம் வருத்தம் தீர்ந்து வளமுடன் வாழ வழிகாட்டியவையாகும்.

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று பரந்தாமனிடம் உறுதிகூறி பக்தி செலுத்திய பாங்குடையவள் சூடிக்கொடுத்த சுடர்கொடி. பாவைப் பாடல்களும், நாச்சியார் திருமொழியும் தெய்வச் சிந்தனையைத் தெளிவுறக் காட்டும் சுடர் விளக்குகளாய் விளங்குகின்றன. இப்பாசுரங்கள் பரமனின் பாதங்களை விரைந்து பற்றவும், இறையன்பில் திளைக்கவும் திருவருட் பேற்றை ருசிக்கவும் நெறிப்படுத்துகின்றன.

சங்கத் தமிழைப் பயின்று பழகிய பாங்குடைய ஆண்டாள் தன் பாவைப் பாடல்களைச் சங்கத் தமிழ் மாலை என்று அறிமுகம் செய்கிறாள். இக்கருத்திற்கிணங்க சங்க இலக்கியங்களில் காணப்படும் திருமால் குறித்த கருத்துக்களையும் இலக்கிய தொடர்களையும், சொற்களையும் தன் பாசுரங்களில் ஆண்டாள் பலகாறும் கையாண் டுள்ளமையை அறியலாம்.

மனித மனங்களின் இருள் உணர்வு போக்கி, அருளுணர்வு ஒளிவிட ஆண்டாள் ஏற்றிவைத்த பாசுரதீபம், காலங்களால் மறையாத

தெய்வீக இன்பத்தை மனிதகுலம் உணரவும், உணர்த்தவும் வகை செய்யும் ஆன்மீகச் சுடராக ஒளிவீசி விளங்குகிறது.

அந்த சுடர் ஒளியின் பல்வேறு பரிமாணங்களை உள்ளார்ந்த உணர்வோடு ஆராய்ந்தறியும் நல்வாய்ப்பைத் திருமலை திருவேங்கடவனின் திருவருளால் பெற்றது குற்றாலம், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி. எம் கல்லூரியின் தமிழ்த்துறை பேராசிரியர்கள் அனைவரின் ஒன்றிணைந்த கரங்களும் நெஞ்சமும், எடுத்த செயலை இனிதே முடிக்கும் ஆற்றலுடையவை என்பதை நிரூபிக்க அரியதொரு வாய்ப்பாக ஆண்டாள் பாசுரக் கருத்தரங்கம் ஒன்று நடைபெற்றது. ஆழ்வார் திவ்ய பிரபந்த திட்டம் அவ்வாய்ப்பினைத் தந்தது. இதற்கு வழிவகுத்தவர் திவ்ய பிரபந்த திட்டத்தின் சிறப்பு அதிகாரி முனைவர் திரு. சர்வோத்தம ராவ் அவர்கள் ஆவார். அவர் தம் ஊக்கம் மிகுந்த செயல்பாட்டாலும், மதுரை காமராசர் பல்கலைக்கழக தெலுங்கு மொழித் துறை பேராசிரியர் முனைவர் திரு.ஜெயபிரகாஷ் அவர்களின் ஒத்துழைப்பாலும், 3-8-2005-ஆம் நாள் இக்கருத்தரங்கம் மிகச் சிறப்பாக எம் கல்லூரியில் நடைபெற்றது. அக்கருத்தரங்கில், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் வீதிதோறும் தேடிச் சென்று தன்வயதொத்த பெண் மக்களைப் பரந்தாமனின் அருள்பெறக் கூவியழைத்த பாவைப் பாடல்களையும், பரமன் வயப்பட்ட அவளது ஆழ்ந்த நேசத்தை வெளிப்படுத்திய நாச்சியார் திருமொழிகளையும் தம் நெஞ்சில் நிறுத்தி, அவரவர் கண்ட கருத்துவ நலனை தாம் பெற்ற இலக்கிய அனுபவங்களைக் கட்டுரை மணிகளாய்க் கோர்த்தளித்தனர் எம் தமிழ்த்துறை பேராசிரியத் தோழியர்கள்.

கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட கட்டுரைகளை நூல் வடிவம் பெறுவதற்கான நல்லதொரு வாய்ப்பையும் திருமலை திருப்பதி தேவஸ்தான ஆழ்வார் திவ்யபிரபந்த திட்டம் மனமுவந்தளித்தமை எமக்கு கிடைத்த மிகப்பெரும் பேறாகும்.

ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, பேராசிரியப் பெண் மக்களாகிய எமக்கு, தன் தீந்தமிழ்ப் பாசுரங்களை ஆய்வுசெய்ய வாய்ப்பளித்த பெரியாழ்வார் பெற்றெடுத்த கோதைப் பெருமாட்டியை நன்றி சொல்லி வணங்குகின்றேன். இத்தகைய அரிய வாய்ப்பினைத் தந்து ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரியின் தமிழ்துறைக்குப் பெருமை சேர்ந்த திருமலை திருப்பதி தேவஸ்தான ஆழ்வார் திவ்ய பிரபந்த திட்டக் குழுவிற்குக் கல்லூரி முதல்வர் என்ற நிலையில் என் நெஞ்சார்ந்த நன்றியைச் சமர்ப்பிக்கின்றேன். எம் தமிழ்த்துறை தோழியர் இன்னும் இதுபோன்ற பல ஆய்வு நூல்களை மேற்கொண்டு நூல் பல வெளியிட வாழ்த்துகின்றேன்.

அன்பிற்கினிய

**க. மீனாகுமாரி**

## உள்ளே



# ஆண்டாள் பாசுரங்களில் இயற்கை

**உ**லக உயிர்களையும் உலகளந்தானையும் தம் பக்தித் திறத்தால் ஆண்டதால் ஆண்டாள் என்று பெயர் பெற்ற கோதை நாச்சியார், எம்பெருமானின் இயல்புகளையும் அவனது உத்தமக் குணங்களையும் இயற்கையோடும் உலக நடப்போடும் கலந்து கலந்து உயிர்களான மக்களுக்கு ஊட்டியவர். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் அருந்தமிழ்ப் பாசுரங்களாகிய பாவையும், நாச்சியார் திருமொழியுமாகிய இரண்டு நூல்களிலும், இயற்கையில் எழிலை இறைமையோடு கலந்து தரும் அன்புகலந்த பக்தியின் வெளிப்பாட்டைக் காணலாம்.

பொதுவாக மனிதனின் வாழ்வு இயற்கையோடு ஒன்றியது. மானுடச் செயல்பாடுகள் அனைத்திலும் இயற்கையின் பங்கும் பணியும் அளவிட இயலாதது. பிறப்பால் தன்னை இயற்கைக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளும் மனிதன், தன் எண்ணங்களுக்கும் இயற்கையின் வழி முக்கிய இடம் தந்தான். அந்த வகையில் மனிதனின் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் பின்னணியாக இயற்கை சங்ககாலம் தொட்டு பல கவிஞர்களால் கையாளப்பட்டு வந்துள்ளமையைக் காணலாம்.

மனிதனுக்கும் இயற்கைக்குமுள்ள தொடர்பு தாயின் தொப்புள் கொடிக்கும் குழந்தைக்குமான தொடர்பு போன்றது என்பார் கவிஞர் ஒருவர். மனித வாழ்விலிருந்து பிரித்தறிய இயலாத இயற்கையின் எழிற் கோலங்களை - அதன் அற்புதங்களை, மாலவன் மீதுள்ள மையலால் பாடிப் பரவசப்பட்ட ஆண்டாள், பலவகைகளில் தன் அமுத வார்த்தைகளால் சித்திரிக்கும் பாங்கினைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1. இயற்கையின் காட்சியழகை வருணிப்பது.
2. இயற்கையின் அழகைச் சொல்லிக் குறிப்பாகக் கருத்தைத் தெரிவிப்பது.
3. இயற்கையின் இறைவனுடன் இணைத்துக் காண்பது.
4. இயற்கையை உவமையாகப் பயன்படுத்துவது.

### 1. இயற்கையின் காட்சியழகை வருணிக்கும் பாங்கு :

பொழுது புலரும் விடியலின் காட்சிகளை, அஃறிணை உயிர்களின் வாழ்வுப் படலத்தை உயிர் நீராகிய மழையின் பொழிவை ஆண்டாள்

தன் பாசுரங்களில் பக்தியுணர்வோடு எடுத்துரைத்துள்ள பாங்கு நினைந்து போற்றுதற்குரியது.

**'மார்கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாள்'** என்று கோதையின் பாவைப் பாடலின் தொடக்கமே இயற்கையின் நலம் செறிந்த அழகுக் காட்சியை முன் வைக்கிறது. தன்னையொத்த பெண்டுகளையெல்லாம் பாடலால் தட்டியெழுப்பும் சுடர்க்கொடி விடியலின் பொலிவைப் பல கோணங்களில் எடுத்துரைக்கக் காணலாம். பொதுவாக விடியலின் வருணனை ஆண்டாளின் பாவைப் பாடல்களில் சிறப்பிடம் பெறுவது குறிப்பிடத்தக்கது.

தன் தோழியரைப் பாவை நோன்பு நோற்க அழைக்கப் புறப்பட்டவளின் மனம் விடியற் பொழுதில் இயற்கையின் ஒவ்வொரு கூறும் எவ்வண்ணமாய் இயங்குகின்றதென்பதை வார்த்தை வண்ணங்கள் குழைத்து வடித்த சித்திரமாய்த் தீட்டிக் காட்டுகிறது. முதலில் வாகைக் காட்சியாக, 'வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று' என்று நிலவு மறைந்து கதிரவன் உதயமாவதற்கு இடைப்பட்ட பொழுதில் உலகுக்கு ஒளியூட்டும் வெள்ளி என்ற கோள்மீனின், உதயத்தைச் சுட்டுகின்றாள்.

அதைத் தொடர்ந்து, பறவைகள் மனித உயிர்களைத் தட்டியெழுப்பும் இசைப் பணியைச் செய்வதுபோல அவற்றின் ஒலி வடிவக் காட்சியை மிக நுட்பமாகச் சித்திரிக்கின்றாள் ஆண்டாள்:

**'கீசு கீசென்று எங்கும் ஆனைச் சாத்தன் கலந்து**
**பேசின பேச்சரவம் கேட்டிலையோ?'**

என்று சொல்லி, அரிய ஆனைச் சாத்தன் என்ற பறவைக் கூட்டத்தின் விடியற்காலப் பேச்சொலியாகிய பேரொலியை வார்த்தைகளில் வடித்துக் காட்டும் ஆண்டாளின் சித்திரிப்பு அலாதியானது. மேலும் கோழி அழைத்தலும், குயில் கூவுதலும் விடியலின் ஒலி மொழிகளாய் வெளிப்படுவதை,

**'வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் - மாதவிப்**
**பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்'**

என்று இயற்கையின் ஓர் அங்கமாய் விளங்கும் பறவைக் கூட்டத்தின் ஒலியமுதை விடியலின் வருகைக்குக் கட்டியம் கூறும் அறிவிப்பு ஒலிபோல் காட்டும் ஆண்டாளின் இயற்கையின் ஒலியுணரும் நுட்பம் வியக்கத்தக்கது. இவ்வாறு வானத்தின் ஒளிச்சுடரையும், பறவைகளில் ஒலி மொழியையும் ஒன்று சேரத் தான் கண்ட விதத்தை ஒளியும் ஒலியுமாய் விடியலின் அற்புதம் மனித குலத்தின் வாழ்வுக்கு வழி காட்டும் பாங்கில் இயற்கையின் அருமைப்பாட்டை

ஆண்டாள் எடுத்துரைக்கக் காணலாம். மேலும் பறவைகளின் வாழ்விடத்தோடு அவற்றின் அருமைப்பாட்டையும் பாராட்டியுரைப்பதாக நாச்சியார் திருமொழியில், 'மென்னடை அன்னம்' மற்றும் 'கோலக்கிளி' என்று பாராட்டும் ஆண்டாள் தன் மனக்கருத்தைக் கண்ணனிடம் கூறிவரத் தூதாக அனுப்பும் குயிலைப் பலபட வருணித்துக் கூறுவதும் குறிப்பிடத்தக்கது.

**'புன்னைக் குருக்கத்தி ஞாலல் செருந்திப் பொதுப்பினில் வாழும் குயிலே'**

என்றும்,

**'தேங்கனி மாம்பொழிற் செந்தளிகோதும் குயில்'**

என்றும் குயினின் வாழ்வுச் சூழலை வண்ணப்படமாய்ச் சித்திரிக்கின்றாள்.

அடுத்து வாய்திறந்து பேசாத மலர்க்கூட்டத்தின் அழகு முகங்களை அறிமுகம் செய்கிறாள் ஆண்டாள், "செங்கழுநீர் வாய் நெகிழ்ந்தும் ஆம்பல்வாய் கூம்பியதுமாய்" அமைந்தி காட்சியைச் சுட்டுகிறாள். மேலும் கோங்கு மலர்களின் மலாச்சியை நாச்சியார் திருமொழியில் எடுத்துரைக்கக் காணலாம்.

விடியற்பொழுதில் மேய்ச்சலுக்குப் புறப்படும் கால்நடைகளின் காட்சியைக்,

**'கீழ்வானம் வெள்ளென்னு எருமைச்சிறுவீடு**
**மேய்வான் பரந்தனகாண்'**

என்று கிழக்கு வெளுக்கும் வேளையும், மேய்ச்சலுக்குச் செல்லும் எருமைகளின் பயணமும் ஒரு காட்சிப் படமாகப் பாவையின் பாசுரம் சித்திரிக்கின்றது.

## உ. இயற்கையின் அழகைச் சொல்லிக் குறிப்பாகக் கருத்தைத் தெரிவிப்பது

ஆயர்பாடியின் வளத்திற்குக் காரணமான **'வள்ளற் பெரும் பசுக்கள்'** பால்வளம் பொழியும் அரும்பாங்கினை இயற்கையின் ஓர் அற்புதக் கொடையாகச் சுட்டுகின்ற ஆண்டாள்,

**'கனைத்தினங் கற்றெருமை கன்றுக்கு இரங்கி**
**நினைத்து முலைவழியே நின்று பால் சோர**
**நனைத்தில்லம் சேறாக்கும்'**

என்று வீட்டு நலத்துடன் நாட்டுநலம் காக்கும் பசுக்களின் பாலமுதச் செல்வத்தால், இயற்கையின் பங்களிப்பு, ஆயர்குல மக்களின்

குறையொன்றுமில்லாத செம்மாந்த வாழ்வுக்குக் காரணமாக அமைவதை ஆண்டாள் குறிப்பாக உணர்த்தக் காணலாம்.

அடுத்து இயற்கையின் அற்புதக் காட்சிகளில் பெரும்பங்காற்றும் வான் மழையின் மாட்சிமையை ஆண்டாள் தன் பாசுர மொழிகளால் பேசக் காணலாம்.

பாவை நோன்பிற்கான காரணங்களுள் ஒன்று மழைவளம் பெறலாகும். பனிதகுலத்தின் வாழ்வு நலம்காக்கும் பருவமழை தவறாமல் பெய்து நன்மைகள் பல பெருக வேண்டுமென்பது ஆண்டாளின் விருப்பம். இயற்கையின் ஒவ்வொரு அங்கமும் இடையூறின்றி மேன்மையடைந்தால்தான் மனிதகுலத்தின் வாழ்வு சிறக்கும். இதில் மழையின் பங்கு பெரிது. **'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்வதால் பயிர்வளம் பெருகும், கால்நடைகள் மேய்ச்சலைப் பெற்று பாலமுதைப் பெருக்கும்'** என்று முல்லை வனத்தின் வாழ்வைக் குறிப்பாக உணர்த்துகின்றாள். மேலும் **'ஓங்குப் பெருஞ்செந்நெல் ஊடுகயலுகளைப், பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப'** என்று செந்நெல் பயிர் நிறைந்த வயல்களில் கயல்மீன்களின் துள்ளலும், குவளை மலர்களில் வண்டு மொய்த்திருப்பதும் மருதவளத்தை ஆண்டாள் வார்த்தை வண்ணங்களால் வடித்துள்ளமையைக் காணலாம்.

இவ்வாறு முல்லை மற்றும் மருத வளங்களைச் சில வரிகளில், சுட்டி, இயற்கையின் இயக்கத்தால்தான் மனித வாழ்வு சிறக்கும் என்பதைக் குறிப்பாகச் சுட்டும் வகையில் மழையின் பாங்கினைப் பேசுகின்றாள். மேலும் இத்தகைய நல்மழை தந்து காக்கும் மேகங்களைத்தான் நாச்சியார் திருமொழியில் பல அடைமொழிகள் தந்து ஆண்டாள் சிறப்பிப்பது குறிப்பிடத்தக்கது. சான்றாக,

**'மாமுத்த நிதி சொரியும் மாமுகில்காள்'**
**'தண்முகில்காள்'** என்று பாராட்டியுரைப்பதை அறியலாம்.

## 3. இயற்கையை இறைவனுடன் இணைத்துக் காண்பது :

இயற்கையின் அழகு மிக அற்புதக் காட்சிகளை, மாலவனின் பேரழகோடு ஒப்பிட்டுக் கூறும் ஆண்டாளின் பாசுரப் பாடல்கள், இயற்கையும் இறைமையும் ஒன்று என்ற உணர்வைத் தெளிவுபடுத்தக் காணலாம். சான்றாக,

**'ஆழிமழை கண்ணா ஒன்றுநீ கைகரவேல்**
**ஆழியுள்புக்கு முகந்துகொடு ஆர்த்தேரி,**
**பாழியந்தோளுடை பத்மநாபன் கையில்**
**ஆழிபோல் மின்னி, வலம்புரி போல் நின்றதிர்ந்து**
**தாழாதே சாரங்கம் உதைத்த சரமழைபோல்'**

வாழ உலகினில் பெய்திட வேண்டுமென்று மழையை நோக்கி வேண்டுவதுபோல அமைந்த பாவைப் பாடலில் மேகம், இடி, மின்னல், மழையாகிய மழைக்கான இயற்கையின் தொடர் நிகழ்ச்சிகளை, கண்ணனின் திருக்காட்சி இயக்கத்துடன் ஒப்பிட்டுக் காணும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

கண்ணன் தன் தோழியருடன் பிருந்தாவனத்தில் விளையாடிய காட்சியைத் தான் கண்ட விதமாக ஆண்டாள்,

**'கணங்கோள் மின்மேகம் கலந்தாற்போல'**

என்று கூறுகின்றாள். அதாவது கருத்த மழைமேகம் மின்னலுடன் ஒருங்கே தோன்றியதுபோல தன் கறுத்த மேனியில் வனமாலை திகழக் கண்ணன் விளையாடிய காட்சியை இயற்கையின் பொலிவோடு இறைமையை ஒப்பிட்டுப் பேசுவதைக் காணலாம்.

## 4. இயற்கையை உவமையாகப் பயன்படுத்துவது :

இயற்கையின் வண்ணம் நிறைந்த வடிவழகை, தன் பாவை மற்றும் நாச்சியார் திருமொழிப் பாசுரங்களில் ஆண்டாள் மிகுதியும் உவமையாகப் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**'விண்ணீல மேலாப்பு விரித்தாற் போல மேகங்காள்'**

என்று வானத்தின் மேகக் கூட்டம் நீலத்திரை விரித்தது போலக் காணப்படுவதாகவும்,

**'கானமயில்காள்! கண்ணபிரான் திருக்கோல்'**

போன்று அணிமா நடம் பயின்றாடுகின்றீர் என்று மயில்கள் நடமிடும் காட்சியைக் கண்ணனின் அழகோடு ஒப்பிட்டுக் கூறுவதும்,

**'செங்கண் நாண்மலர் மேல் தோன்றுகளும் அன்னம்'**

என்றும், **"தடவரையின் மீதே சரற்காலச் சந்திரன் இடையுவரவில் வந்து எழுந்ததுபோல"** என்றும் கண்ணனின் கையிலுள்ள வெண்சங்களின் இருப்பை ஆண்டாள் வருணிப்பதையும் உவமைகள் வழி காணலாம். அதாவது தேனருந்தும் அன்னப் பறவையின் வடிவாகவும், மலையிடை எழுகின்ற பௌர்ணமி நிலவின் ஒளி வடிவாகவும் மாலவனின் வெண்சங்கு விளங்குவதாக ஆண்டாள் வருணிக்க காணலாம்.

இத்தகைய அற்புதனின் நினைவால் தளரும் தன் மெலிவைச் சுட்டுவதற்கு ஓர் உவமையைக் கூறுகின்றாள் ஆண்டாள்.

**'நீர்க்காலத் தெருக்கில் அம்பழவிலைபோல் வீழ்வேன்'** என்கிறாள். அதாவது மழைக்காலத்தில் எருக்கம் பழுப்புக்குள் இற்று வீழ்வது போல தான் ஒசிந்து வீழ்வதாக, மாவலன் மீது கொண்ட மையலால் ஏற்பட்ட உணர்வுக்கு இயற்கையின் நிகழ்வை உவமையாக்குகிறாள் ஆண்டாள்.

மேலும் கண்ணன்பால் தனக்கு ஏற்பட்ட காதலால் விளைந்த நலிவையும் மெலிவையும் அறியாதவன் போலிருக்கின்ற அவனைப் போலவே இயற்கையில் அழகுக் கோலமும் தம்மை வருத்துவதாகக் குற்றம் சாட்டும் முறையில்,

**'பைம்பொழில்வாழ் குயில்காள்**
**மயில்காள்! ஒண்கருவிளைகாள்!**
**வம்பக் கனங்கனிகாள்!**
**வண்ணப்பூவை நறுமலர்காள்!**
**ஐம்பெரும் பாதகர்காள் அணிமாலிருஞ்**
**சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம்,**
**உங்களுக்கு என் செய்வதே?'**

என்று பழிக்கின்றாள். அதாவது, பரந்த சோலையில் வாழுகின்ற குயில்களே, மயில்களே, கருவிளை மலர்களே, புதிய கானக்கனிகளே! அழகிய நிறமும் மணமும் பொருத்த காயாம் பூக்களே! நீங்கள் ஐவராகிய பாதகங்கள், கண்ணனின் கருத்த நிறைத்தெயொத்து விளங்குவது என்னைத் துன்புறுத்தவோ? என்று வினவுகிறாள்.

கண்ணனின் எழிற்கோலப் பேரழகைக் கண்டு வியப்பதாகவும், கோபத்தால் சினப்பதாகவும் இக்கருத்து அமைகின்றது.

மேற்கண்டவாறு இயற்கையின் அழகில் வசப்பட்டு, அதன் ஒவ்வொரு கூறுகளின் நுட்பத்திலும் ஆழ்ந்து, அதன் பயன்களில் தெளிந்து, இயற்கையின் அழகுருவே இறைமையின் வடிவமென்று உணர்ந்து போற்றுகின்றாள் ஆண்டாள். அவளது பாசுரங்களில் இயற்கையோடியைந்த மானுடத்தின் வாழ்வு நலமும் இயற்கையின் பயன்பாடும், இறைமியின் எழிலுருவும் மாதவன்பால் ஆண்டாள் கொண்ட மாறாத அன்புகலந்த பக்தியில் லயித்த பாசுர மொழியில் இயற்கைதான் வாழ்வு, இயற்கைதான் இறைமை என்ற கொள்கை வெளிப்படக் காணலாம்.



# ஆண்டாள் பாடல்களில் பெண்மொழி

பதினெட்டாம் நூற்றாண்டு தொடங்கி மேலை நாடுகளில் வெகுவிரைவாக, அனைவரது கவனத்தையும் ஈர்க்கும் விதத்தில் வளர்ந்து வரும் ஒரு கருத்துக் கோட்பாடு **'பெண்ணியம்'** எனலாம். பெண்கள் தங்களைப் பற்றிச் சிந்திக்கவும், பேசவும், எழுதவும் முற்பட்ட போக்கினை உருவாக்கிவிட்ட 'பெண்ணியம்' ஓர் இயக்கமாக மாறிவிட்டது. இதன் விளைவாகப் பெண்ணியம் பற்றிய ஆய்வுகள் பெருகி வருகின்றன. கருத்துருவம் பற்றியும், தந்தைவழி சமூக ஆய்வு சார்ந்தும், பெண்மையவாத நிலையிலும், மறுபார்வை முறையிலும் பல பெண்ணியத் திறனாய்வுகள் நிகழ்ந்து வருகின்றன.

பெண்ணியத்தை எலைன் சோவால்ட்டர் இலக்கிய அடிப்படையில் ஆராய்ந்தவர் ஆவார். அவர் குறிப்பிடும் மூவகைப் பாகுபாடுகளுள் பெண்ணை இயற்கையின் உருவாக்கம் என்று கருதி ஆராயும் நிலை என்பது குறிப்பிடப்படுகிறது. பெண்மையைத் திறனாய்வாளராகக் கருதப்படும் எலைன் சோவால்ட்டர் ஆண் மேலாண்மையற்ற பெண்ணியம் உருவாக வேண்டும் என்று கருதுகிறார். இதற்கு அடிப்படைத் தேவை பெண் தன்னைத்தானே உணர்தலும், உணர்ந்ததைத் தான் நினைத்தபடி தன் மொழியில் அவளே வெளிப்படுத்துவதும் ஆகும் என்கிறார். **'கைனோகிரிட்டிசிசம்'** என்ற புதிய சொல்லாடலை உருவாக்கியவர் இவரே. இது ஒருபுறமிருக்க, தற்போதைய திறனாய்வாளர்களிடையே பழைய இலக்கியங்களைப் பெண்ணியத் திறனாய்விற்கு உட்படுத்தி விமரிசனம் செய்வதும், அதன் வழிப் பெண்ணின் எழுத்தை ஆராய்வதும் ஆகிய ஆய்வுகளை நிகழ்த்தும் போக்கும் உள்ளது. இக்கருத்துக்களின் அடிப்படையில் ஆண்டாள் பாடியுள்ள நாச்சியார் திருமொழிப் பாசுரங்கள் இங்கு ஆய்வுப் பொருளாகின்றன. கேட்மில்லட் என்ற பெண்ணியவாதியும் பழைய இலக்கியங்களைப் பெண் நிலைநோக்கில் அணுகும் திறனாய்வு முறையை வலியுறுத்துகிறார் என்பதும் இவண் குறிப்பிடத்தக்கது.

பெண்ணின் பேச்சாற்றல் தனிச்சிறப்புடையது. ஒரு மொழியை ஆண் குழந்தையைவிடப் பெண் குழந்தைதான் மிக வேகமாகக் கற்றுக் கொள்கிறது. மொழியின் மிக நுட்பமான சிக்கலான அமைப்பினைக் குறுகிய காலத்திற்குள் புரிந்து கொண்டு மிகச் சரியாகப் பயன்படுத்தும் போக்கையும் பெண் குழந்தைதான் முதலில் தெரிந்து கொள்கிறது. (க.பஞ்சாங்கம், பெண்மொழி புனைவு, ப.68) ஆனால் பெண்ணின்

மொழி பற்றிய மாறுபட்ட கருத்துக்களும் உள்ளன. டாலேஸ்பெண்டா என்னும் திறனாய்வாளர், ஆண், பெண் மொழி பற்றிய கருத்துக்களை மிக அழுத்தமாக முன் வைக்கிறார். ஆதிக்கமொழி ஓரினத்தவரின் உணர்வுகளைக் கட்டுப்படுத்திவிடும் என்று குறிப்பிடும் அவர் பெண்களின் மொழி ஓரங்கட்டப்படுகிறது என்றும் கருத்துத் தெரிவிக்கிறார். ராபின்லாக்கோப் என்னும் அறிஞர் பெண்ணின் மொழி பலவீனமானது என்றும், அதிகாரத் தொனியற்று இருப்பதாகவும் கருதுகிறார். இந்த ஆய்வாளர்களின் கருத்துக்களை மறுதலிக்கும் வகையில் ஆண்டாளின் பாசுர மொழியும் அதன் கருத்துக்களும் அமைகின்றன. பெண்மொழி பற்றிய திறனாய்வாளர்கள் கருத்தைப் புரட்டிப்போடும் வகையில் ஆண்டாளின் பாசுர மொழி வீரியம் கொண்டு விளங்குகிறது.

## முந்தைய ஆய்வுகள்

ஆண்டாளின் பாசுரங்கள் அவை படைக்கப்பட்டுள்ள பாங்கினாலேயே பல பெண்ணிய ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் **'தமிழ் வரலாற்றுப் படிமங்கள் சிலவற்றில் ஒரு பெண் நிலை நோக்கு'** என்ற செல்வி.திருச்சந்திரனின் ஆய்வும், **'ஆண்டாளின் இறைமை யாக்கம் பெண்ணியப்பார்வை'** என்ற சு. வேங்கடராமனின் ஆய்வும் குறிப்பிடத்தக்கவை. இவைதவிரப் **'பெண்மொழி' 'பெண் பேச்சு'** என்ற பொருண்மைகளின் அடிப்படையில் கருத்துரைக்க முயலும் எவராலும் ஆண்டாளைத் தவிர்த்து விட்டுச் செல்ல முடியவில்லை. அவ்வகையில் முனைவர் மீனாட்சி முருகரத்தினம் **'பெண்பேச்சு'** என்ற கட்டுரையிலும், க.பஞ்சாங்கம் **'ஆணின்மொழி'** என்ற கட்டுரை யிலும் மு.சுதர்சன் **'சங்கப் பெண்பாற் புலவர்களின் பண் அடையாளப் பதிவுகள்'** என்னும் கட்டுரையிலும் ஆண்டாள் பாசுரங்கள் பற்றியும், அவற்றில் கையாளப் பட்டுள்ள மொழி பற்றியும் சுட்டிக்காட்டுகின்றனர்.

பெண்ணின் எழுத்து பலத்த விவாதத்திற்கு உட்படுத்தப்பட்டு வரும் இன்றையச் சூழலில், பெண்மொழிபற்றிய பல கருத்துக்கள் முன்வைக் கப்படும் காலகட்டத்தில் ஆண்டாள் பாசுரங்களில் கையாளப்படும் மொழியில் **'சுயம்'** இருப்பதை உணர முடிகிறது. அப்பாசுரங்களில் காணப்படும் மீறிய மரபுகளையும், அவற்றின்வழி புலப்படும் ஒரு பெண் படைப்பாளியின் மொழிப் பயன்பாட்டையும் இக்கட்டுரை விளக்க முற்படுகிறது.

நமது பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியம் காதலில் பெண் நடந்து கொள்ள வேண்டிய முறைக்கு வரையறை வகுத்துள்ளது. அதன்படி காதலில் பேசுவதற்குப் பெண்ணுக்கு அனுமதி இல்லை. ஆண்தான் பேசலாம். சொல்லுதல், சொல்லிச் சொல்லி இன்புறல் ஆகியவை ஆணுக்கே உரியன (பொருள்.42) தன்னிலை உரைத்தல்

நலம் பாராட்டுதல், மெலிவை விளக்குதல் யாவும் ஆணின் வெளிப்பாடுகளாக மட்டுமே அமையலாம். காதல் வேட்கையினை மொழிப்படுத்திப் பேசும் உரிமை தொல்காப்பியம் ஆணுக்கு மட்டுமே வழங்கியுள்ளது. களவின் உணர்வுகளை இரு பாலாருக்கும் பொதுமைப் படுத்திய தொல்காப்பியர் அச்சம், நாணம், மடம் என்ற முப்பண்புகளும் எக்காலத்திற்கும் பெண்டிர்க்கு உரியன என்றும், அதனால் குறிப்பாலும், சூழ்நிலையாலும் மட்டுமே, தன் காதலை, விருப்பத்தைப் பெண் தெரிவிப்பாள் என்கிறார். பெண் நேரடியாகத் தன் காதலை வெளிப்படுத்தக் கூடாது என்பது கருத்து.

**'நாணும் மடனும், பெண்மைய ஆதலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்பட வாரா அவள் வயினான'** (தொல்.1054)

என்பது நூற்பா. களவியல் முழுவதிலும் பெண் பேசுவது கூடாது என்பதனைத் தொடர்ந்து வலியுறுத்துகிறது தொல்காப்பியம். 'சொல் எதிர் மொழிதல் அருமைத்து' (தொல்.1056) என்றும்,

**'தன்னுறு வேட்கை கிழவன் முன் கிளத்தல்**
**எண்ணுறுங் காலைக் கிழத்திக்கு இல்லை'** (தொல்.1064)

என்றும் பெண்ணின் பேச்சு மறுதலிக்கப்படுகிறது. தன் காதல் உணர்வுகளைத் தன் வாயினால் பெண் எடுத்துரைத்தல் மரபன்று என்று இலக்கணங்கள் வரையறை செய்ய, ஆண்டாள் அவை அனைத்தையும், மீறியுள்ளாள் என்பது கண்கூடு. வாய்வெறுப்பு, உண்ணலுறாமை, உள்மெலிவு பற்றி ஆண்டாள் வெளிப்படையாகப் பேசுகிறாள்.

நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் திருமால் மேல் தான் கொண்ட காதலை விவரமாக எடுத்துக் கூறுவது மட்டுமின்றி, அவனை மணக்க விரும்புவதையும் பதிவு செய்கிறாள். வைணவ உரை மரபில் **'மணிவல்லிபாஷை'** என்ற ஒன்று சுட்டப்படுவது உண்டு. பாடலைப் பாடுவோர் ஆணாக இருந்தாலும் பெண்ணின் மன உணர்வுகள் பேசப்படுவதால் அது பெண் பேச்சு எனப்படும். ஆண்டாளின் பாடல்களைப் பேண்பேச்சு எனல் பொருந்தாது. ஏனெனில் நாயகன் நாயகி பாவனை இங்கில்லை. நாயகியே அவள்தான். எனவே பெண்ணின் பேச்சு போன்றது அன்று. பெண்ணின் பேச்சே தான். அந்தப் பேச்சு வீச்சுடையதாய் இருக்கிறது. எல்லாக் கலாச்சாரக் கட்டுப்பாடுகளையும் தகர்த்தெறிகிறது. அத்தனை கட்டுமானங்களையும் உடைத்தெறிகிறது. **புருஷன் புருஷனைக் கண்டு ஸ்நேகிப்பதிலுங் காட்டில் ஸ்திரி புருஷனைக் கண்டுள் நேசிக்கை** வேறுபட்டது என்ற பெரியவாச்சான் பிள்ளையின் கூற்றும் இங்கு பொருத்திப் பார்க்கத்தக்கது.

## காதல் வெளிப்பாடு

காதலரைப் பெண்டிர் புகழ்வதில்லை. புகழக்கூடாது. இது மரபு. மேலும் தம் உள்ளத்து எழும் காதலை அவர்கள் வெளிப்படையாகச் சொல்லவும் கூடாது. ஆண்டாள் இந்த மரபிற்குப் புறம்பாகத் தன் காதலனை வாயாரப்புகழ்வது மட்டுமின்றித் தன் காதலைப் பிறர் அறிய வெளிப்படையாக எடுத்துக் கூறுகிறாள். காம தேவனிடம் தன் காதல் கைகூடவேண்டும் என்று வேண்டுகிறாள்.

**'கருவுடை முகில் வண்ணன் காயாவண்ணன்**
**கருவிளை போல் வண்ணன் கமல வண்ணன்'** (1.6)

என்று தன் காதலனைப் பாராட்டுகிறாள். **'வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை'** (1.1) என்று திருமாலின் திருக்கரத்தைப் புகழ்வதுடன், **'புள்ளின் வாய்ப்பிளந்தான்'** (1.2) **'தேசமுன்னளந்தவன்'** (1.7) **'திரிவிக்கிரமன்'** (1.7) என்று அவனுடைய அவதாரச் சிறப்புக்களையும் விவரித்துரைக்கிறாள். **'கோவிந்தன்', 'வேங்கடவாணன்', 'கேசவநம்பி'** என்ற பல திருநாமங்களைக் கூறியும் ஆண்டாள் தன் அகக் காதலை வெளிப்படுத்துகிறாள். காதலால் தன் வாய்ப்புறம் வெளுத்ததாகக் கூறும் அவள் ஒரு பொழுது மட்டும் உண்டு நோன்பு நோற்பதாகக் காமனிடம் உரைக்கிறாள்.

**'சுவரில் புராண நின்பேரெழுதிச்**
**சுறவ நற்கொடிகளுந் துரங்கங்களும்**
**கவரிப் பிணாக்களுங் கருப்பு வில்லும்**
**காட்டித்தந்தேன் கண்டாய் காமதேவா'** (1.4)

என்று காமனை வாழ்த்திப் பாராட்டும் ஆண்டாள் அவரைப் பிராயந் தொடங்கியே தான் திருமாலைக் காதலித்து வருவதாகக் குறிப்பிடுகின்றாள். காதலால் தன் வாய்ப்புறம் வெளுத்தாகக் கூறும் அவள் ஒருபொழுது மட்டும் உண்டு நோன்பு நோற்பதாகக் காமனிடம் உரைக்கின்றாள். **'காமதேவனை'** அழைத்து அழைத்துப் பாடும் பாசுரங்கள் யாவும் காதல் வெளிப்பாடே. திருமால் தன் உள்ளம் புகுந்து, தன்னை நாளும் நலிவிப்பதாகவும், எனவே தன் உயிரைப் போக்கிப் போக்கி, அவன் கூத்தாட்டுக் காண்பிப்பதாகவும், வெளிப்படையாக உரைக்கிறாள். அவன் மேல் தான் கொண்ட காதலால் எலும்புகள் உருகுவதாகவும், நெடுங்கண்கள் துயிலை இழந்ததாகவும் பாடுகிறாள். அதனால் துன்பம் என்னும் கடலிலேயே தான் எப்போதும் இருப்பதாகவும், அக்கடலிலிருந்து மீண்டு கரையேற வைகுந்தன் என்னும் ஓர் தோணி இல்லாமல் தான் உழல்வதாகவும் ஆண்டாள் பாடுகிறாள். திருமாலின் நினைவு அலைக்கழிப்பதால் தன் அழகை இழந்ததாக வருந்தும் அவள்

'அணிதுழாய்த் தார்க்கு' ஒடும் தன் நெஞ்சினைப் பல பாசுரங்களில் சுட்டிக்காட்டுகிறாள். இனி நாணமுறுவதால் பயனில்லை என்னும் எல்லைக்கே அவள் செல்லுவது காதலை முழுவதும் வெளிப்படுத்திவிட அவள் எடுத்த முடிவாகும். 'வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' 'வேங்கடவாணன் என்னும் விளக்கினிற் புக என்னை விதிக்கிற்றியே' என்னும் பாசுரத் தொடர்கள் யாவும் காதல் அறிவிப்புக்களே. திருமாலை அன்றித் தன் மனம் வேறு எவரையும் ஏற்காது என்பதனைப் புலப்படுத்தும் வகையில்,

**'வானிடை வாழும் அவ்வானவர்க்கு**
**மறையவர் வேள்வியில் வகுத்தஅவி**
**தானிடைத் திரிவதோர் நரிபுகுந்து**
**கடப்பதும் மோப்பதும்'** (1.5)

செய்வது போலத் தான் இருக்கமாட்டேன் என்றுரைத்துத் தன் காதல் நிறைவேறக் காமதேவனை ஆண்டாள் வேண்டுவதாகப் பாடும் பாசுரங்கள் ஆண்டாளின் உள்ளக் காதலைத் தெள்ளத் தெளிவாகப் படம் பிடிக்கின்றன.

## வாய் முத்தம்

அன்பின் அறிகுறியாக முத்தமிட்டுக் கொள்வது அன்புடையோரிடையே நிகழ்வது. ஆண்டாள் சற்றும் தயக்கமின்றிக்

**'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ**
**திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ**
**மருப்பொசித்த மாயவன் தன் வாய்ச்சுவையும், நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே'**

என்று பாடும் முறையில் பெண்மொழி புதிய பதிவினைச் செய்கிறது எனலாம். 'சங்கரையா' என்று சங்கினை விளித்து **'நீ மட்டும் மதுசூதனன் வாயமுதம் பன்னாளும் உண்ணுகிறாய்'** என்று தன் ஆற்றாமையைப் புலப்படுத்துகிறாள்.

'. . . . . . . . **செங் கண்மால் தன்னுடைய**
**வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே** (7.6)

என்ற பாசுரத்தில் புலப்படும் ஆற்றாமை பெண்மொழிப்பதிவில் மிகவும் புரட்சிகரமானது.

## வேட்கை

ஆண்டாள் பாசுரங்களில் வேட்கை மிகுதியும் தெளிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. கூடலிழைக்கும் வகையில் ஆண்டாள் திருமாலுடன்

கூடும் உணர்வை வெளிப்படுத்தும் பாடல்களில் வேட்கை தெளிவாகத் தெரிகிறது.

**'காட்டில் வேங்கடம் கண்ணபுரநகர்**
**வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்**
**ஓட்டராவந்து என்கைப்பற்றித் தன்னொடும்**
**கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே'** (4.2)

என்றும், **'ஓடை மாமத யானை உதைத்தவர் கூடுமாகில் நீ கூடிடு கூடலே'** என்றும் பாடும் ஆண்டாளின் பாசுரங்கள் அவளது காதல் வேட்கையை வெளிப்படுத்துகின்றன. பெண்கள் தம் காதல் நிறைவேறுமா என்றும், நிறைவேற வேண்டும் என்னும் வேண்டுதலுடனும் கூடல் இழைத்தல் உண்டு. ஆண்டாளும் அதுபோலக் கூடல் இழைத்துத் தன் காதலைச் சோதிக்கும் நிலையில் **'கூடுமாகில் கூடிடு கூடலே'** என்று பாடியுள்ள போதும் **'கூடுமாகில்'** என்னும் சொற்பயன்பாடு மிகவும் அழுத்தமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனாலேயே பெண்மொழி வலுப்பெறுகிறது.

## உறுப்புக்கள்

ஓர் ஆண் பெண்ணுடலைப் பாடுவதற்கும் பெண், பெண்ணுடலைப் பாடுவதற்கும் சொல் நிலையில் வெளிப்படையான வேறுபாடு இல்லாவிட்டாலும் உணர்நிலையில் வேறுபாடு இருக்கிறது என்று பெண்ணியலார் கருதுகின்றனர் என்கிறார் மு. சுதர்சன் (பெண்ணிய ஆய்வுகள், ப.63). பெண் அனுபவமும், பெண் தன் உணர்வுகளை மறைத்தலும் பொதுவான இலக்கியப் போக்காக உள்ளது. ஆயின் இதற்கு மாறாக ஆண்டாள் தன் உள்ளத்து உணர்வுகளை மட்டுமின்றி, உடலுறுப்புக்களைச் சுட்டிக்காட்டியும் தன் காதலை வெளிப்படுத்தும் இடங்களைக் காணமுடிகிறது. ஆண்டாள் பாசுரங்களில் இது மிகப்பெரும் தனித்தன்மை எனலாம். பெண்மொழி பெண்ணுடலோடு பிணைப்புறுவது தனிப்பரிமாணம் பெறுதல் என்கின்றனர் ஆய்வாளர்கள். இது பெண் மொழிக்கே வாய்க்கும் பெண் பரிமாணப் பதிவு என்று குறிக்கப்படுகிறது. தமிழ் இலக்கியத்தில் பெண்பரிமாணப் பதிவிற்கு முதல் எடுத்துக்காட்டு ஆண்டாள் பாசுரங்கள் ஆகும்.

ஆண்டாள் தன் காதல் வெளிப்பாட்டில் சுட்டிக்காட்டும் முக்கிய உறுப்பு முலையாகும். பெண்ணின் காம உணர்வு அவளுடைய உடல் முழுக்கச் சிதறிக்கிடக்கின்றது என்பது உளவியலார் கருத்து. எனவே பெண்ணின் காதல் உணர்வின் முகிழ்ப்பிடமாக முலை குறிக்கப் படுகின்றது. ஆண்டாள் தன் காதல் உணர்வைப் பதிவு செய்யும் நிலையில்,

**'அவரைப் பிராயந் தொடங்கி என்றும்**
**ஆதரித்து எழுந்த என் தட முலைகள்'** (1.4)

**'ஊனிடையாழி சங்கு உத்தமர்க் கென்று**
**உன்னித் தெழுந்த என் தட முலைகள்'** (1.5)

என்று பாடுகிறாள். பாற்கடலில் பள்ளி கொள்பவனாகிய திருமாலைப் புணரும் ஆசையினால் அவளது கொங்கைகள் கிளந்து குமைத்துக் குதூகலித்து ஆகுலஞ் செய்வதாக ஆண்டாள் குறிப்பிடுகின்றாள். குயிலிடம் தன் காதல் உணர்வை வெளிப்படுத்தித் திருமாலைக் கூவி அழைக்க ஆணையிடும் ஆண்டாள்,

**'பொங்கிய பாற்கடற் பள்ளி கொள்வானைப்**
**புணர்வதோராசையினால் என்**
**கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதூகலித்து**
**ஆவியை ஆகுலஞ்செய்யும்'**

என்று பாடுகிறாள். மேலும் திருமகளைத் தாங்கிய மார்பினை உடையவனாம், திருமால் தன் மார்பையும் விரும்பித் தழுவும் விருப்பமும் தனக்கு இருப்பதைத் தெரிவிக்குமாறு மேகத்தைத் தூது விடுக்கிறாள்.

அதே மேகத்திடம்,

**'சங்கமா கடல் கடைந்தான் தண் முகில் காள் வேங்கடத்துச்**
**செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்**
**கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்**
**தங்குமேல் என்னாவி தங்குமென்றுரையீரே'** (8.7)

என்று பாடும் நிலையில் ஆண்டாள் இதுவரை எவரும் புலப்படுத்தா முறையில் தன் காதல் விருப்பத்தைத் தெரிவித்துள்ளமை தெளிவு முலையுடன், வயிற்றையும் குறிப்பிட்டுப் பாடும் போக்கும் ஆண்டாளின் பாடல்களில் காணக்கிடக்கிறது. **'காயுடை வயிறும் என் தட முலையும்'** (1.7) என்ற இடத்தைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

## மண (மன) உறுதி

ஆண்டாள் பாசுரங்களில் நம்பிக்கை உணர்வு மிகுதியும் புலப்படுகிறது. காதலுறும் பெண்டிர் பொதுவாக அச்சமுற்றும், அலமந்தும், பிறர்க்குப் பயந்துமே இருப்பர். ஆயின் ஆண்டாள் தான் திருமால் மேல் வைத்த காதலை உறுதிசெய்து, அறிவித்து, அதனை நிறைவேற்றுமாறு பிறரையும், பிறவற்றையும் ஆணையிட்டவள். இந்த உறுதியே அவளைக் கனவு காணத்தூண்டுகிறது. கனவில் தன் திருமணக் காட்சியை வடிவமைக்கவும் வைக்கிறது. தனக்குரிய மணவாளனைத் தானே தெரிவு செய்த ஆண்டாள்,

**'மானிடவர்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'** (1.5)

என்று உறுதி பூண்டாள். அஃதன்றி அவனுடன் முறைப்படித் திருமணம் நடக்க வேண்டும் என்றும் கருதினாள். **'நாணி இனி ஒரு கருமமிலை'** என்று தீர்மானித்தாள். தந்தையும் தாயும் உற்றாரும் நிற்கத் தலி வழி போயினாள் என்னும், சொற்பழி தேவையில்லை என்று கருதினாள். எனவேதான் திருமாலுடனான தன் திருமணத்தைத் தானே பாடுகிறாள்.

**'மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத**
**முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்தபந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்தென்னைக்**
**கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ நான்'** (6.6)

என்று தன் திருமணத்தை விவரித்துப் பாடும் ஆண்டாள் பெண் கவிஞர்களில் புதுமையானவள். திருமணம் என்ற பேச்செடுத்தாலே பெண்கள் நாணுவர் என்பது வழக்கு. ஆண்டாளோ தன் திருமண நிகழ்வுகளை ஒன்றுவிடாமல் பதிவு செய்கிறாள். ஒரு பாசுரத்தில் திருமண நிகழ்வுகளை வரிசையாக அடுக்கிப் பாடுகிறாள். தோரணம் நாட்டுதல், பந்தலில் கோவிந்தன் புகுதல், இந்திரன் முதலியோர் மகட் கேட்டல், மணமாலை சூடுதல், காப்பு நாண் கட்டல், மத்தளம் கொட்டல், வரி சங்கம் ஊதல், கைத்தலம் பற்றல், தீவலஞ்செய்தல், அம்மி மிதித்தல், கைமேல் கைவைத்துப் பொரிமுகம் தட்டல், மஞ்சனமாட்டல் ஆகிய அனைத்துத் திருமண நிகழ்வுகளையும் அடுக்கி **'வாரணமாயிரம்'** பாசுரத்தில் ஆண்டாள் பாடுகிறாள். மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து தன் கைத்தலம் பற்றக் கனாக் கண்டதாகப் பாடும் ஆண்டாளின் சிந்தனையும், சொற்களும் மிகப் புதுமையானவை. திருமண நிகழ்வென்பது இயல்பாகவே எவரொருவருக்கும் மகிழ்ச்சியூட்டக் கூடியது. ஆயின் பெண்டிர் அந்நினைவுகளை உள்ளத்திற்குள் ஒளித்து வைத்து மறைப்பதை இயல்பாகக் கொண்டவர். ஆண்டாளோ புதுவிதமாக **'வாரணமாயிரம்'** பாசுரத்தில் தன் உள்ளத்து ஆசைகளை அருமையான சொற்களில் வடிக்கிறாள். இங்கு ஆண்டாளின் மொழி மிக வெளிப்படையான பெண் மொழியாக விளங்குகிறது.

கணக்கிலடங்காச் சிக்கல்களைக் கொண்டது நமது சமூக அமைப்பு. இதில் பெண் அவ்வளவு எளிதாகப் பேசிவிட முடியாது. ஏனெனில் ஏற்கனவே உருவாகி இருக்கும் பல கட்டுமானங்களும், கருத்தாக்க ங்களும் கெட்டியாய்க் கட்டிதட்டிப்போய் உள்ளன. அவற்றை உடைத் தெறிந்து வெளியே வருதல் என்பது மிக அரிய செயலாகும். இதை உணர்ந்து தான் ஹெலன் சிக்ஸிஸ் என்னும் பெண்ணியவாதி பெண்ணியத்தின் கொள்கைச் சாசனம் என்று பாராட்டப்படும் தன் கட்டுரையில் **'இருப்பதை உடைக்காமல் புதிய சொல்லாடலை உருவாக்க**

**வழியில்லை’** என்று எடுத்துரைக்கிறார். அவர் மரபு எனப் போற்றப்படுபவற்றின்மீது தாக்குதல் நடத்த வேண்டும் என்கிறார். (க.பஞ்சாங்கம், மேலது, ப.71) அந்த வகையில் கவனம் செலுத்தப்பட வேண்டியவற்றில் மொழியும் முக்கியமானது. ஆண்டாளைப் பொறுத்த மட்டில் அவள் படைப்புக்கள் அத்தனையுமே அவளுடைய காதல் தொடர்பான கருத்துக்களாகவே இருக்கின்றன. அவற்றைத் தயக்க மின்றியும், கூச்சமின்றியும் ஆண்டாள் எடுத்துரைக்கும் பாங்கு முற்றிலும் புதுமை காட்டிச் சிந்திக்கத் தூண்டுகிறது. பல பெண்ணியவாதிகள் பெண்மொழியை உருவாக்கக் கவிதை வடிமே சிறந்தது என்று வாதாடு கின்றனர். கோரா கப்லான் என்னும் அறிஞரும் பெண் தனக்கான மொழியை உருவாக்கக் கவிதை வடிவம் உதவும் என்கிறார். (க.பஞ்சாங்கம், மேலது,ப.73) இந்த நிலையிலும் ஆண்டாள் ஒரு கவிஞராக அமைந்திருப்பதும் குறிப்பிடத் தக்கது. ஆண்டாள் என்னும் பெண்ணின் மொழியை வலுவாக்கி வைத்திருப்பது அவளது கவிதை மொழியே என்பதையும் நாம் காணமுடிகிறது.

ஆண்டாளைப்பற்றிப் பலப்பல கருத்துக்கள் உரைக்கப்பட்டுவிட்டன. ஆண்டாளின் கதையே தொன்மக்கதை என்று உரைப்போர் உண்டு. ஆண்டாள் ஓர் ஆன்மீகவாதி என்றும் அவளுடைய பாடல்கள் யாவும் திருமாலின் மேல் கொண்ட ஆழ்ந்த பக்தியின் புலப்பாடுகள் என்றும் கூறுவோர் உண்டு. அப்பாடல்கள் ஜீவான்மா பரமாத்மாவை அடையத் துடிக்கும் தேடலே என்று ஆண்டாளை இறைமையாக்கத்திற்கு இட்டுச் செல்லும் போக்கும் ஆய்வுகளில் காணக்கிடக்கிறது. அப்படியே வைத்துக் கொண்டாலும் அப்போதும் ஆண்டாளின் மொழி தன் கம்பீரத்துடன் விளங்குகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. அடியார்கள் நாயகியாகத் தங்களைப் பாவித்து பாடிய பாடல்கள் உள்ளன. அதுவே உன்னதமான பாவமென்று கருதப்படவும் செய்கிறது. அவ்வாறெனினும் கூட ஆண்டாளாகிய நாயகியின் மொழி ஆற்றலுக்கும், மொழிப் பயன்பாட்டிற்கும் ஈடு காண்பது அரிது.



# ஆண்டாள் பாடல்கள் காட்டும் சமுதாயம்

ஒவ்வொரு இலக்கியமும் தான் தோன்றிய காலசமுதாயத்தையும் அக்காலகட்டத்தில் வாழ்ந்த மக்களின் நிலைகளையும் பழக்க வழக்கங்களையும் படம்பிடித்துக் காட்டும் தன்மையன. ஆண்டாள் பாடிய திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் ஆண்டாள் வாழ்ந்த சமுதாயச் சூழ்நிலைகளைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. இப்பாடல்கள், புலப்படுத்தும் அக்கால சமுதாயத்தை இக்கட்டுரை விளக்குகிறது.

கோதை நாச்சியார் இயற்றியுள்ள 173 (திருப்பாவை - 30, நாச்சியார் திருமொழி - 143) பாடல்களில் மார்கழி நோன்பை திருப்பாவைப் பாடல்களும், தை நீராடல், காமவேள் நோன்பு, நோன்பு நோற்கும் முறைகள், திருமணச் சடங்கு முறைகள், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை நாச்சியார் திருமொழியில் உள்ள பாடல்களும் விளக்குகின்றன. இப்பாடல்கள் புலப்படுத்தும் அக்கால சமுதாயத்தை 1. நீராடல், 2. நோன்பு நோற்கும் முறை, 3. திருமண முறைகள், 4. மக்களின் பழக்கவழக்கங்கள் எனும் நான்கு தலைப்புகளில் இக்கட்டுரை ஆராய்கிறது.

**நீராடல் :**

மனிதனின் நோய்கள் தீர காலையிலும், மாலையிலும் பரந்த வெளியில், காற்றோட்டமுள்ள பகுதிகளில் நடக்க வேண்டும் என்று இன்றைய மருத்துவர்கள் அறிவுரை கூறுகின்றனர். மனிதனின் உடலில் ஏற்படும் நோய்களுக்கு அடிப்படைக் காரணம் தேவையான பிராணவாயு கிடைக்காதே. மனிதன் உடலுக்குத் தேவையான பிராணவாயு கிடைத்தால் அவன் நோயின்றி வாழ முடியும் என்பதே மேற்கூறிய கூற்றின் பொருளாகும்.

மார்கழி, தை மாதங்களில் அதிகாலைப் பொழுதில் ஓடும் நீரில், தேக்கி வைக்கப்பட்டிருக்கும் நீரில் குளித்து இறைவழிபாடு செய்தால் நோயே வராது என்பது தமிழர் தம் நம்பிக்கையாகும். அக்காலத்தில் ஓடும் நீரிலும், காற்றிலும், பிராணவாயு $O_3$ என்ற நிலையில் இருப்பதால் அது மனிதனுக்கு வேண்டிய பிராணவாயுவை அதிகமாகக் கொடுக்கும் என்ற அறிவியல் அறிவு பழந்தமிழர்களுக்கு இருந்திருக்கிறது. இதனையே பழந்தமிழர்கள் கார்த்தியாயினி நோன்பாக மேற்கொண்டு வந்துள்ளனர்.

சங்ககாலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் மார்கழி, தை மாதங்களில் நீர்நிலைகளில் நீராடல் என்ற பழக்கத்தை அக்கால மக்கள் பின்பற்றி வந்துள்ளனர்.

"தையில் நீராடித் தவம் தலைப் பாடுவாயோ"

எனக் குறிஞ்சிக்கலியும் (பா.25)

"தைஇத் திங்கள் தண்ணிய தரினும்"

என 196-வது குறுந்தொகைப்பாடல் வரியும்,

"நறுவீ ஐம்பால் மகளிராடும்
தைஇத் தண்கயம் போல்"

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடியும் (பா.84)

தை மாதத்தில் அதிகாலைப் பொழுதில் நீராடும் வழக்கத்தை அக்கால மக்கள் கைக் கொண்டிருந்தனர் என்பதை எடுத்துரைக்கின்றன. இதன்வழி தைநீராடல் என்ற பழக்கம் சங்ககாலத்திலேயே இருந்ததை அறியமுடிகிறது.

வெப்பம் மிகுந்துள்ள தமிழகத்தில் தண்ணிய நீரில் குடைந்தாடுதல் என்பது பழங்காலம் தொட்டே தமிழர் தம் வழக்கமாக இருந்திருக்கிறது. அதிலும் கன்னிப்பெண்கள் தம் உடல்நலத்திற்காகவும், சிறந்த வாழ்க்கை அமைய வேண்டும் என்ற எண்ணத்திற்காகவும், குளிர்ந்த நீரில் அதிகாலையில் நீராடி ஈர ஆடையுடன் இறைவனை வழிபட்டுள்ளனர். இதனை சங்க இலக்கியத்துள் ஒன்றான பரிபாடல் (பா.11, வரி.74-92) எடுத்துரைக்கிறது. கன்னியர் வைகறையில் அதிகாலைப் பொழுதில் நீராட வேண்டும் என்று வையை தவம் செய்ததாக இப்பாடல் எடுத்துரைக்கிறது. மார்கழி திருவாதிரையும் முழுநிலவுமாகிய பௌர்ணமி அன்று பெண்கள் நீர்த்துறையில் நீராடி மழை வேண்டி வணங்கியதாக பரிபாடல் செய்திகள் எடுத்துரைக்கின்றன.

இன்றைய காலத்திலும் கிராமப் பகுதிகளில் மார்கழி 30 நாட்களும் பெரியவர்களும், சிறியவர்களும் அதிகாலைப் பொழுதில் நீராடி, ஈர ஆடையுடன் இசைக்கருவிகளைக் கையில் வைத்து இயக்கி வாய்ப்பாட்டுப் பாடி இறைவனைப் புகழ்ந்து பஜனை நடத்துவதைக் காணலாம். இப்பஜனை முறையே ஆண்டாள் திருப்பாவை, நாச்சியார் திருமொழிகளில் மார்கழி நோன்பாகிய பாவை நோன்பிலும், தை நீராடலாகிய காமவேள் நோன்பிலும் எடுத்துரைக்கப்படுகிறது.

## நோன்பு நோற்கும் முறை :

பழங்காலம் தொட்டு கார்த்தியாயினி நோன்பாகப் பாவை நோன்பு நோற்கப்பட்டதை இதிகாசங்கள் எடுத்துரைக்கின்றன. பாவை நோன்பு

நோற்கும் பொழுது மனம், வாக்கு, செயல்கள் தூய்மையானதாக இருக்க வேண்டும். பாவை நோன்பு நோற்கும் பெண்கள் தினமும் அதிகாலையில் குளிர்ந்த நீரில் நீராட வேண்டும். ஈர ஆடையுடன் இறைவனை வழிபட வேண்டும். பெண்கள் தங்களை ஒப்பனை செய்யாது, பால், நெய் உணவில் சேர்க்காது விரதமாக இருக்க வேண்டும். புளுகு புறம் கூறித்திரிதல், இகழ்தல், கடுஞ்சொல் பேசுதல் போன்றவற்றைச் செய்யாது மனம் வாக்குச் செயல்களில் தூய்மையுடையவர்களாக இருக்க வேண்டும். வாசலில் நின்று யாசிப்பவர்களுக்கு உணவு கொடுக்க வேண்டும். அதிதிகளுக்கு உணவு படைத்த பின்பே உண்ண வேண்டும். இந்நோன்பு நோற்பவர் சிந்தையெல்லாம், நெஞ்சமெல்லாம் இறைவனின் எண்ணம் மட்டுமே இருக்க வேண்டும். பாடும் பாடல்களிலும், செய்யும் செயல்களிலும் இறைவனைக் காண வேண்டும் என்ற வரைமுறை அக்காலத்தில் பழக்கத்தில் இருந்திருக்கிறது. இதனையே ஆண்டாள் இறைவனுக்குச் செய்யும் கிரியைகளாக

“நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதனச் செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்” (பா.12)

என்ற திருப்பாவை அடிகள் வழி எடுத்துரைக்கின்றார்.

பாவை நோன்பு எண்ணியதை நல்கும், மனதில் மகிழ்ச்சியை ஊட்டும், பெருவாழ்வு அருளும். எனவே பாவை நோன்பை மேற்கொண்டவர்கள் இந்நோன்பைக் காக்க, நோன்பின் பயனைப்பெற விடுபடவேண்டிய உணவுகளை விட்டு, ஒப்பனைகளை நீக்கி, தீய பேச்சுகளைப் பேசாமல் மனித வாழ்க்கைக்குத் தேவைப்படுகின்ற செயல்களை மட்டுமே வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும். இதனையே இப்பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

சங்ககாலத்திலும் மக்கள் பாவை நோன்பினை மார்கழி மாதம் கொண்டாடியதை

“ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிரும் திங்கள் மறுநிறை ஆதிரை
ஆம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
பனிப்புலர பாடி”

என்ற பரிபாடல் பாடல் வரிகளும், ‘பனிநீர் தோய்தலும் பாவை ஆடலும்’ என்ற பிங்கலந்தைப் பாடல் வரிகளும் எடுத்துரைக்கின்றன. இவ்விரண்டு சான்றுகள் கூறும் கருத்துக்களையே ஆண்டாளின் பாடல் (12) எடுத்துரைக்கிறது எனலாம். இதன்வழி மார்கழி மாதம் பனிநீரில்

குளித்தால் நலத்தோடு வாழமுடியும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே நிலவியதையும் அறியமுடிகிறது.

இன்றைய காலகட்டத்திலும் பாவை நோன்பை நோற்கும் பெண்கள், சிறுவர், சிறுமியர், பெரியோர் அனைவரும் அதிகாலைப் பொழுதில் நீராடி, ஈர ஆடையுடன் இறைவனின் புகழை இசைக் கருவிகளோடு இசைத்துப் பாடிக்கொண்டே தெருக்களில் சுற்றி வருவதைக் கிராமங்களில் காண முடிகிறது. பஜனை முடிந்ததும் பஜனையை மேற்கொண்டவர்கள் ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று யாசித்துப் பொருள் பெற்று அதனைக் கொண்டு மாலையில் உணவாக்கி எல்லோரும் பகிர்ந்து உண்டு இறைவனை வழிபடும் முறையைக் காண முடிகிறது. இது ஆண்டாள் கூறிய முறைகளை இன்றளவும் மக்கள் பின்பற்றி வருகின்றனர் என்பதையே எடுத்துரைக்கிறது எனலாம்.

பாவை நோன்பு மேற்கொண்ட கன்னிப் பெண்கள் தாங்கள் விரும்பிய வண்ணம் திருமணம் நடக்க வேண்டும் என்பதற்காக தைமாதம் காமவேள் நோன்பை மேற்கொள்ளுகின்றனர். இந்நோன்பு தை, மாசி, பங்குனி மாதங்களில் நடத்தப்படுவதாக

> ". . . . . . . . . . . . . . . வைகல்
> தெருவிடை எதிர்கொண்டு பங்குனி நாள்
> திருந்தவே நோற்கின்றோன் காமதேவா" (நா.தி. 509)

என்ற நாச்சியார் திருமொழி பாசுரவரிகள் வழி அறிய முடிகிறது.

இந்நோன்பு நோற்பவர்கள் ஒருவேளை உணவு உட்கொள்ள வேண்டும். தன்னை அலங்கரிக்கக் கூடாது. அழுக்கான ஆடையோடு முடியாமல் விரித்த தலைமுடியோடு உதடு வெளுத்த நிலையில் காமவேள் நோன்பு நோற்க வேண்டும். இதனை முன்பனி (மார்கழி, தை) மாதங்களில் நோன்பு நோற்றனர். இந்நோன்பை மேற்கொண்டால் சித்திரை, வைகாசியில் திருமணம் நடக்கும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே இருந்துள்ளது.

இந்நோன்பு மேற்கொள்வதற்கு முன்பு தரையைப் பெருக்கித் தூய்மை செய்ய வேண்டும். நீர் தெளித்துக் கோலமிட்டுப் புதுமணல் பரப்பித் தெருவை அழகு செய்திடவேண்டும். தான் விரும்பிய கணவனைக் காமதேவன் தரவேண்டும் எனக் கன்னிப்பெண்கள் வேண்டி காமவேள் நோன்பினை மேற்கொண்டுள்ளனர்.

ஆண்டாளும், கண்ணனைக் கணவனாக வரித்துக் கொண்டவள். பாவை நோன்பினை மார்கழி மாதத்தில் நோற்றதைத் திருப்பாவை எடுத்துரைக்கிறது. ஆனாலும் கண்ணனைக் கணவனாகப் பெறமுடியாத நிலை ஏற்பட்டது. எனவே சங்கு சக்கரமேந்திய திருவேங்கடமுடையான்

தன் மணவாளனாக வரவேண்டும் எனக் காமதேவனை வேண்டிக் கொண்டாள். அதற்காகக் காமவேள் நோன்பினை ஆண்டாள் மேற்கொண்டாள்.

ஆண்டாள் காமவேள் நோன்பினை எவ்வாறு செய்தாள் என்பதைத் 'தையொரு திங்கள்' எனத் தொடங்கும் பாசுரம் எடுத்துரைக்கிறது. தையொரு திங்களும் தரை விளக்கி, தண்மண்டமிட்டு, மாசி முன்னாள் நுண் மணல் கொண்டு தெருவை அலங்கரித்தாள். அதன்பின் ஒவ்வொரு நாளும் வெள்வரைப்பதன் முன் நீர்த்துறையில் நீராடி, முள் இல்லாத சுள்ளியைக் கொண்டு தீ எரித்து காமதேவனை வழிபட்டாள். நறுமலர், முருக்கமலர் தூவி காயையுடைய நெல்லோடு கரும்பு, கட்டி அரிசி, அவல் ஆகியவற்றை நைவேத்தியப் பொருளாக வைத்து, நான்மறைகளைக் கற்ற அந்தணர்களைக் கொண்டு மந்திரங்களை ஓதச்செய்து காமவேள் நோன்பினை ஆண்டாள் மேற்கொண்டாள். தை, மாசியில் நோற்ற நோன்பினை பங்குனி வரை மேற்கொண்டதை,

"ஒத்துவல்லார்களைக் கொண்டு, பங்குனி நாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா" - (பா.509)

என்ற வரிகள் வழி அறிய முடிகிறது. இந்நோன்பின்போது மனமானது கண்ணன் கணவனாக வரவேண்டும் என்ற ஒன்றை மட்டுமே நினைத்து,

"மாசுடை யுடம்பொடு தலையுலறி
வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு
தேசுடைத் திறனுடைய காமதேவா
நோற்கின்ற நோன்பினைக் குறிகொள்." - பா.51

எனக்கூறி தன் எண்ணம் ஈடேற காமனும், அவன் தம்பி சாமனும் அருளவேண்டும் என வேண்டிக் கொண்டாள். இதன் வழி அக்காலத்தில் காமவேள் நோன்பு எவ்வாறு நோற்கப்பட்டது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

## திருமண முறைகள் :

பழங்காலத்தில் ஒத்த தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு களவு மணம் செய்து வாழ்ந்தனர். காலப்போக்கில் அதில் பொய்யும் வழுவும் தோன்றியது. எனவே அக்கால மக்கள் களவு மணத்தைக் கற்பு மணமாக மாற்ற திருமணம் என்ற சடங்கை உருவாக்கினர். இதனை

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணமென்ப" (நூ.பா. - தொல்.கற்.எண்-4)

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்குகிறது.

சங்ககாலத்தில் மலர்ந்த வேங்கை மரத்தடியில் திருமணம் நடந்த தாகவும் முல்லைப் பந்தர் கீழ் புதுமணல் விரித்து, மணப்பெண்ணை நீராட்டி, பெண்கள் வாழ்த்த திருமணம் நடந்ததாகவும் சங்க இலக்கியங்கள் விவரிக்கின்றன.

சிலப்பதிகாரம் அன்றைய காலத்தில் திருமணம் எவ்வாறு நடந்தது என்பதை,

'மாலை தாழ் சென்னி வயிரமணித் தூணகத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியம் சகடு அணைய வானத்துச்
சாலி யொரு மீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழிக் காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பு என்னை"
(சிலம்பு-மங்.வாழ்.48-53)

என்ற வரிகள் வழி இளங்கோவடிகள் எடுத்துரைக்கிறார்.

இன்றைய காலத்தில் நடைபெறும் திருமணத்தில் பின்பற்றப்படும் திருமண முறைகளை ஆண்டாள் பாசுரங்களில்தான் விளக்கமாகக் காணமுடிகிறது. பெண் பார்த்தல், தாரை வார்த்துக் கொடுத்தல், மணப்பெண்ணின் கையை மணமகன் கையில் மேல் வைத்து பொரி தூவி வாழ்த்துதல், மணமக்களை ஊர்வலமாக வரச் செய்தல், இறுதியில் திருமஞ்சண நீராடச் செய்தல் போன்ற சடங்குகள் அக்காலத்தில் பின்பற்றப்பட்டதை ஆண்டாளின் 'வாரணமாயிரம்' என்ற பாசுரம் வழி அறியமுடிகிறது.

தனது கணவனாக வரப்போகின்ற கண்ணன் ஆயிரம் வாரணம் சூழ வலம் செய்து நடந்து வர அவனை வரவேற்பதற்காக தோரணம் நாட்டி பூரண பொற்குடமும் வைக்கப்பட்டுள்ளதாக ஆண்டாள் கூறுகிறாள். திருமண நாள் அன்று பாளை, கமுகு கட்டப்பட்டுள்ள பந்தலின் கீழ் உற்றார் புடைசூழ வந்த கோவிந்தன் தன்னை மணம் பேசி மந்திரித்து, மந்திரக் கோடி உடுத்தி மணமாலை சூட்டுகிறான். அச்சமயத்தில் பார்ப்பனச் சிறார்கள் நாற்றிசையிலிருந்து கொணர்ந்த தீர்த்தத்தை திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் மீது தெளிக்க மந்திரம் முழங்க காப்பு நாண் கட்டியதாகவும், அதனைத் தொடர்ந்து

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரை தாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனம் வந்து" (561)

தன் கைத்தலம் பற்றியதாக ஆண்டாள் கூறுகிறார். இத்திருமணம் முடிந்த பின் கண்ணன் தன் கையைப் பிடித்துக் கொண்டு வாய் நல்லார் நல்ல மந்திரங்களை ஓத தீவலம் வந்ததாகக் கூறுகிறாள். அப்பொழுது,

"நன்மை யுடையவன் நாராயணன் நம்
செம்மை யுடைய திருக்கையால் தாள் பற்றி" (பா. 563)

அம்மி மிதித்ததாகவும், அச்சடங்கு முடிந்தவுடன் அவளது பெற்றோர்கள் அக்கினியின் முன்னர் தன்னை நிற்க வைத்து அரிமுகன் அச்சுதன் கைம்மேல் தன்னையை வைத்து பொரி தூவி தாரை வார்த்துக் கொடுத்ததாகக் கூறுகிறார்.

இதனை,

"வரிசிலை வாள்முகத் தென்னைமார் தாம் வந்திட்டு
எரிமுகம் பாரித்தென் னைமுன்னே நிறுத்தி
அரிமுக னச்சுதன் கைம்மேலென் கைவைத்து
பொரிமுகந் தட்டக் கனாக்கண்டேன் தோழி" (நா.தி. 564)

என்ற பாடல்வழி ஆண்டாள் எடுத்துரைக்கிறாள். தாய் தந்தையர் தாரை வார்த்துக் கொடுக்கும் நிகழ்ச்சியே இவ்வாறு கூறப்படுகிறது. இதன் வழி அக்காலத்தில் தாரை வார்த்துக் கொடுத்தல் என்ற சடங்கு நடத்தப்பட்டதை அறிய முடிகிறது.

தாரை வார்த்துக் கொடுத்தபின் மணமக்களை ஊர்வலமாக அழைத்துச் சென்று மணமகன் வீட்டில் விடும் நிகழ்ச்சியும், அங்கு மணமக்களை சந்தனம் முதலான மணப்பொருட்களால் அலங்கரித்ததையும், அதன்பின் மஞ்சன நீராட்டுதல் என்ற சடங்கு நடத்தப்பட்டதையும்,

"குங்கும மப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து
மங்கல வீதி வலம் செய்து மணநீர்
அங்கவ னோடு முடன் சென்றங் கானைமேல்
மஞ்சன மாட்டக் கனாக்கணக்டென்" (பா.565)

என்ற பாடல் வழி ஆண்டாள் எடுத்துரைக்கிறாள். 'வாரணமாயிரம்' என்னும் பாசுரம்வழி அன்றைய காலத்தில் திருமணச் சடங்குகள் எவ்வாறு நிகழ்த்தப்பட்டன என்பதை ஆண்டாள் வரிசைப்படுத்திப் பாடுகிறாள். இதன்வழி அன்றையகால திருமணச் சடங்கு முறைகளை அறிந்துகொள்ள முடிகிறது.

**பழக்கவழக்கங்கள் :**

சமுதாய நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் இலக்கியத்தில் பாடல் வடிவம் பெறும் என்பதற்கு ஆண்டாள் பாடல்களைச் சான்றாகக் கூறலாம்.

தமிழர் வாழ்வில் அதிகாலைப் பொழுதில் நீராடல் என்ற பழக்கம் வழக்கத்தில் இருந்ததை 'வெள்வரைப்பதன் முன் துறை படிந்து' (நா.தி.505)

'குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய்' (நா.தி.485)

என்ற பாடல்வரிகள் வழி அறியமுடிகிறது.

மார்கழி, தை ஆகிய முன்பனிக் காலத்தில் குளிரிடையே மிகக் குளிர்ந்திருக்கும் நீரில் மூழ்குவது, இயற்கையை எதிர்த்து ஒரு நோன்பு நோற்றல், என்பது இறைவன் அருளைப் பெறும் வழி என்ற வழக்கம் அக்காலத்தில் பழக்கத்தில் இருந்திருக்கிறது. இதனையே பாவையாடல், தைநீராடல் என அழைத்திருக்கின்றனர்.

மார்கழி நோன்பும், காம நோன்பும் நோற்கும் பழக்கம் அக்காலத்தில் கன்னிப் பெண்களால் மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளது. சிறந்த கணவனைப் பெறவேண்டும் என்பதுடன் மாதம் மும்மாரி மழை பொழிய வேண்டும் என்ற நோக்கிலும் இத்தகைய நோன்புகளைக் கைகொள்ளும் பழக்கம் மக்களிடையே இருந்திருக்கிறது. இதனை,

"ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய், நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோர்" (நா.தி.-477)

என்ற வரிகள் வழி ஆண்டாள் எடுத்துரைக்கிறார்.

காதல் கொண்ட கன்னியர் தம் காதல் நிறைவேறுமா என்பதை அறிவதற்காகக் கண்களை மூடிக்கொண்டு கையால் மணலில் வட்டமாக வரைவர். அந்த வட்டம் முழுமையாக இருந்தது என்றால் காதல் கைகூடும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே இருந்தது என்பதை,

"காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்;
ஓட்ட ராவந்தென் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே" (நா.தி.-535)

என்ற பாடல் வழி ஆண்டாள் கூறுகிறாள். குற்றாலநாதர் கோவிலில் பராசக்தி பீடத்தின் சந்நிதியில் அமைக்கப்பட்டுள்ள கல் பீடத்தில் இன்றும் பக்தர்கள் தாம் எண்ணுவது நடைபெறுமா என்பதை அறிந்து கொள்ள தம் கைகள் இரண்டையும் விலக்கி வைத்துக் கொண்டு கடவுளை எண்ணிக் கொண்டு மனதை ஒருமுகப்படுத்துகின்றனர். அப்பொழுது கைகள் ஒன்று சேர்ந்தால் நினைத்தது நடக்கும் என நம்புகின்றனர்.

இத்தகைய நம்பிக்கை அக்காலத்தில் மக்களிடையே இருந்ததை 'கூடல் குறிப்பு' என்ற தலைப்பில் அமைந்த பத்து பாடல்களும் எடுத்துரைக்கின்றன எனலாம்.

**முடிவுகள் :**

1. உடல்நலமும், மழை வளமும் வேண்டி நீராடல் என்ற பழக்கத்தை மக்கள் அன்றைய காலத்தில் பின்பற்றியிருக்கின்றனர்.
2. நோன்பு நோற்கும் பொழுது மனம், வாக்கு, செயல்களில் தூய்மையுடையவர்களாக இருக்க வேண்டும் என்ற குறிக்கோள் அன்றைய மக்களிடம் இருந்திருக்கிறது.
3. அக்காலத்தில் வீட்டைத் தூய்மை செய்து, தெருவை அலங்கரித்து, உணவை விட்டு விட்டு, தம்மை அழகுபடுத்துவதைக் குறைத்துக் கொண்டு மன ஒருமைப்பாட்டுடன் நோன்பு நோற்றுள்ளனர்.
4. காமவேள் நோன்பினை கன்னிப் பெண்கள் சிறந்த கணவனைப் பெறுவதற்காக நடத்தியுள்ளனர்.
5. எண்ணியதை அடையமுடியுமா என்பதை அறிந்து கொள்ள கூடலிழைத்தல் என்ற பழக்கத்தைப் பின்பற்றியுள்ளனர்.
6. ஆண்டாள் திருமணச் சடங்குகள் இன்றளவும் தமிழர்களிடையே பின்பற்றப்பட்டு வருகின்றன.
7. திருநாண்பூட்டுதல் என்ற சடங்கை ஆண்டாள் பாடலே முதன் முதலில் எடுத்துரைக்கிறது எனலாம்.



ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாய்



ஸ்ரீஆண்டாள்



# ஆண்டாள் பாடல்களில் உணர்வு வெளிப்பாடு

**'உணர்வு'** என்ற சொல் உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டது. தத்துவ அறிஞர்கள் வேதகாலம் முதல் இக்காலம் வரை உள்ளத்தைப் பற்றிச் சிந்தித்து உள்ளார்கள்.

**'உள்ளம் என்பது ஒன்றன்பின் ஒன்றாக நீரோட்டம் போல் வரும் நிகழ்ச்சிகளை இணைத்து இருப்பதாகும். பால் இயல்பூக்கம், வாழ வேண்டும் என்ற எண்ணம், அதிகாரம் வகிக்க வேண்டும் என்ற எண்ணம் ஆகிய இவைகள் மனிதனின் அடிநிலை உந்து சக்திகள்'** (தா.ஏ.சண்முகம்.1960 - ப.10) என்று பௌத்த மதம் உள்ளத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. எனவே உள்ளம் என்பது உணர்வுகளால் நிரம்பியதாகும். ஆண்டாள் பாடல்களில் இடம்பெறும் மன உணர்வு வெளிப்பாட்டினை **'உணர்தல், நோற்றல், வரைதல்'** என்ற மூன்று நிலைகளில் காணலாம்.

## உணர்தல்

நம் அடிமனத்தில் நீக்கமற ஆழப்பதிந்திருக்கும் விருப்பம், விருப்பத்திற்குரிய மனிதர் அல்லது பொருள் குறிப்பிடத்தக்க சூழலில் மட்டுமே நம்மால் உணர முடியும். அத்தகைய நிலையே **'உணர்தல்'** என்னும் உளவியல் நிலையாகும்.

ஆழ்வார்கள் பன்னிருவரில் விஷ்ணுசித்தர் எனப் போற்றப்படுபவர் பட்டர்பிரான் என்ற இயற்பெயர் கொண்ட பெரியாழ்வார் ஆவார். குழந்தை இல்லாதவர். திருமாலுக்கு மாலைகட்டித் தம் பணியைச் செய்து வரும் பெரியாழ்வாருக்கு குழந்தை இல்லாத ஏக்கம் வாட்டியது. இறையருளால் நந்தவனத்தில் துளசிச்செடியின் அடியில் பெண் குழந்தை ஒன்று கிடைக்க அதனை எடுத்து வளர்க்கிறார். பூக்களோடு பூவாக குழந்தை நந்தவனத்தில் கிடந்தமையாலும், கோடி சூர்ய பிரகாசத்துடன் விளங்கியமையாலும் அக்குழந்தைக்குக் **'கோதை'** என்று பெயர் சூட்டி மகிழ்கின்றார். குழந்தை தளர்நடை போடத் தொடங்கிய நாளிலிருந்தே பெரியாழ்வார் குழந்தையை அழைத்துக் கொண்டு நந்தவனம் செல்கின்றார். மலர் பறிக்கிறார். பெருமானின் அழகினை அவர்தம் பெருமைகளைக் கோதைக்குக் கதைகளாகக் கூறுகின்றார். குழந்தை கோதையும் பெருமானின் கதைகளைக் கேட்டவாறு தந்தையுடன் மலர் பறிக்கின்றாள். தந்தை மகளை மடியில் வைத்துக் கொண்டு மாலை

கட்டுகிறார். கோதையை அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் செல்கின்றார். பெருமாளுக்குப் பூமாலை சூட்டிப் பாமாலை பாடுகின்றார். பெருமாள் அலங்காரப் பிரியன்; அவனுக்கு மாலை அழகாய் இருக்கிறது என்றுகூறி பரவசப்படுகிறார். இவை அனைத்தும் கோதையின் இளம் பிள்ளைப் பருவத்தில் (Early Child hood -3-6) நடக்கின்றன. இப்பருவத்தில் குழந்தைகளுக்கு புதிய ஆர்வங்கள் (interest) காணப்படும். ஏதாவது பொருள்களை வைத்து தாம் ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற ஆசை ஏற்படும் என்ற உளவியலார் கூற்றுப்படி இப்பருவத்தில் கோதை தாமும் மாலை கட்டக் கற்றுக் கொள்கிறாள். தந்தை கூறும் பெருமாள் பாசுரங்களையும் பெருமைகளையும் ஆர்வமாகக் கேட்கின்றாள். ஆனாலும் குழந்தைப் பருவத்திற்கே உரிய பொருட்கள் மீதுள்ள ஆசை கோதையிடமும் விஞ்சி காணப்படுகின்றது. கோதை பெண்குழந்தை ஆதலால் அவள் விரும்பும் அலங்காரம் தந்தை கட்டிய மாலையைத் தான் அணிந்து பார்க்க வேண்டும் என்பதே ஆகும். இளங்குழந்தைப் பருவத்தில் அதற்கான மனத்துணிச்சல் இல்லை. ஆனால் தந்தை கட்டிய மாலை தனக்கும் இத்தகு அழகு தருமோ என்ற எண்ணம் மட்டும் வலுப்பட்டுக் கொண்டே வருகின்றது. கோதை பிள்ளைப் பருவம் அடைகின்றாள். (Later child hood 6-12) இப்பருவம் ஒருவகையில் பள்ளிப்பருவம்; விளையாட்டுப் பருவம் கூட்டாளிப் பருவம்; (play age and gang age) எனலாம். இப்பருவப் பிள்ளைகள் எது நல்லது? எது கெட்டது? என்று தெரிந்து கொண்டே வீடு, பள்ளி ஆகியவற்றை ஒட்டிய சூழல்களில் பெரியோர் விதித்துள்ள அதிகாரம், கட்டுப்பாடு போன்றவற்றிலிருந்து சுதந்திரம் பெறும் நோக்குடன் எதிர்மறை நடத்தைகளில் (negativism) ஈடுபடுகின்றனர் என்பர் உளவியலார் (முனைவர் கோகிலா தங்கசாமி, 1997, ப.14). கோதைக்கு உலகம், பள்ளிக்கூடம், வீடு எல்லாமே பெருமாள் தான். பெருமாள் கோயில்தான் கூட்டாளி. அதனால் அவருக்குக் கட்டிய மாலையை அணிந்து பார்க்கும் விருப்பம்தான் அவள் மேற்கொண்ட இளம்பிள்ளை விளையாட்டு. அவளது குழந்தைப் பருவத்தில் இறைவனுக்குச் சாத்தப்படும் மலர்மாலை குற்றமற்றதாக தூய்மையாக இருக்க வேண்டும் என்று தந்தை உணர்த்தியது நினைவு இருந்தாலும் பூமாலை மீது கொண்ட விருப்பால் சின்னஞ்சிறு பெண்ணான கோதை இறைவனுக்குக் கட்டிய மாலையைத் தான் அணிந்து கண்ணாடியில் தன்னை அழகு பார்க்கிறாள். அம்மாலை தனக்கும் பெருமாளைப்போல அழகு தருவது கண்டு பெருமகிழ்ச்சி அடைகின்றாள். அதனால் தந்தை மாலையைக் கட்டி வைத்துவிட்டுச் சென்றதும் தான் அணிந்து பார்ப்பதும் பிறகு கழற்றிப் பூக்குடலையுள் வைப்பதும் அவளுக்கு வாடிக்கையாகி விடுகின்றது. கோதையின் செயலைப் பெரியாழ்வார் அறிந்தபோது பெரிதும் கடிந்து கொள்கிறார். ஆனால் இச்செயல் தொடர்ந்து நடைபெறுகிறது. அவளால் அவள் மனத்தைக் கட்டுப்படுத்த

முடியவில்லை. இதனைப் பெரியாழ்வார் கோதை **'சூடிக்கொடுத்த தூமலர்த் தாமமன்றிப் பிரிதெதுவும் தமக்குப் பிரியமற்றதாம்'** என்று பெருமானே வேண்டிக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றார். அன்று முதல் கோதை **'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி'** ஆகின்றாள். ஆண்டவராகிய பெருமாளுக்கே ஆட்பட்டு அவனுக்கே அடிமையாகி அவன் நினைவுகளிலே ஆழ்ந்து அவனையே ஆளப் பிறந்தமையால் கோதை ஆண்டாள் ஆனாள். பருவம் அடைந்த தனது மகளுக்கு மணமுடிக்க விரும்பினார் தந்தை பெரியாழ்வார். ஆண்டாளுக்கு எத்தகு மணாளன் வேண்டும் என்று அறிய விரும்புகிறார். தனது மகளிடம் கேட்டபோது ஆண்டாள் தயக்கமின்றி

**'மாலிருஞ்சோலை எம்மாயனுக்கு அல்லால்**
**மற்றொருவருக்குப் பேசல் ஒட்டேன்'**

என்று கூறுகின்றாள். ஆண்டாள் கண்ணனிடத்து குழந்தைப் பருவம் முதல் கொண்ட பற்றும், விருப்பும், ஈடுபாடும் காதலாகியதை அப்போது தான் அவளே உணர்கின்றாள். அதனால் தந்தையிடம்,

**'அவரைப் பிராயம் தொடங்கி என்றும்**
**ஆதரித்து எழுந்த என் தடமுலைகள்**
**துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்**
**தொழுது வைத்தேன்'** (நாச்சியார் திருமொழி பா-1)

என்று தெளிவுபட தன்னிலையை விளக்குகின்றாள்.

பெரியாழ்வார் திகைக்கிறார். **'உன் தோழி யாரும்மா'** என்று கேட்ட வினாவிற்குப் பதில் கூறுவதுபோல் மகள் உறுதியாகவும், தெளிவாகவும் உணர்ந்து உணர்த்தியக் கருத்து திடுக்கிட வைக்கிறது. அன்று கண்ணனுக்கு கட்டிய மாலையை அணிந்து அழகு பார்த்த ஆண்டாளின் செயல் விளையாட்டானதல்ல என்பதனைத் தெளிவாக உணர்ந்தார் தந்தை பெரியாழ்வார். மகளிடம் பெருமாள் 108 திவ்ய தேசங்களில் வீற்றிருக்கின்றார். இதில் யாரை மணவாளனாகத் தேர்ந்தெடுப்பது என்று வினவுகின்றார். 108 திருப்பதிகளின் பெருமைகளையும் கூறும்படி மகள் தந்தையிடம் வேண்டுகின்றாள். பெரியாழ்வாரும் பெருமானின் திருப்பதிகளின் சிறப்பினைக் கூறுவது தனக்குக் கிடைத்த பேறாகக் கருதி விளக்குகின்றார். தென்பகுதியில் திருவேங்கடம்-பூ மண்டபம்; காஞ்சிபுரம் தியாக மண்டபம் என்று குறிப்பிடுகின்றார். அதன்பின் திருவரங்கம் போக மண்டபமாகும் என்று உரைக்கின்றார். திருவரங்கத்தில் எழுந்தருளி யிருப்பவர் பெரிய பெருமாள்; பெரிய பிராட்டி; பெரிய கருடன்; பெரிய மதில்; பெரிய மங்களாசாசனம் என்ற பெருமையைக் கொண்டவன் திருவரங்கன் என்று கூறிய அளவில் ஆண்டாள் மூர்ச்சித்து விழுந்தாள். தனது தந்தைக்குத் தன்னவனைக்

காட்டித் தானும் உணர்ந்தாள் இதுவரை **'பக்தி'** என்று நினைத்த உணர்வு காதலாக வெளிப்பட்டது.

அதாவது தந்தையால் கண்டிக்கப்பட்ட **'சூடிக் கொடுத்த செயல்'** ஆண்டாளின் நனவிலி மனத்தில் ஆழப்பதிந்து விட்டது. **'சூடிக் கொடுத்தல்'** என்பது ஒரு பெண்ணுக்குத் திருமண நிகழ்ச்சியில் கணவனிடத்து மட்டுமே நிகழக்கூடிய உரிமையுடைய செயலாகும் என்பதனை அவள் மனம் உணர்கிறது. மானிடப் பெண்ணான தான் பெருமாளின் மாலையை அணிந்தது தவறு மட்டுமின்றி அதனையே அவனுக்குச் சூட்டிய செயலின் தவறும் வெளிமனத்தால் உணரப்பட்டு அச்சத்தையும், வருத்தத்தையும் தருகிறது. இதனை வெளிமனம் ஆழ்மனத்தில் தள்ளி விடுகிறது. அதுவே காதலாகியது. மணம் பேசும் சூழலில்தான் அவள் காதல் வெளிப்படுகின்றது. இதனை உளவியலாரின்,

**'மனிதனின் இயல்பான ஆசைகள் வெட்கம் அறியாதவை. பாலுணர்வு கொண்டவை. ஆனால் சமூக ஏற்புகள், சமூக மதிப்புகள் அவன் சார்ந்த பண்பாடு, அறநெறி ஒழுக்கங்கள் ஆயன அவனுடைய ஆசைகளை வெளிப்படுத்துவதில் சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்து கின்றன. எனவே அவன் சமூக ஏற்பிற்கு உரியதல்லாத தன் எண்ணங் களை, ஆசைகளை மனத்தகத்தே அடக்கிக் கொள்கிறான். இவை அவனுடைய நனவிலி மனத்தில் சென்று மறைந்து விடுகின்றன. நனவு மனமானது தொன்றுதொட்டு வரும் பண்பாட்டு மரபுகள் வெளி உலகச் சட்டங்கள், ஒழுக்கநெறிகள் ஆகியவைகளுக்கு ஏற்பவும் மனிதனின் விருப்பங்களை சமூக தராதரத்திற்கு ஏற்பவும் வெளிப்படுத்துகிறது.** (இரா. காஞ்சனா, 2000ப. 27) என்ற உளவியலாரின் கூற்று ஆண்டாளின் காதலுக்கு அரணாகின்றது. பெரியாழ்வார் குழந்தைப் பருவத்தில் கோதையை **'பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்'** என்று கொஞ்சுகிறார். இவர்கள் மூவருமே பெருமாளின் தேவியர். குழந்தைப் பருவத்திலே பெருமாளின் தேவிகளாக ஆண்டாள் தந்தையால் குறிக்கப்படுவதனால் அவள் காதலும் பெருமாளிடத்தே ஏற்படுகின்றது. அவ்வகையில் ஆண்டாளின் சூடிக் கொடுத்த செயலுக்கான காரணம் அவள் அரங்கனிடத்துக் கொண்ட காதலே ஆகும். மனிதர்களிடத்துக் கொண்ட காதலாயிருப்பின் அவளது காதல் அப்போதே வெளியே புலப்பட்டிருக்கும். இறைவனிடத்து கொண்ட காதலால் ஆழ்மனத்தில் புதைந்து தமக்கு மணம் பேசும் சூழலில் பண்பாட்டு உணர்வுடன் வெளிப்படுகிறது எனலாம்.

## நோற்றல்

**'நோற்றல்'** என்ற சொல் நோன்பு என்பதனோடு தொடர்புடையது. 'நோன்பு' என்பதற்கு அகராதி தரும் பொருள் **'சாப்பிடும் உணவு**

**வேளைகளைக் குறைத்தோ சில எளிய உணவை மட்டும் உண்டோ இறைவனை நினைந்து செய்யும் பிரார்த்தனை'** (காவ்யா, தமிழ், தமிழ் ஆங்கில அகராதி ப.800) என்பதாகும். ஆண்டாள் திருவரங்கப் பெருமானை அடைய இரு நோன்புகளை நோற்கிறாள். ஒன்று மார்கழி நோன்பு, மற்றொன்று தை நோன்பு ஆகும். மார்கழி நோன்பு பண்டைக் காலம் முதலே பாரதநாட்டில் வழிவழியாக பெண்களால் மேற்கொள்ளப் பட்டு வரும் மிகச்சிறந்த நோன்பாகும். இது ஒருவகை வரம் கேட்கும் நோன்பாகும். பெண்கள் இந்த மார்கழி நோன்பினை நீர்த்தேங்கி நிற்கும் குளங்களிலும் தடாகங்களிலும் நீராடி மேற்கொண்டிருக்கிறார்கள். இதற்கென்று வேத விதிகள் எதுவும் இல்லை. இத்தகு நோன்பு நோற்கும் முறையை ஆண்டாள் பாடல்களும் வலியுறுத்துகின்றன.

**'வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச்**
**செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்**
**பையத் துயின்ற பரமன் அடிபாடி**
**நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி**
**மையிட்டு எழுதோம் மலரிட்டு நாம் முடியோம்**
**செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்'**

(திருப்பாவை-2) என்று தமக்குத் தாமே சில கட்டுப்பாட்டு விதிகளை ஆண்டாள் விதித்துக் கொண்டு நோன்பினை மேற்கொள்கிறாள். **'நாராயணன் நமக்குப் பறை/வரம் தருவான்'** என்று நம்புகிறாள். ஆண்டாள் மார்கழி நோன்பினைக் கூட்டு வழிபாடாகச் செய்கின்றாள். ஆயர்குலப் பெண்கள் அனைவருக்கும் குலதெய்வம் கண்ணன். அதனால் அத்தனை பேரையும் அழைத்துக் கொண்டு செல்கிறாள். பெருமாளே! எங்கள் குலதெய்வமே! இங்கு நான் மட்டும் வரவில்லை, ஆயர்குலப் பெண்கள் அனைவரும் வந்துள்ளோம் என்று முப்பது நாளும் குறிப்பிடுகின்றாள். முப்பது நாட்கள் முடிந்தும் அவள் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை. கண்ணன் காட்சி தரவில்லை. ஆனாலும் மனம் தளரவில்லை ஆண்டாள். **'என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உனக்கே நாம் ஆட்சிசெய்வோம் உன்னை அவ்வளவு எளிதில் விட்டு விடமாட்டேன்'** என்று உறுதி கூறுகிறாள். இனி யார் காலைப் பிடித்தால் அரங்கனை அடையலாம் என்று சிந்திக்கின்றாள். அடுத்து வரும் தை, மாசி, பங்குனி ஆகிய மூன்று மாதங்களும் மன்மதனுக்கு உரிய மாதங்கள் ஆகும். மன்மதன் காமன் என்றும் அழைக்கப்படுகிறான். காமன் அழகிய இளைய கடவுள்; காதல் தெய்வம்; ஆன்மாவின் முதல் பிறப்பு என்று காமனை ரிக் வேதம் குறிப்பிடுகிறது. காமன் திருமாலின் மனத்தில் தோன்றியவன் இவன் இந்து சமயத்தில் மட்டுமின்றி சமண பௌத்த மதங்களிலும் குறிக்கப்படுகின்றான். இந்து சமயத்தில் காமன் யோகமூர்த்தியாக விளங்கிய சிவனைப் போக மூர்த்தியாக மாற்ற முயன்று

சாம்பலாகியவன். உடலற்று அனங்கன் ஆனபோதிலும் பெண்கள் தாம் விரும்பும் கணவரை அடையவும்; பிரிந்த கணவரைத் தங்களுடன் சேர்த்து வைக்கவும் காமனால் முடியும் என்று நம்பினர். எனவே தைமாதம் முதல் பங்குனி வரை காமன் நோன்பினை மேற்கொண்டனர். ஆண்டாளும் அரங்கனை அடைய அனங்கதேவா! தையொரு திங்களும் தரைவிளக்கித் தண் மண்டலமிட்டு, மாசி முன்னாள் வெள்ளை நுண் மணற்கொண்டு தெருவை அழகுசெய்து, விடியும் முன் நீராடி, முள்ளுமில்லா சுள்ளி எரிமடுத்து, முருக்கமலர் கொண்டு எப்போதும் உன்னடி வணங்கி முயன்றுன்னை நோற்கின்றேன்! காமதேவா வித்தகன் வேங்கடவாணன் என்னும் விளக்கினில் என்னைச் சேர்ப்பாய்! என்று விண்ணப்பிக்கின்றாள்! நெல் கட்டியரிசி, அவல், கரும்பு மறையவர் மந்திரம் ஆகிய இவற்றால் உன்னை வழிபடுகின்றேன். என்மீது இரக்கம் கொள் என்று கெஞ்சுகிறாள். நான் ஏதோ பித்தியைப்போல் பிதற்றுகின்றேன் என்றோ மானிடப் பெண் என்றோ என்னை எளிமையாக எடைபோட்டு விடாதே! எனது பெண்மை, இந்த மானிட வடிவு எல்லாம் ஆழி சங்கு உத்தமர்க்கு என்று உன்னித்து எழுந்தவை அதனால்

**'மானிடவர்க்கென்று பேச்சுப்படில்**
**வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!'**

என்று அறுதியிட்டு உறுதி கூறுகிறாள். ஆண்டாள் தந்தையிடம் கூட மாயனுக்கெல்லாம் மற்றொருவர்க்கு என்றுதான் குறிப்பிடுகிறாளே அன்றி மானிடர்க்கு என்று தெளிவுபடுத்தி உரைப்பது மன்மதனிடம் மட்டும் தான். அதற்குக் காரணம் தந்தை தனது மனம் அறிவார். ஆனால் காமனுக்கோ நாம் சொன்னால்தானே தெரியும் என்பதனால் தெளிவுபட தன் மன உணர்வைப் புலப்படுத்துகின்றாள். அதேபோல் தனது நோன்பின் திறத்தையும் காமன் விளையாட்டாக எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதனால்,

**'மாசுடை உடம்பொடு தலையுலறி**
**வாய்ப்புறம் வெளுத்து ஒருபோது உண்டு**
**தேசுடைத் திறனுடைக் காமதேவா, நான்**
**நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள் கண்டாய்!**

(நாச்சியார் திருமொழி-8) என்று தெளிவுறுத்துகிறாள். ஆண்டாள் தனியொருவளாக தன் விருப்பம் நிறைவேறச் செய்யும் நோன்பு காமன் நோன்பு. அதனைப் பெருமாளுக்கு செய்யும் கைங்கர்யம்போல் சிரத்தையோடு செய்கிறாள்.

**'காமதேவனே! புராண! சுவரில் நின் பேரெழுதிச்**
**சுறவநற்கொடிகளும் துரங்கங்களும்**
**கவரிப் பிணாக்களும் கரும்புவில்லும்**
**காட்டித் தந்தேன் கண்டாய்'** (நாச்சியார் திருமொழி - 3) என்று

ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துச் செய்கிறாள்; எடுத்தும் உரைக்கிறாள்! இந்த நோன்புதான் அரங்கனிடத்துத் தன்னைச் சேர்க்கும் என்ற மன உறுதியோடும் முறையாகவும் செய்கின்றாள். காமனுக்கு நம்மீது இரக்கம் ஏற்பட்டிருக்கும். அதனை எப்படியாவது அறிந்துகொள்ள வேண்டும் என்று ஆவலுறுகின்றாள். **'கூடல் இழைத்துப் பார்த்தால் என்ன'** என்று நினைக்கிறாள். கூடல் இழைத்தல் என்றால் கண்ணை மூடிக்கொண்டு வட்டம் போட வேண்டும். அது இணைந்து விட்டால் நினைத்த காரியம் நடைபெறும். இல்லாவிடில் நடைபெறாது என்பது தொன்றுதொட்டு வரும் நம்பிக்கை. இதில் மற்றொரு வகை உண்டு. ஒரு பெரிய வட்டம் அதனுள் சிறு சிறு வட்டங்கள் போட வேண்டும். எண்ணிக்கையில் இரட்டையாக வந்தால் நினைத்த செயல் நடைபெறும்; ஒற்றையாக வந்தால் நடைபெறாது என்பதாகும். இவ்விரு வகைகளைப் பற்றியும் சமய இலக்கியங்களும் சங்க இலக்கியங்களும் பேசுகின்றன. இது நம்பிக்கையால் ஏற்பட்ட பழக்கமன்று உளவியல் அடிப்படையால் ஆன செயலாகும் **'யுங்'** என்னும் உளவியல் அறிஞர் குறிப்பிடும் **'இயற்படிவ கொள்கை'**யே (Concept of Self) கூடலிழைத்தல் ஆகும். யுங் **'எதிர்எதிரான சக்திகள் அல்லது முரண்பாட்டு எண்ணங்களின் ஒருமைப்பாட்டு நிலையை அறிய மிக நுணுக்கமான கூறுகளைக் கொண்ட மண்டலங்கள் என்று கூறப்படும். வட்ட வடிவங்களை வரைந்து அம்மண்டலக் கூறுகள்வழி மனதில் மையம் கொண்டுள்ள எண்ணங்களின் முடிவை உணரலாம்'** என்றுரைத்தார். (வை. சச்சிதானந்தன் 1985 ப. 207) மண்டலம் என்பது வட்ட வடிவம்; நுணுக்கக் கூறு என்பது உள்வட்டங்கள் ஆகும். இவ்வகையில் இறை நம்பிக்கை உடைய ஆண்டாளின் கூடல் இழைத்தல் செயலும் உளவியல் வெளிப்பாடாகும்.

**'காட்டில் வேங்கடம், கண்ணபுர நகர்**
**வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்**
**ஒட்டரா வந்தென் கைப்பற்றி தன்னொடும்**
**கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே'**

(நாச்சியார் திருமொழி-31) என்று சொல்லியவாறு கூடல் இழைக்கிறாள். பலனில்லை' இனி என்ன செய்வது மன்மதனின் குயில் நினைவுக்கு வருகின்றது.

**'பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப்**
**புணர்வதோர் ஆசையினால் என்புருகி**
**இனவேல் நெடுங்கண்கள் இமை**
**பொருந்தாது பலநாளும் துன்பக்கடல்**
**புக்கு வைகுந்தன் என்பதோர் தோணி**

**பெறாது உழல்கின்றேன் உலகளந்தானை**
**கூவி என்னிடம் அழைத்து வா'** (நாச்சியார் திருமொழி - 47) என்றால் அதுவும் அழைத்து வரவில்லை.

ஆண்டாள் மனம் கலக்கம் அடைகிறது. அரங்கனை அடைவோமோ, மாட்டோமோ என்று அல்லலுற்று குழம்புகிறாள். குழப்பத்தோடு கண்ணயர்கின்றாள்.

## வரைதல்

**'வரைதல்'** என்பது திருமணம் செய்தல் என்பதாகும். ஆண்டாளின் திருமணம் கனவாக வெளிப்படுகின்றது.

**'வாரணம் ஆயிரம் சூழ வலம்வந்து**
**நாரணன் நம்பி நடக்கின்றான் என்று என்எதிர்**
**பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்**
**தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழி'**

(நாச்சியார் திருமொழி - 52) என்றும்

**'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத**
**முத்தடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து என்னைக்**
**கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழி'**

(நாச்சியார் திருமொழி - 53) என்றும் தோழியிடம் கூறுகின்றாள்.

ஆண்டாளின் கனவு என்பது அவளது மனஉணர்வு வெளிப்பாடாகும். தன்னுடைய திருமணம் மானிட திருமணம் அல்ல. மனித உயிர்களைப் பாதுகாக்கும் கடவுளுடன் கூடிய திருமணம் என்பதனால்தான் ஆயிரம் பொற்குடத்துடன் மிக உயர்வாக வெளிப்படுத்துகின்றாள். தனக்குத் திருமணம் நடந்து விட்டதையும் **'கைத்தலம் பற்றியதாகக்'** குறிப்பிடுகின்றாள். இப்பத்துப் பாடல்களிலும் வெளிப்படும் ஆண்டாளின் கனவு மன உணர்வுகள் உளவியல் அறிஞர் தம் கருத்துக்களை அரண் செய்கின்றன. முதலில் **'கனவு என்பது மனக்குழப்பத்திலிருக்கும் போதும், மன அழுத்தம் வெளியேற விரும்பும் நிலையிலும்** (Ventilation) **தோன்றுகிறது.'** (வை. சச்சிதானந்தன் 1985 ப. 205) என்பது கனவின் அடிப்படைக் கருத்தாகும். ஆண்டாள் கனவும் அப்படித்தான் ஏற்படுகின்றது. மார்கழி நோன்பு, காமன் நோன்பு ஆகிய இரண்டினையும் மேற்கொள்ளும்போது ஆண்டாளுக்கு இருந்த நம்பிக்கை கூடலிழைத்தலில் ஏற்பட்ட எதிர்மறை முடிவால் குழப்பமடைகின்றது. அதன் காரணமே இக்கனவு ஆண்டாளுக்கு ஏற்படுகின்றது.

ஆண்டாளின் கனவு மன உணர்வு வெளிப்பாட்டிற்குப் பல்வேறு உளவியல் அறிஞர் தம் கருத்துக்களும் பொருந்தி வருகின்றன. உளவியலின் தந்தை ப்ராய்டு தனது **'கனவு விளக்கம்'** என்னும் நூலில்,

**'கனவு என்பது ஒருவரின் விருப்பங்களை நிறைவேற்றும் ஒரு வழியாகும்'** (மேலது. ப. 206) என்றும், ஆட்லர் என்னும் அறிஞர், **'கனவு அடைபட்டிருக்கும் கடந்தகாலத்து இச்சைகளைக் குறிப்பது அல்ல; கனவு மனிதனது ஒருவகை நடத்தை; அதுவும் அவனது வாழ்க்கை அமைப்பைக் குறிப்பது; கனவு ஒருவனது வருங்கால வாழ்க்கைக் குறிக்கோள் பற்றியும், அதனை அடைய அவனுடைய வாழ்க்கைச் சிக்கல்கள், கலக்கங்கள் பற்றியும் குறிப்பது'** என்றும்

உட்வொர்த் என்னும் உளவியல் அறிஞர்,

**'கனவு மனிதனின் நிறைவேற்றப்படாத எண்ணங்களே ஆகும்'** (மேலது ப.206) என்றும் உரைப்பது கனவு உளவியலோடு தொடர்புடையது என்றும், உள்ளத்தில் எழும் கலக்கங்களால் தோன்றுவது என்றும் புலப்படுத்துகிறது.

இவ்வாறு ஆண்டாள் பாடல்களில் அவளது மன உணர்வுகள் வெளிப்படுகின்றன.

## முடிவு

குழந்தைப் பருவத்தில் வித்திட்ட உணர்வுகள் அழிக்க முடியாதவை. பாசம், நட்பு, பக்தி ஆகிய எத்தகைய உணர்வாக இருப்பினும் பெரியவர்களாகும்போது அதன் வெளிப்பாடு ஆணித்தரமாக இருக்குமே அன்றி குறையாது, மாறுபடாது. அவ்வகையில் தந்தை பெரியாழ்வாரால் ஆண்டாளின் குழந்தைப் பருவத்தில் வளர்க்கப்பட்ட பக்தி அவளது பிராயத்தில் பெருமாளிடத்துக் காதலாக மாறியது. காதலனை மணாளனாக அடையத் துடிக்கும் பெண்ணின் மன உணர்வுகளே திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் ஆகும். ஆண்டாள் பாடல்களில் இலக்கை அடையத் துடிக்கும் அகத்தவம் பாவை நோன்பு, புறத்தவம் காமன் நோன்பு ஆகும்.

குழப்பமுற்ற மனத்தின் வெளிப்பாடே கனவு என்பது ஆண்டாள் பாடல்களில் புலனாகிறது.



# ஆண்டாள் பாசுரங்களில் இசை

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் நாச்சியார் பாடிக்கொடுத்த பாசுரங்கள் தமிழிசைக்குக் கிடைத்த சிறந்த படைப்புக்களாகும். இளமைப் பருவத்திலேயே இறைவனிடம் பக்தி கொண்ட ஆண்டாள், "மானிடவர்க்குப் பேச்சுப்படில் வாழகிலேன்" என்னும் உறுதி பூண்டிருந்தாள். இம்மனவுறுதியும் உணர்வுகளும் இன்னிசைப் பாடல்களாகவே வெளிப்பட்டன. இவ்வெளிப்பாடுகளே திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் ஆகும். இறைவனின் அருள்பெறப் பாடிய இவ்விரண்டும் இனிய இசை வடிவங்களாகும். இவற்றில் பொருந்தியுள்ள இசைக்கூறுகளைக் காண்பது இக்கட்டுரையின் நேக்கமாகும்.

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தப் பாடல்களை ஒவ்வொரு ஆயிரமாக வகைப்படுத்தியுள்ளனர். இவற்றுள் மூன்றாவது ஆயிரம் மட்டும் இயற்பா என்று அழைக்கப்படுகிறது. இதனால் மற்றைய மூன்று ஆயிரங்களும் இசையோடு பாடுவதற்குரிய பாடல்களே என்பது விளங்கும். இவற்றுள் ஆண்டாள் நாச்சியாரின் திருப்பாவையும் நூற்றி நாற்பத்து மூன்று பாடல்களைக் கொண்ட நாச்சியார் திருமொழியும் இசைப்பாக்களாலான முதலாயிரத்தில் மூன்று நான்கு பிரபந்தங்களாக உள்ளன. எனவே திவ்வியப்பிரபந்தப் பாடல்களின் வகைப்பாட்டிலேயே ஆண்டாள் பாசுரங்கள் இன்னிசைப் பாடல்கள் என்பது புலனாகின்றது. மேலும்,

"பொன்னியல் மாடம் பொலிந்து தோன்றும்
பதுவையார் கோன் விட்டு சித்தன் கோதை
இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை,
யேத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே" (திருமொழி12)

என்று கூறுகின்ற போதும் ஆண்டாள் பாடல்கள் இன்னிசைப் பாடல்கள் என்பது விளங்கும்.

"மாதங்களில் மார்கழி நானே" என்றான் கண்ணன். சிறப்புக்கு உரிய இம்மாதத்தில் ஆண்டாள் நாச்சியார் பாவை நோன்பியற்றி பரந்தாமனை அடைய வேண்டுமென விழைகின்றாள். இதற்காக ஆயர்பாடிப் பெண்களையெல்லாம் ஒருசேர அழைத்து பாவை நோன்புப் பாடல்களை இன்னிசையோடு பாடிப்பாடிக்களித்திருக்கின்ற சிறப்பைத் திருப்பாவைப் பாடல்களிலேயே காணலாம். பாவை நோன்பும் அதற்கு அடிப்படையாக இசையும் ஒன்றாக இணையும் போது தன் மனத்திற்கு இனியவனை எளிதில் அடையலாம் என்று எண்ணினாள். எனவேதான்,

"வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினுள் தூசாகும்" (திருப்-5) என்று பாடியிருக்கிறாள்.

நோன்பு நோற்பதற்குத் தம் தோழியரை அழைக்கிறபோது "மதிகெட்டபெண்ணே! கீசு கீசு என்று எங்கும் ஆனைச்சாத்தான் பறவைகள் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ? ஆய்ச்சியர் தயிரின் ஒலியும் கேட்டிலையோ? இதற்கும் மேலாக நாராயண மூர்த்தி கேசவனை நாங்கள் பாடிக்கொண்டேயிருக்கின்றோம். அதையும் நீ கேட்டுக்கொண்டே கிடக்கின்றாயே! என்று சற்றுக் கோபமாகக் கேட்கின்றாள்.

"புள்ளின் வாய் கீண்டானை பொல்லா வரக்கனை
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளை களெல்லாரும் பாவைக்களம் புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று" (திருப்13)

இன்னும் கிடந்து உறங்குகின்றாயே என்று எழுப்புகிற போதும் அதிகாலைப் பொழுதில் இசைப்பாடல்களைப் பாடிக்களித்தமையை அறிய முடிகின்றது.

இவ்வாறு பாடிக் களிக்கின்றபோது இசையோடு நீராடியும் களித்திருக் கின்றனர் என்று அறியலாம். இதனால்தான் ஆண்டாள் ஆழிமழைக் கண்ணனை அழைத்து,

"ஆழியுள் புக்கு முகந்து கொடார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கருத்து
பாழியந் தோளுடைய பற்பநாபன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பவாய்!"

என்று மழையை வேண்டிப் பாடியிருக்கிறாள். அதோடு

"மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்"

என்று தோழியரை நீராட அழைத்துள்ள பெருமையையும் அறிகிறோம். பண்டைத் தமிழகத்தில் கடலிலும் ஆற்றிலும் அருவியிலும் தடாகங்களிலும் ஆடவரும் பெண்டிரும் நீராடி மகிழ்ந்துள்ளனர் என்பதைப் பரிபாடல் வையைப் பாடலிலிருந்து அறிகின்றோம். நீராடுகிற போது இசைக்கருவிகளின் ஓசையைத் தம் கைகளாலும் விரல்களாலும் உருவாக்கி உளம் மகிழ்ந்தனர் என்பதை சீவகசிந்தாமணி செய்யுளின் மூலமும் அறிகின்றோம்.

"தண்ணுமை முழவ மொந்தை தகுணிச்சம் பிறவுமோசை
எண்ணிய விரலோ டங்கை புறங்கையினிசைவாக்கித்
திண்ணிதிற் தெறித்து மோவார் கொட்டியுங் குடைந்துமாடி
ஒண்ணுதல் மகளிர் தம்மோடுயர் மிசையவர்கள் ஒத்தார்
(குணமாலையார் இலம்பகம் 115)

என்னும் பாடல் தண்ணுமை, முழவம், மொந்தை, தகுணிச்சம் போன்ற தோற்கருவிகளின் ஓசையைக் கைகளால் உருவாக்கி இன்புற்றனர் என்று உணர்த்தும் கருத்து ஒப்புநோக்கத்தக்கது.

ஆண்டாள் நாச்சியார் பண்ணோடு இசைத்துப்பாடக்கூடிய பாடல்களுக்குப் பொருத்தமான துணைக்கருவியாக "பறை" என்னு தாள இசைக் கருவியே பயன்பட்டுள்ளது என்பதும் இவண் குறிப்பிடத்தக்கது. பறை என்பதைப் பேரிவாத்தியம் என்பர். நிலப்பாகுபாட்டை வகைப்படுத்தியுள்ள தொல்காப்பியர் "பறை" க்கு சிறப்பான இடத்தைக் கொடுத்துள்ளமை கருதத்தக்கது. வேள்வி செய்கிறபோதும் இக்கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். ஆண்டாளும் நோன்பு என்கிற யாகத்தைச் செய்கிற போது அதற்கு இசைந்த இசைக்கருவியாகப் பறையைக் கொள்கிறாள். இதனை,

"நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய் (திருப் 25)

பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே (திருப் 26)

ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் வண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான் (திருப்.16)

என்ற பாடல்கள் வாயிலாக அறியலாம். **The Drum symbol in Thiruppavai** என்று பறை பற்றித் தனியாகவே ஓர் ஆய்வு நிகழ்ந்துள்ள தாகக் கூறுவர். பறையோடு சங்குகளும் முழங்கியிருக்கின்றன. இத்தகைய இசைக்கருவிகளோடு பாவைப் பாடல்களைக் காலைப்பொழுதில் பாடியுள்ளனர்.

பண்பல செய்கின்றாய் பாஞ்ச சன்னியமே என்று பாடுகின்ற ஆண்டாள் நாச்சியார் பாஞ்ச சன்னியத்தில் பல்வேறு வகையான பண்களைக் கேட்டு இன்புற்றவர் எனத் தெரிகின்றது. ஆண்டாள் மன்னும் பெரும்புகழ் மாதவனிடம் மணிவண்ணனிடம் தன் மனதைப் பறிகொடுக்கிறாள். தன் விரக வேதனையை யாரிடம் சொல்லி அந்த

வேங்கடவனிடம் தூது அனுப்புவது என்று சிந்தித்த போது அதற்குரிய பாத்திரமாகக் குயிலைத் தேர்ந்தெடுக்கின்றாள். இசைபாடும் குயிலால் எம்பெருமானை அழைத்தால் என் கருமாணிக்கம் உறுதியாக வருவான் என்று கருதுகிறாள். குயிலைத் தூதனுப்புகிற ஆண்டாள் பாடல்களனைத்தும் இசைநயம் பொருந்தியவை.

"கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக் களித்திசைபாடும் குயிலே"

"போதலர் காவில் புதுமணம் நாறப் பொறிவண்டின்
காமரங் கேட்டு உன்காதலியோடு வாழ்கிற குயிலே"

என்று அழைக்கிறபோது ஆண்டாள் நாச்சியாரின் இசைப்புலமை வெளிப்படுகிறது. இப்பாடலில் சோலையில் உள்ள வண்டுகள் சீகாமரப் பண்ணை இசைக்கிறது என்று கூறப்பட்டுள்ளது. இந்தப் பண்ணைக் கேட்டுக் கொண்டேயிருக்கின்ற சோலைக்குயிலுக்கும் சீகாமரப் பண்ணை இசைக்கும் ஆற்றல் உண்டு என்று ஆண்டாள் கருதுகின்றாள்.

சீகாமரம் என்பது நாத நாமக்கிரியை என்னும் இராகத்தைக் குறிக்கும். "நாதோர்மயம் பரப்ருஹ்மம்" என்று கூறுவர். அந்த பரப்பிரம்மம் என்று சொல்லப்படுகின்ற இறைவன் நாமத்தை உள்ளம் உருகிப் பாடச்செய்யும் ராகமிது. அதனால்தான் இந்த ராகத்திற்கு நாதநாமகிரியை என்று பெயர் வந்தது. நாதம் + நாமம் + கிரியை என்று பிரிப்பர். இந்த இராகம் அதிகாலைப்பொழுது இராகமாகும். பக்தி உணர்வு மேலிட கருணாரஸம் வெளிப்பட மனதினை மயக்கும் இசையாகும். எனவேதான் இந்த இசையைப் பாடவல்ல குயிலைத் தூதாக அனுப்புவது மிகப் பொருத்தம் என்று கருதியிருக்கின்றாள். ஆண்டாள் நாச்சியார் பொருத்தமான இசையைப் பொருத்தமான இடத்தில் பயன்படுத்தி யிருப்பது புலனாகின்றது. மேலும் இன்று இசையரங்குகளிலும் நாட்டிய அரங்குகளிலும் "பதம்" என்று அழைக்கப்படுகின்ற சிருங்கார ரசப்பாடல்கள் அதாவது தெய்வத்தின் மீது மையல் கொண்டு பாடப்படுகின்ற பாடல்களை இசைக்கின்றார்கள். தலைவன் தலைவியின் உணர்வு வெளிப்பாட்டுப் பாடல்களை நாயகன் நாயகிப்பாடல்கள் என்று குறிப்பிடுவர். ஆண்டாள் வேங்கடவனிடம் காதல் கொண்டு குயிலிடம் தூது சொல்லி அனுப்புகிற பாடல் பின்னால் பதங்களை இயற்றுவதற்கு அடிப்படையாக இருந்தது (பழந்தமிழர் ஆடலில் இசை.ப.67)

இசையோடு பாடக்கூடிய பாடல்களுக்குத் தாளநடையும் சந்தங்களும் இயல்பாகப் பொருந்தியிருக்க வேண்டும். ஆண்டாள் பாடல்களின் இந்த இசைப் பண்பினைக் காணமுடிகின்றது. "தாளம்" என்பது பாட்டின் நடையை ஓர் கட்டுப்பாட்டுக்குள் உள்ளடக்கி நிலை நிறுத்தும் தன்மை வாய்ந்தது. தாளங்களின் எண்ணிக்கை அளவற்றது. இதை,

தென்றல் வடிவுஞ் சிவனார் திருவடிவும்
மன்றல் வடிவு மதன் வடிவுங் - குன்றாத
வேயனிசை வடிவும் வேதவடீவுங்காணில்
ஆயதாளங் காணலாம்"

என்ற செய்யுள் உணர்த்துகின்றது.

தாளங்களின் நடையை மும்மை நடை, (தகிட) நான்மை நடை (தகதிமி), ஐம்மை நடை (தகதகட), எழுமைநடை, (தகிடததிமி) ஒன்பான்மை நடை (தகதிமிதகததகிட) என்று வகைப்படுத்துவர்.

தகதகிட தகதகிட தகதகிட தகததிட
மத்தளம் / கொட்ட / வரிசங்கம் / நின்றூத!
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னை
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான்

என்ற பாடல் எழுமை நடையில் (தகதகிட) அமைந்துள்ளது.

ஆண்டாள் பாடல்களில் தாளம் தனி ஆய்விற்குரியது.

பாடல்களை இசையோடு பாடுகிறபோது தாளத்திற்கு ஏற்ற வகையில் "எடுப்பு" என்ற இசையணி அமைந்திருக்கும். ஏனெனில் சீர்கள் தாளத்திற்குக் கட்டுப்பட்டவை.

மாலேமணிவண்ணா மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவனக் கேட்டியேல்

என்ற பாடல் அரை இடத்திற்கு எடுத்து

ஆதித்தாளத்தில் பாடுவது இசை இனிமையைக் கொடுக்கும்.

"தெள்ளியார் பலர்" எனத் தொடங்கும் நாச்சியாரின் நான்காவது திருமொழியில்,

"அற்றவன் மருதம் முறிய நடை
கற்றவன் கஞ்சனை வஞ்சனையிற்
செற்றவன் திகழும் மதுரைப்பதி
கொற்றவன் வரில் கூடிடு கூடலே" என்று

கூடலிழைத்துப்பாடும் பாடல் "முடுகு" என்னும் இசைநயம் பொருந்தியது. முடுகு என்பது ஒருவகை சந்தம். தொல்காப்பியர் குறிப்பிடும் 20 வண்ணங்களில் "முடுகு" என்பதும் ஒன்று இது "அராகம்" என்னும் ஓர் உறுப்பாகக் கலிப்பாடலில் இடம்பெறுவதைக் காணலாம். குற்றெழுத்துக்கள் ஒன்றிவரத் தொகுக்கப்படுவது அராகமாகும். இந்தச் சந்தங்கள் இசைப்பாடலுக்கு இனிமையைக் கொடுக்கும். ஆண்டாள் பாடல்கள் பலவற்றில் சந்த வகைகளைக் காணலாம்.

"தையொரு திங்கள் என்று தொடங்கும் முதல் திருமொழியில் பங்குனி நாள் திருந்தவே நோற்கின்றேன் காமதேவா என்று மன்மதனை அழைத்து,

"கருவுடை முகில் வண்ணன் காயாவண்ணன்
கருவினை போல் வண்ணன் கமலவண்ணன்"

என்று பாடும் பாடல் இசைப்பாட்டுக்குரிய சிறந்த சொற் கட்டுக்களை யுடையது. இதுபோலவே,

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?

என்ற பாடலும் இசைநயம் பொருந்தியது.

ஆண்டாள் பாசுரங்கள் அனைத்தும் இசைப்பாடல்களாக இருப்பினும் அக்காலத்தில் எத்தகைய பண்களில் பாடியுள்ளனர் என்பதற்கான சான்றுகளை இசைக்குறிமானங்களோடு (Notation) நாம் பேணி பாதுகாக்கவில்லை. தற்போது ஆண்டாள் பாசுரங்களைப் பலரும் தங்கள் கற்பனை வளத்திற்கு ஏற்றவாறு பலரும் பல பண்களில் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இசையரங்குகளிலும் ஆடலரங்குகளிலும் திருப்பாவைக்கும் நாச்சியார் திருமொழிக்கும் தனியானதொரு இடம் உண்டு. இருப்பினும் தற்போது தேவார திருவாசக நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களின் பண்கள் தாளங்கள் பற்றிய ஆராய்ச்சிகளை இசையறிஞர் பலர் மேற்கொண்டிருக்கின்றனர்.

இவ்வகையில் முனைவர். எச். இராமநாதன் இசையரசு தண்டபாணி தேசிகர் முதலியோர் சுரதாளக் குறிப்புக்களோடு சில பாசுரங்களை வெளியிட்டிருப்பதாக அறிகிறோம். சங்கீத வித்வான் வி. அனந்தராமன் புதிய புதிய மெட்டுக்களோடு பாசுரப்பாடல்களை "தமிழ்மறை இசைமாலை" என்றும் தொகுப்பை வெளியிட்டுள்ளார். (பரத நாட்டியத்தில் தமிழிசைப் பாடல்கள் ப.158.)

இசையணிகள் நிறைந்த ஆண்டாளின் பாசுரங்கள் தமிழிசைக்குச் சிறப்புச் சேர்ப்பவை மார்கழி நோன்பிற்கு இசைப்பாடல் இனிமை சேர்த்திருக்கின்றது. பாவை நோன்பிற்கு இசைப்பாடல் மட்டுமின்றி பறையென்ற தாளக்கருவியும் பயன்பட்டிருக்கிறது. பல்வேறு பண்களோடு பெண்கள் பாவைநோன்புப் பாடல்களை இசைத்து நீராடி இறைவனின் புகழை வாயாரப்பாடி மகிழ்ந்திருக்கிறார்கள் என்பது இசைக்கு மேன்மை சேர்ப்பதோடு மட்டுமின்றி தமிழ்ப்பண்பாட்டின் மரபைப் பறைசாற்றுவ தாகவும் அமைகின்றது.



# ஆண்டாள் பாடல்களில் நாட்டுப்புறப்பாங்கு

## முன்னுரை

சமணமும் பௌத்தமும் சங்ககாலத்தும் காப்பிய காலத்தும் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருப்பதைப்போன்றே இந்து சமயத்தின் இரு கண்கள் எனப்போற்றப்படும் சைவ, வைணவ மதங்களும் புத்துணர்வு பெற்றன. சைவத்தை வளர்க்க நாயன்மார்களும், வைணவ த்தை வளர்க்க ஆழ்வார்களும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் இசையோடு கூடிய பாடல்கள் பலபாடி பக்தி நெறியினைப் புகட்டினர். அவர்களுள் **'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி'**, என்று சிறப்பிக்கப்பட்ட ஆண்டாள், 'கோதை' எனும் பெயர் தாங்கிப் பெரியாழ்வாரால் சீரோடும் சிறப்போடும் வளர்க்கப்பட்டார். மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் என்ற மனவுறுதியோடு வாழ்ந்தவர். இளம் வயதிலேயே திருவரங்கத்துக் கண்ணன்மேல் காதல்கொண்டு கவின்மிகு கருத்துக் கவிதைமலர்களைத் தூவினவர். அவையே நாலாயிரம் திவ்விய பிரபந்தத்தில் முதல் ஆயிரத்தில் இடம்பெற்றுள்ள திருப்பாவையும் நாச்சியார் திருமொழியுமாகும். அவற்றில் நாட்டுப்புறப்பாங்கு மிளிர்வதைக் கண்டறிவது இவண் நோக்கமாகிறது.

## நாட்டுப்புறப்பாங்கு

இறைவனால் இயக்கப்படுபவர்கள் மானுடர்கள் என்பதை உணர்ந்து, அவ்விறைவனை நாயகனாகவும், தங்களை நாயகிகளாகவும் கொண்டு பேரின்பம் காண முயன்றனர் இறையடியார்கள். அவர்களைப் போன்றே ஆண்டாளும் நாயகன் நாயகி உறவின்மூலம் இறையின்பத்தைத் துய்க்கத்துடித்தாள். அதில் வெற்றியும் பெற்றாள். தான் அனுபவித்த இறையின்பத்தைச் சாதாரண மக்களும் உணர்ந்து அனுபவிக்க அவாக் கொண்டாள். அதனால், தான் உணர்ந்த இறையின்பத்தை அனைவரும் உணரவேண்டும் என்று எளிய இனிய சொற்களால் பாமாலைகள் புனைந்தாள். ஆயர்குலப் பெண்ணைப் போன்றில்லாமல் ஆயர்குலப் பெண்ணாகவே மாறினாள். கண்ணனின் பெருமைகளை நாட்டுப்புறப் பாங்கில் பாடி ஆண்டவனை அடையும் நெறிகாட்டினாள். அவளது பாடல்களில் நாட்டுப்புறப்பாடல்களின் தன்மைகளைக் காணலாம். நாட்டுப்புற வழக்காறுகளையும் உணரலாம். கிராமியச் சூழலையும் அறியலாம்.

## நாட்டுப்புறப் பாடல் தன்மை

பிறவி எளிமையுடையன நாட்டுப்புறப் பாடல்கள். ஆண்டாள் பாடல்களும் அனைவராலும் எளிதில் புரிந்துகொள்ளும் பான்மையன. உள்ளத்தில் உணர்ந்தவற்றை மிக எளிய பேச்சு வழக்கில் வழங்கப்படும் சொற்களால் வெளிப்படுத்தும் நாட்டுப்புறப் பாங்கினையும் ஆண்டாள் பாடல்கள் கொண்டிலங்குகின்றன என்பதற்குக்

**'கீசுகீசு என்றெங்கும் ஆனைச் சாத்தம் கலந்து**
**பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே**
**காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து**
**வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்**
**ஓசைப்படுத்தத் தயிரரவம் கேட்டிலையோ'**

- திருப்பாவை - 7

என்ற பாடல் வரிகளைச் சான்று காட்டலாம்.

## வந்த சொல்லே மீண்டும் வரல்

வாய்மொழியாகப் பாடப்பட்டுவரும் நாட்டுப்புறப் பாடல்களில் வந்த சொல்லோ தொடரோ மீண்டும் வரக் காணலாம். பரம்பரை பரம்பரையாகப் பாடப்பட்டுவரும் நாட்டுப்புறப் பாடல்கள் எளிதில் மனதில் தங்குவதற்கும், மறக்காமலிருப்பதற்கும், சொல்ல வருகின்ற கருத்தை வலியுறுத்து வதற்கும் வேண்டுகோள் விடுக்கின்றதற்கும் ஒரே சொல் பல இடங்களில் இடம்பெறுதல் உண்டு. ஆண்டாள் பாடல்களும்,

**'பாரோர்புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்'** - (திருப்பாவை - 1)
**'உய்யுமாறு எண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்'** - (திருப்பாவை-2:5)
**'நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்'** - (திருப்பாவை- 3?5)

என்று ஒரே சொல்லை இறுதியில் பெற்று நாட்டுப்புறத் தன்மையினைப் பெறுகின்றன.

சிறிய வீடுகட்டி விளையாடிக் கொண்டிருக்கும் ஆயர்குலப் பெண்கள், அதனை அழிக்கவரும் கண்ணனை அழிக்காதே என வேண்டுகின்றனர். அச்சூழலில் தங்களின் வேண்டுகோளுக்குச் செவிமடுக்க வேண்டும் என்பதை வலியுறுத்த **'எங்கள் சிற்றில் வந்து சிதையல்'** எனப் பலமுறை கேட்டுக்கொள்ளும் இடத்தில் ஒரே தொடர் மீண்டும் வரக் காணலாம்.

மாயவன் தன்னைத் திருமணம் செய்யக்கண்ட தூய்மையான கனவினைத் தோழியிடம் உறுதிப்படுத்தும் சூழலிலும் ஒரே சொற்றொடர் திரும்பத் திரும்ப வருகின்றது. இதற்குப் **'பூரணப் பொற்குடம் வைத்துப்**

**புறமெங்கும், தோரணம் நாட்டக்கனாக் கண்டேன் தோழி'** - (நாச்சியார் திருமொழி - 61) **'காப்பு நான் காட்டக் கனாக் கண்டேன் தோழி நான்'** - (நாச்சியார் திருமொழி - 64) **'என்னைக் கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழி நான்'** - (நாச்சியார் திருமொழி - 66) என்பன போன்ற தொடர்கள் சான்று பகர்கின்றன. இவற்றோடு **'கூடிடு கடலே', 'வரக்கூவாய்'** போன்ற சொற்றொடர்களும் மீண்டும், மீண்டும் வந்து நாட்டுப்புறப் பாடல் பாங்கினை மிகுவிக்கின்றன.

## கூட்டுப்பாடல் வடிவம்

பல்வேறு சூழ்நிலையில் நாட்டுப்புற மக்களால் பாடப்படும் பாடல்கள் அனைத்தும் கூட்டுப்பாடல் வடிவின. ஆண்டாள் பாடல்களும் கூட்டுப் பாடல் வடிவில் அமைந்து நாட்டுப்புறப் பாடல் பண்பினைப் பெறுகின்றன. மாதம் மும்மாரி பெய்து நாடு செழிக்கவும் நல்ல கணவனைப் பெறவும் மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில், பாவை நோன்பிருக்கும் இடையர்குலப் பெண்கள் அதிகாலையில் நீராடச் செல்ல விழைகின்றனர். எனவே கோழியழைப்பதன் முன்னம் கண்விழித்த பெண்கள் உறங்கிக் கொண்டிருக்கும் பெண்களை வீதிதோறும் சென்று எழுப்புகின்றனர். இந்நிகழ்ச்சியை விளக்கும் பாடல்கள் அனைத்தும் கூட்டுப்பாடல் வடிவிலேயே அமைந்துள்ளன. இவ்வுண்மையினைக்

**'கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு**
**மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்**
**போவான் போகின்றாரைப் போகாமற் காத்துன்னைக்**
**கூவுவான் வந்து நின்றோம் கோதுகலமுடைய**
**பாவாய் எழுந்திராய் பாடிப் பறைகொண்டு**
**மாவாய்ப் பிளந்தானை மல்லரை மாட்டிய**
**தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்**
**ஆவாவென்று ஆராய்ந்து அருளேலோரெம்பாவாய்'**

- (திருப்பாவை - 8)

என்ற பாடல் வலியுறுத்துகின்றதை உணர முடிகின்றது.

## உறவுமுறைச் சொற்கள்

நாட்டுப்புற மக்கள் சாதி மதம் இனம் வேறுபாடின்றி ஒருவரை ஒருவர் உறவு சொல்லி அழைப்பதை இன்றும் காணலாம். அதனால் அவர்கள் வாயில் பிறக்கும் பாடல்களிலும் உறவுமுறை வெளிப்படும். ஆண்டாள் பாடல்களிலும் உறவுமுறைச் சொற்கள் இடம் பெறுகின்றன. **'கீழ்வானம் வெளுத்தது' ' புள்ளினங்களும் சிலம்பின', 'எல்லே இளங்கிளியே' 'இன்னும் உறங்குதியோ?'** என்றெல்லாம் கூறி

ஆயர்பாடியில், பெண்கள் நீராடச் செல்ல இருந்தவர்களைத் தடுத்து உன்னை அழைக்க வந்தோம். அவசியம் வரவேண்டும் என அழைக்கின்றனர். அப்படி அழைத்தும் காதில் விழாத வண்ணம் அகிற்புகை கமழத் துயின்று கொண்டிருந்தாள் ஒரு பெண். அவளை **'மாமன்மகளே மணிக்கதவம் தாள் திறவாள்'** என வேண்டி நின்றனர். பயனில்லை உடனே துயின்று கொண்டிருப்பவளின் அன்னையிடம் **'மாமீர் அவளை எழுப்பீரோ'** எனச் சொல்லி உறவு கொண்டாடும் உன்னத நிலையினை ஆண்டாள் பாடல்களில் வெளிப்படுத்துகின்றாள். இறையின்பம் துய்ப்பவர்க்கு ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மனப்பக்குவம் வரவேண்டும் என்பதையும் இதன்வழி ஆண்டாள் உணர்த்த முற்படுகிறாள் எனவும் கொள்ளலாம்.

## வழக்குச் சொற்கள்

அன்றாடம் பேச்சு வழக்கில் பயின்றுவரும் சொற்கள் நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறுதல் இயல்பாகும். ஆண்டாள் பாடல்களிலும், பைய, தூசு, அரவம், கீசு கீசு, கிடத்தில், ஊமை, செவிடு, பெண்டாட்டி, கனைத்து, குடைந்து, புழைக்கடை, சுளகு, சுள்ளி, நோவு, சேமம், சிக்கென, மாய மந்திரம் என்பன போன்ற வழக்குச் சொற்கள் இடம் பெறுகின்றன.

## நம்பிக்கை

காலங்காலமாக நாட்டுப்புற மக்களால் உருவாக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுவரும் நம்பிக்கைகள் ஆண்டாள் பாடல்களிலும் வெளிப்படுகின்றன. **'நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்சவுணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராத பொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கூற இயலாத பொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன'.** (நாட்டுப்புறவியல் ஆய்வு ப. 188-189)

இதன் அடிப்படையில் உருவான பல நம்பிக்கைகளை ஆண்டாள் பாடல்களில் காண முடிகின்றது. குறிப்பாகப் பாவை நோன்பு, கனவு, குறிபார்த்தல் மந்திரம் போன்றவற்றில் மக்கள் அசைக்கமுடியாத நம்பிக்கைக் கொண்டுள்ளமையினை ஆண்டாள் பாடல்கள் உணர்த்து கின்றன. கணினி யுகத்தில் மனித உள்ளத்திற்கு நிம்மதியினைத் தேடித் தருகின்றது நம்பிக்கை என்றால் அது மிகையன்று.

## பாவை நோன்பு

கன்னிப் பெண்கள் நோற்கும் பாவை நோன்பு தமிழகத்தில் மிகப் பழங்காலத்திலிருந்தே நோற்கப்பட்டு வருகிறது. நல்ல கணவனைப் பெறலாம், நல்ல மழைபெய்து நாடு செழிக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இந்நோன்பு நோற்கப்பட்டது. சங்ககாலத்தில் தைந்நீராடலாக நோற்கப்பட்ட பாவை நோன்பு ஆண்டாள் காலத்தில் மார்கழி நீராடலாக மாறியது. மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் நீராடி, நல்ல கணவனைப் பெறுவதற்காக மட்டும் பாவை நோன்பு நோற்காது நல்ல மழைபெய்து நாடு செழிக்கவும் பாவை நோன்பு நோற்கப்பட்ட நிலையினை,

**'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி**
**நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்**
**தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும் மாரிபெய்து**
**ஓங்கி பெருஞ்செந்நெல் வாடுகயலுகளப்**
**பூங்குவளைப்போதிற் பொறி வண்டு கண்டுப்பத்**
**தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி**
**வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளற்பெரும் பசுக்கள்**
**நீங்காத செல்வம் நிறைந்தேலோரெம்பாவாய்'**

- (திருப்பாவை - 5)

என்ற ஆண்டாள் பாடலால் உணரலாம். பழங்காலத்து வழிபாடு தனிமனித வழிபாடாக அமையாமல் சமுதாய நலன்கருதிக் கூட்டு வழிபாடாகவே அமைந்திருந்த தன்மையினையும் அறிய முடிகின்றது. கூடிச் சேர்ந்து நோற்றால் பயன் உறுதியாகக் கிட்டும் என்ற நம்பிக்கை இதனால் வெளிப்படக் காணலாம்.

## கனவு

மக்களின் பல்வேறு நம்பிக்கைகளில் கனவு நம்பிக்கையும் ஒன்றாகும். கனவுகளில் நல்ல கனவு, கெட்ட கனவு என இருவகை உண்டு என்பர். கனவுகள் பின்னால் நிகழயிருப்பனவற்றை முன்னரே உணர்த்துகின்றன என்ற நம்பிக்கை பரவலாக மக்களிடையே நிலவுவதைக் காணலாம். **'உளவியல் பேரறிஞர்கள் அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே கனவு என்பர். வேறுசிலர் கனவு உளநோயால் தோன்றுகின்றது என்றும் கூறுவர்'** (நாட்டுப்புறவியல் ஆய்வு ப. 211) ஆண்டாள் - கார்மேக வண்ணனையே கணவனாகப் பெற விழைந்தாள். இந்த விருப்பமே அவளது உள்ளத்தில் உறைந்திருந்தது. அதன் வெளிப்பாடாகவே, அவள் கண்ட கனவுகளும் விளங்குகின்றன. நகரில் தோரணம் கட்டப்பட்டதாகவும், பூரண

கும்பங்கள் வைக்கப்பட்டதாகவும் திருமணப் பந்தலில்,

**'மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்றூத**
**முத்துடைத்தாம நிரைதாழ்ந்து பந்தற்கீழ்**
**மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து என்னைக்**
**கைத்தலம் பற்றக்கனாக் கண்டேன் தோழி நான்'**

- (நாச்சியார் திருமொழி)

என்று தான் விரும்பியபடியே கனவு கண்டதாகக் கூறுகின்றாள் ஆண்டாள். காணும் கனவுக்கு எதிரான பலனே ஏற்படும் என்ற நம்பிக்கை இருந்தாலும் கனவாக வெளிப்பட்ட ஆண்டாளின் உள்ளத்தாசை உறுதியாக நிறைவேறும் என்றே நம்புகின்றாள்.

## ஆழியிழைத்தல்

எண்ணியர் திண்ணியராயின் எண்ணியதைத் திண்ணமாக எய்துவர். ஆனால் மனக்கவலை கொள்ளும் நாட்டுப்புறத்தவர் நினைப்பது நிறைவேறுமா நிறைவேறாதா என்பதை அறியக் குறிபார்ப்பது வழக்கமாகும். இதனையே ஆழியிழைத்தல் என இலக்கியங்கள் இயம்புகின்றன. குறிபார்க்கும் முறைகள் பல்நிலையில் அமைகின்றன. கோவிலில் மலரிட்டு அறிதல், இருவிரல்களைக் காட்டி ஏதேனும் ஒன்றினைத் தொடச் சொல்லி அறிதல், கண்களை மூடிக்கொண்டு நிலத்தில் வட்டமாகக் கோடு வரைகின்றபோது வட்டம் சரியாக அமைந்தால் நினைப்பது நிறைவேறும் எனக்கொள்ளல், வட்டமாகக் கோடு போட்டு, அதற்குள் இடப்பட்டிருக்கும் சுழிகள் இரட்டையாக இருந்தால் நினைத்தது நடக்கும், ஒற்றையாக இருந்தால் நிறைவேறாது. இம்முறையில் குறிபார்ப்பதைக் கூடல் இழைத்தல், ஆழியிழைத்தல் என இலக்கியங்கள் சுட்டுகின்றன. **'கணவனைப் பிரிந்த மனைவி இழைக்குங் கூடற்குழி'** என்கிறது தமிழ் லெக்சிகன் ப. 6-253.

தலைவனைப் பிரிந்த மகளிர் அவன்வரும் நிமித்தம் அறியத்தரையில் சுழிக்கும் சுழிக்'குறி' (தமிழர் பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும் ப.116) என்றும் விளக்கம் தரப்படுகிறது. இலக்கியங்களில் கூடலிழைத்து அதாவது கோடிட்டும் சுழி வரைந்தும் தலைவனின் வரவினை அறிந்த தன்மையினை,

**'ஆழியாற் காணோமா நாம்'** - (ஐங்குறுநூறு - 43) என ஐங்குறு நூறும்,

**'கோடுவாய் கூடாப்பிறையைப்பிறிதென்று**
**நாடுவேன் கண்டெனன் சிற்றிலுள் கண்டாங்கே' -**

(கலி-142-24-25)

எனக் கலித்தொகையும்

**'செய்குறி ஆழி வைகல் தோறு எண்ணி**
**எழுதுசுவர் நனைந்த அழுதுவார் மழைக்கண்'** -

(அக.நா. 351:10-11)

என்று அகநானூறும் விளக்குகின்றன.

ஆழியிழைத்தல் என்பது தொடக்கத்தில் கோடிட்டும் வட்டமிழைத்தும் எண்ணிய நிலையிலிருந்து வளர்ச்சி பெற்றுக் காலப்போக்கில் கூடல் இழைத்தலாக மாறியிருக்கலாம்.

கண்ணனைக் கணவனாகப் பெற விரும்பிய ஆண்டாள் மார்கழி மாதம் கோழி கூவுவதன் முன்னம் எழுந்திருந்து நீராடி நோன்பு நோற்றாள். இருப்பினும் அவன் கடைக்கண் பார்வை அவளுக்குக் கிடைக்கவில்லை. அதனால் பிரிந்தாரைச் சேர்த்து வைக்கும் காமனது உதவியை நாடி நின்றாள். அதனால் வெள்ளை நுண்மணலால் தெருவினை அலங்கரித்து நீராடி நோன்பிருந்தாள். அப்படியும் கண்ணன் கிட்டவில்லை. அதனால் காளிங்க நர்த்தனம் செய்தவன் வருவானா? மதயானை உதைத்தவன் என்னைக்கூட வருவானா? துவாரபதிக்காவலன் வருவானா? என்றெல்லாம் மனதில் எண்ணிக்கூடல் இழைத்துப் பார்க்கின்றாள்.

## மந்திரம்

மந்திரம் கால் மதி முக்கால் - என்ற பழமொழி நாட்டுப்புற மக்களின் மந்திரம் சார்ந்த நம்பிக்கையை நினைவுபடுத்துகின்றது. இன்னும் நாட்டுப்புற மக்களிடம் மந்திரம் குறித்த அசைக்க முடியாத நம்பிக்கை நிலவுகிறது. ஆண்டாள் பாடல்களிலும் இந்நம்பிக்கையினை, **'அனந்தலோ? ஏமப்பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?' - (திருப்பாவை - 9) 'வாயுடை மறையவர் மந்திரத்தால் மன்மதனே உன்னை வணங்குகின்றேன்'** - (நாச்சியார் திருமொழி 7:2)

**'பெய்யுமாமுகில் போல் வண்ணா உன்றன்**
**பேச்சும் செய்கையும், எங்களை**
**மையலேற்றி மயக்கவுன்முகம்**
**மாயமந்திரம்தான் கொலோ'** - (நாச்சியார் திருமொழி - 4)

என்பன போன்ற இடங்களில் உணரலாம்.

## விளையாட்டு

நாட்டுப்புறவியலின் ஒரு கூறாகிய நாட்டுப்புற விளையாட்டுக்களும் ஆண்டாள் பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன. சிறுவீடு கட்டிச் சிறுமியர் விளையாடும் விளையாட்டு நாட்டுப்புற விளையாட்டுக்களுள் ஒன்றாகும்.

சிறுமியர் ஆற்றங் கரைகளிலும் கடற்கரை மணலிலும் சிறிய வீடுகட்டி விளையாடுவது வழக்கமாகும். மன்மதன் வருகைக்காக ஆயர்குலப் பெண்கள் தெருக்களில் கோலமிட்டு அலங்கரிக்கின்றனர். மேலும் வட்டவாய்ச்சிறு தூதையோடு சிறு சுளகும் வெள்ளை நுண்மணலுங் கொண்டு முதுகுநோவச் சிற்றில் கட்டி விளையாடுகின்றனர். அதனை அழிக்கவரும் கண்ணனை அழிக்காதே என வேண்டுகின்றனர். மேலும்,

**'சீதைவாயமு தமுண்டாய் எங்கள்**
**சிற்றில் நீ சிதையேல் என்று**
**வீதிவாய் விளையாடும் ஆயர்**
**சிறுமியர் . . . . . . . .'** - (நாச்சியார் திருமொழி - 30)

என்றும் ஆயர் சிறுமியர் சிற்றில் கட்டி விளையாடிய செய்தியினை ஆண்டாளின் நாச்சியார் திருமொழி விளக்கி நிற்கின்றது.நீராடல்

## நீராடல்

நாட்டுப்புறத்தில் சிறுமியர் நீராடி மகிழக் கூட்டமாக நீர்நிறைந்த குளத்திற்கோ, ஆற்றுக்கோ, கிணற்றுக்கோ செல்வதுண்டு. விளையாட்டாக நீராடி மகிழ்ந்த அந்தச் செயல்பாடே பின்னர் நீர் விழாவாக, புனல் ஆடலாக, புனல் விளையாட்டாக இலக்கியங்களில் இடம்பெற்றது. காப்பியங்களின் இலக்கணத்தை வரையறை செய்யும் தண்டியலங்காரம் புனல் விளையாட்டினை ஒரு கூறாகவே குறிப்பிடுகின்றது. நீராட்டிற்கென்றே தனியாக விழா நடந்தமையினைப் பெருங்கதை சுட்டுகின்றது. பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் உவகை தோன்றுவதற்கான ஏதுக்களில் புனல் விளையாட்டும் ஒன்று என்பதைச்,

**'செல்வம் புலனே புனல் விளையாட்டு என்று**
**அல்லல் நீத்த உவகை நான்கே'** - (தொல்.மெய்ப். - 11)

என்ற மெய்ப்பாட்டியல் நூற்பா வழிப்பெற வைக்கின்றார்.

**'குறுநுரை சுமந்து நறுமலர் உந்தி**
**பொங்கிவரு புதுநீர் நெஞ்சு உண ஆடுகம்'** - (நற்றிணை 68:45)

**'மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு**
**உயர்சினை மருத்தத்துறையுறத் தாழ்ந்து**
**நீர் நணிப்பகோடு ஏறிச் சீர்மிகக்**
**கரையவர் மருளத் திரையகம் பிதிர**
**நெடுநீர்க்குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து**
**குளித்து மணல் கொண்ட கல்லா இளமை'** - (புறம் - 243)

என்று சங்க இலக்கியங்களும் புனல் விளையாட்டினை விளக்குகின்றன. ஆண்டாள் பாடல்களில் நீராடல் விளையாட்டாகச் சுட்டப்படவில்லை. மாறாக தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து நீங்காத செல்வம் நிறையப் பெறப் பாவை நோன்பு நோற்கும் நோக்கோடு கன்னிப் பெண்கள் ஒன்றுகூடி நீராடச் செல்வதாகக் காட்டப்படுகின்றது.

## முடிவுகள்

மனக்கவலை மாற்றவல்ல கண்ணபிரானின் அருமைப்பாடு தோன்றப் பாடப்பட்ட திருப்பாவையிலும், போற்றிப் பாடப்பட்ட நாச்சியார் திருமொழியிலும் நாட்டுப்புறப் பாடல் பண்புகளை மிகுதியாகக் காணமுடிகிறது.

ஆயர்குலப் பெண்ணாகவே தன்னை மாற்றிக் கொண்டதால் அவர்களின் சொல்வழக்கில் பாடல்களை ஆண்டாள் பாடியுள்ளாள்.

எல்லாக் காலகட்டங்களிலும் நம்பிக்கை மனித உள்ளத்திற்கு வலிமை சேர்ந்துள்ளமை புலனாகிறது.

பண்டிதர் மட்டுமல்லாது பாமரரும் தான் அனுபவித்த இறையின்பத்தை அனுபவிக்க இனிய எளிய சொற்களால் ஆண்டாள் பாடல்களைப் புனைந்துள்ளமை வெளிப்படுகிறது.

இனவேறுபாடற்ற சமுதாயம் காண விரும்பிய ஆண்டாளின் உயர்ந்த உள்ளத்தினை அவள் பாடல்களில் இடம்பெற்றுள்ள உறவுமுறைச் சொற்கள் வெளிப்படுத்துகின்றன.



ஸ்ரீரங்கம் ஆண்டாள்



ஸ்ரீவில்லிபுத்தூர்
பள்ளிகொண்ட
பெருமாள்



திருப்பதி



# நாச்சியார் திருமொழியில் அகமரபு

**முன்னுரை :**

சங்க இலக்கியத்திற்கே உரிய தனிச்சிறப்பாகத் திகழ்வது அகப்புறப் பாகுபாடு. இவ்விருவகைப் பொருள்களைப் பற்றிப் பாடப்பெறும் இலக்கியநெறி குறித்துத் தொல்காப்பியம் எடுத்துரைக்கிறது. சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பதினெண்கீழ்க்கணக்கு அக நூல்களில் அகப்பொருள் மரபு தொடர்ந்து பேணப்பட்டுள்ளது. முத்தொள்ளாயிரத்தில் மகளிர் நாடாளும் மன்னன்மீது மையல் கொள்வதாகப் பாடப்பட்டுள்ளது. அடுத்துத் தோன்றிய பக்தி இயக்கக் காலத்தில் கடவுளரைக் காதலித்துப் பாடும் நிலை உருவாகியது. அகப்பொருள் மரபை முதன் முதலாகப் பக்திப் பாடலுக்குப் பயன்படுத்தியவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களுமாவர். ஆழ்வார்களில் ஒருவரான பெண் ஆழ்வாராகப் போற்றப்படும் ஆண்டாளின் 'நாச்சியார் திருமொழியில்' இடம்பெற்றுள்ள அகமரபுகள் குறித்து ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**1.1. அகப்புறப் பாகுபாடு :**

இன்பத்தைப் பொருளாகக் கொண்டது அகம். ஒருவனும் ஒருத்தியும் தம்முள் எதிர்ப்பட்டு விழைந்து கூடி இல்வாழ்க்கை வாழும் ஒழுகலாறு பற்றிக்கூறுவது அக இலக்கியம். மணமக்களாவதற்கு முன் நிகழும் காதல் ஒழுகலாறுகளைக் கூறுவது களவு என்றும், மணமான பின்னர் உள்ள வாழ்வியல் நிலைகளை வகுத்துரைப்பது கற்பு என்றும் அகப்பொருளின் இருவகைக் கூறுகள் விளக்கப்படுகின்றன. புறம் என்பது காதல் ஒழிந்த வீரம், கொடை, அறம் ஆகிய புறவாழ்க்கை நிலைகளை விளக்குவது. கடவுளரைப் பற்றிய செய்திகளும் இப்பகுப்பில் அடங்கும்.

**1.2. அகஇலக்கிய மரபுகள் :**

அகப்பொருள் பற்றிய இலக்கியங்களுக்கு தொல்காப்பியர் சில மரபுகளை வரையறுத்துள்ளார். அவை

1. முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணைகளில் அகப்பாடல்கள் பாடப்பெறும். இருத்தல், கூடல், பிரிதல், ஊடல், இரங்கல் என்பன முறையே அவ்வைந்திணைகளுக்கும் உரிய உரிப்பொருளாகக் கொள்ளப்படும். அன்பின் ஐந்திணை என்றும், நடுவண் ஐந்திணை என்றும் கூறப்படும், இத்திணைகள் தவிர

கைக்கிளை, பெருந்திணை என்ற வேறு இரு திணைகளும் இடம்பெற்றுள்ளன.

2. முதல் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற முப்பொருள் பிரிவும் உண்டு. இயற்கை வருணனை என்பது அக மாந்தர்களின் அக உணர்வுகளைச் சிறப்பிப்பதற்குப் பயன்படும் துணைப் பொருளாகக் கையாளப்பட்டிருக்கும். இவ்வருணனை உள்ளுறையாகப் பொருள் கொள்வதற்கும் துணை செய்யும்.

3. பாடல்கள் புலவர் கூற்றாக அன்றி, தலைவன், தலைவி, தோழி, செவிலித்தாய், நற்றாய் என்று அக இலக்கிய மாந்தர்களின் கூற்றுக்களாகவே அமைந்திருக்கும். தானே பேசும் தனிமொழியும் உண்டு. எனவே நாடகப் பாங்கில் பாடல்கள் காணப்படும்.

4. ஒவ்வொரு பாட்டும் தனித்தனிப் பொருளுடையனவாக விளங்குமே யன்றி ஒன்றிற்கொன்று தொடர்புடையனவாகப் பாடப்படவில்லை.

5. அகப்பாடல்கள், கலிப்பா, பரிபாடல் என்ற இருவகைப் பா வடிவில் பாடப்பெறும் என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். ஆயினும் சங்க காலத்திலேயே ஆசிரியப்பாவிலும், பதினென்கீழ்க்கணக்கு அக நூல்கள் வெண்பாவிலும் பாடப்பட்டுள்ளன.

6. தலைமக்கள் துறைவன், பொதுவன், குறும்பொறை நாடன் என்று நிலத்தின் அடிப்படையில் பொதுப் பெயரால் குறிக்கப்படுவரேயன்றி இயற்பெயரால் பேசப்பட மாட்டார்கள்.

## 1.3. பக்தி இலக்கியத்தில் காதல் :

உலக நடைமுறை வாழ்க்கையில் நிகழும் மனிதக்காதல் உயிருக்கும் உடலுக்கும் இடையிலான உறவாகக் காணப்படுகிறது. “உடம்பொடு உயிரிடை அன்ன மற்றன்ன மடந்தையொடு நம்மிடை நட்பு” (குறள், 1122) என்ற குறள் கருத்தும் இதனை விளக்குகிறது. இவ்வகைக் காதல் அனுபவங்களைப் பக்தி இலக்கியங்கள் சிற்றின்பம் என்று குறிப்பிடுகின்றன. உடல் உயிர் என்பனவற்றிற்கும் அப்பால் ஆன்மா, பரமாத்மா ஆகியவற்றிற்கு இடையிலான காதல் உறவே உயர்வானது என்றும், அதுவே பேரின்பம் பயப்பது என்றும் போற்றப்படுகின்றது. இது நடைமுறையிலிருந்து விலகிய, கண்ணுக்குப் புலப்படாத, ஞானத்தால் மட்டுமே உணர்ந்து கொள்ளக்கூடிய தன்மையினை உடையது. இங்கு உடலும் உயிரும் பின்தள்ளப்பட்டு ஆன்மா என்கிற கருத்து முன் வைக்கப்படுகிறது. ஆன்மா என்பது பரமாத்மாவால் உருவாக்கப்பட்டது. பிறப்பு இறப்பு என்னும் துன்பத்துள் சிக்கி உழலக்கூடியது. இறைவனிடத்துக் காதல் கொண்டு, வேறு எவ்விதச் சிந்தனையுமின்றி, அவனைச் சேர முயல்வதே பிறவிப்

பயன் என்று பக்தி இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. இறைவனைக் காதலனாகவும், உயிர்களைக் காதலியாகவும் கொண்டு, இன்பமயமான காதல் என்கின்ற நிலையில் பக்தியின் உச்சநிலையினை அடையலாம் என்று அறிவுறுத்துகின்றன. அதற்கு நாயக நாயகி பாவத்தை ஒரு வழிமுறையாகக் கொண்டுள்ளன. ஜீவாத்மா பரமாத்மாவைத் தேடுதலாகிய இத்தெய்வீகக் காதல் மதுரபக்தி அல்லது பகவத்காமா என்று சொல்லப்படும். "சங்க இலக்கியங்கள் உடலும் உயிரும் கலந்து பெறுவதான காதல் இன்பத்தை விளக்கு கின்றன. திருக்குறள் உள்ளமும் உயிரும் இணைவதைக் குறிக்கிறது. ஆயின் பக்தி இலக்கியங்கள் உயிரும் உயிர் மூலமும் கலந்து ஒன்றிணைவதைப் பாடுகின்றன" என்கிறார் இராஜராஜேஸ்வரி (இராஜ இராஜேஸ்வரி, நாலாயிரத்தில் அக மரபுகள், ப. 98) ஆழ்வார்களின் கூற்றுப்படி, "மானிடக் காதலர் எங்ஙனம் தம்மை மறந்து காதலில் வயப்படுகிறார்களோ, அதுபோல ஜீவன்களும் தம்மை மறந்து பரம் பொருளோடு ஐக்கியமாதல் பேரின்பக் காதல் ஆகிறது" (கி. நீலகண்டன், ஆய்வுக்கோவை, 2005, ப. 1104) என்ற கி. நீலகண்டன் கருத்தும் ஒப்புநோக்கத்தக்கது.

## 1.4. அகப்பொருளில் பாடிய ஆழ்வார்கள் :

பரம்பொருளாகிய பரந்தாமனே எல்லாமும் என்று எண்ணி உடல், பொருள், ஆவி ஆகிய அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணிக்கும் சரணாகதி தத்துவமே வைணவ சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். இத்தத்துவம் தமிழ்நாட்டில் தழைத்தோங்க வழிகாட்டியவர்கள் பன்னிரு ஆழ்வார்கள். ஸ்ரீமந் நாராயணனின் கல்யாணக் குணங்களில் ஆழ்ந்தவர்கள் என்பதால் இவர்கள் ஆழ்வார்கள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான பக்தி நெறியில் நின்று பாடல்கள் பாடியுள்ளனர். நாயக, நாயகி பாவனையில் பாசுரங்கள் படைத்தவர்களில் திருமங்கை யாழ்வாரும், நம்மாழ்வாரும் சிறப்பிடம் பெறுகின்றனர். இவர்கள் தங்களைத் தலைவியாகப் பாவித்துப் பக்தி செலுத்தினர். ஆண்டாளோ தானே தலைவியாக நின்று திருவரங்கத்துப் பெருமான்மீது காதல் கனிரசம் சொட்டும் பாசுரங்களைப் பாடியருளியுள்ளாள். இவர்களின் பேரின்பக் காதல், உலகியலில் நடைபெறும் ஆண், பெண் காதல் அனுபவங்களின் மொழியிலேயே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## 1.5. ஆண்டாளின் பக்திப்பாதை :

கோதை என்று பெரியாழ்வாரால் அன்புடன் அழைக்கப்பட்டவளே ஆண்டாள். இறைவனையே ஆண்டு கொண்டதால் ஆண்டாள் என்றும், தான் சூடிய மாலையை இறைவனுக்குக் கொடுத்ததால் சூடிக்கொடுத்த நாச்சியார் என்றும் போற்றப்படுபவள். பச்சிளம் பருவத்திலேயே

பாம்பணையான்மீது பற்று கொண்டவள். பருவம் அடைந்த நாளிலிருந்து திருவரங்கப் பெருமான் மீது தீராத காதல் கொண்டவள். அவனையே தன் அன்பிற்குரிய மணாளனாக அடைவதற்கு ஆசைப்பட்டவள். அதற்காக மார்கழி மாதத்தில் நோன்பு நோற்று திருப்பாவை பாடினாள். அதற்குப் பின்னரும் ஆலிலைப் பெருமான் தன்னை மணக்க வராததால் ஊன் உருக உள்ளம் நெகிழ உயிர் மெலிய நாச்சியார் திருமொழியைப் பாடினாள்.

நாச்சியார் திருமொழியில் மொத்தம் பதினான்கு பதிகங்கள் உள்ளன. இரண்டாம் பதிகம் ஆயர்பாடிச் சிறுமிகள் 'சிற்றில் சிதையேல்' என்று கண்ணனை வேண்டுவதாக உள்ளது. மூன்றாவது பதிகம் அவன் கன்னியரோடு விளையாடுவதான அமைப்பினைக் கொண்டது. இறுதிப் பதிகம் பிருந்தாவனத்தில் பரந்தாமனைக் கண்டமை பற்றிக் கூறுகிறது. இவைதவிர பதினொரு பதிகங்கள் அகப்பொருள் அமைப்பில் பதிவாகியுள்ளன.

## 1.5. ஆண்டாள் பாசுரங்களில் அகக்கூறுகள் :

அகப்பொருளுக்கு அடிப்படையாக அமைவன தலைவன் தலைவியரது கூடலின்பமும், அதற்கு மறு தலையான பிரிவுத் துன்பமும் ஆகும். கூடலின்பம் குறிஞ்சி ஒழுக்கம் எனப்படும். இவ்வொழுக்கம் களவு என்னும் கைகோளில் மட்டும் நடைபெறும். செல்வம், கல்வி, குடிப்பிறப்பு முதலாய்ப் பத்துப் பண்புகளால் ஒத்திருக்கும் தலைமக்கள் ஊழால் ஒன்றுகூடி தம்முள் துய்த்த இன்பம் இத்தகையது என்று பிறருக்குச் சொல்லமுடியாததாய் உள்ளத்தினுள், அகத்தினுள், அனுபவிக்கும் உணர்ச்சி அகம் எனப்படும். ஆண்டாளும், அகிலமளந்தானும் ஒருவரையொருவர் ஒத்தவர்கள் அல்லர். அவன் அனைத்துக்கும் மேலான பரம்பொருள். அவள் மானுட மங்கை. எல்லாம்வல்ல இறைவன்மீது இச்சை கொள்கிறாள் தலைவி. இது மானுடப்பெண் தெய்வத்தின்மீது கொள்ளுகின்ற மதுரக் காதலாக மணம் வீசுகிறது. தலைமக்கள் இருவருக்கும் இடையே நிகழும் கூட்ட நிகழ்ச்சி மிகுதியாகப் பேசப்பட வில்லை. ஓர் இடத்தில் மட்டும் மாயக் கண்ணன் தன் இல்லத்திற்கு வந்து தன்னைத் தனிமையில் சந்தித்ததாக ஆண்டாள் குறிப்பிடு கின்றாள். இதனை, "நாங்களெ மில்லிருந்து ஒட்டிய அச்சங்கமம் நானுமவனுமறிதும்" (நாலா.552) என்ற வரிகள் மெய்ப்பிக்கின்றன. நானும் அவனுமாக இருவரும் சேர்ந்திருந்து எங்களுக்குள் ரகசியமாகச் செய்து கொண்ட சங்கேதத்தை நாங்களிருவருமே அறிவோமேயன்றி வேறொருவரும் அரியார் என்கின்றாள். ஆண்டாள் இவ்வாறு பேசுவது அவளுடைய ஆசையின் எதிரொலியேயன்றி உண்மையானதல்ல. இருவேறுபட்ட நிலையில் இருப்பவர்கள் தங்களுக்குள் சந்தித்துக் கொள்வதற்கு வாய்ப்பில்லை. "மாதவன்மீது கொள்ளும் காமம் மங்கையர்

மீது கொள்ளும் காமத்தினின்று வேறுபட்டது. உயர்ந்தது" (சுப்பு ரெட்டியார், வைணவ உரைவளம்) என்று சுப்புரெட்டியார் கூறுவதுபோல் இங்கு குறிக்கப்பட்டுள்ள உடல்மொழிச் செய்திகள் பொய்யானவை. பாவனை முறையில் அமைந்தவை.

ஆண்டாள் மட்டுமே காதல் கொண்டு புலம்புவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன. இவ்வாறு ஒருமருங்கு பற்றிய காதல் கைக்கிளை என்று சுட்டப்பெறும். "அத்தகைய கைக்கிளையும் ஆடவர்க்கே அமைவதன்றி மகளிர்க்குக் கூறுவது மரபன்று. மகளிர்பால் ஒருதலைக்காம வெளிப்பாடு அவர்தம் பெண்ணீர்மைக்குப் பொருந்திய பொற்புடை நெறியாகாமையின், அதனைக் கைக்கிளையின்பாற் படுத்தாமல் பெருந்திணையில் அடக்குவதே புலனெறி வழக்கில் பண்டையோர் கொண்ட தமிழ் மரபாகும்" என்று கைக்கிளை பற்றி டாக்டர். சோமசுந்தர பாரதியார் கூறுகிறார். மேலும் "இறைவன் திருவடிகளை அடையப்பெறாது அவற்றை நாடி நிற்கும் அடியார்களின் நிலையைப் பெருந்திணையுடன் ஒப்பிடுவர் சமயநூலார்" (டாக்டர். ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, ப.48) என்ற கூற்றும் இவண் ஒப்புநோக்கத்தக்கது. இவ்விரு கூற்றுக்களின் வாயிலாக ஆண்டாள் பெண் என்பதாலும், பாடல்களில் பேசப்படும் செய்திகள் இறைவனோடு ஒன்றிக் கலக்க நினைக்கும் அவளுடைய உள்ளத்தின் உணர்ச்சி வெளிப்பாடுகள் என்பதாலும், நாச்சியார் திருமொழியில் பேசப்படும் காதல் பெருந்திணையைச் சார்ந்தது எனலாம்.

## 1.7. இயற்பெயர் சுட்டப்பெறுதல் :

ஐந்திணைக்கண் தலைமக்களின் இயற்பெயர் சுட்டப்படுதல் கூடாது என்கிறது தொல்காப்பியம். "மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப்பெறாஅர்" (தொல்.நூ.57) புலனெறி வழக்கில் "நாடன், ஊரன், சேர்ப்பன்" என்று பொதுப் பெயரானன்றி, ஒருவர்க்கு உரித்தாகி வரும் பெயர் கூறப்படுதலில்லை. இம்மரபு சிலப்பதிகாரத்தி லேயே மாற்றம் பெற்றுவிட்டது. ஆண்டாள் திருமால்மீது கொண்ட காதலால் தன்னுடைய மனவுணர்வுகளையே மறைக்காமல் பாடியுள்ளது மரபு மாற்றத்தைக் காட்டுகிறது.

## 1.8. கூற்று :

அகப்பாடல்களில் தலைமக்களின் உணர்வுகளை உணர்த்தும் கவிதை உத்தியாகக் "கூற்று" என்னும் சிற்றுறுப்பு துணை செய்யும். ஆண்டாள் பாசுரங்கள் தாய் கேட்பக் கூறியது, தோழியர் கேட்பக் கூறியது, தனிமொழியாகக் கூறியது என்று மூன்று வகைக் கூற்று முறையில் பாடப்பட்டுள்ளன.

## 1.9. தலைவியின் பிரிவுநிலை :

தலைவன் தலைவியரது பிரிந்து நிற்கும் ஒழுகலாறு பாலை என்று பொதுப்படக் கூறப்பட்டு, களவு, கற்பு என்னும் இருவகைக் கைகோள்களிலும் இடம் பெறுகிறது. இப்பிரிவு களவில் பாலை என்றும் கற்பினுள் பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்றும் வகுத்துப் பாடப்பட்டுள்ளது. இவை முறையே இருத்தல், இரங்கல், ஊடல் என்று விளக்கப்படும். தலைமக்களின் உள்ளத்தில் முகிழ்க்கும் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் வகையில் இத்தகைய பகுப்புக்கள் அமைந்துள்ளன. ஆண்டாள் பாடல்களில் எத்தகைய பிரிவு என்பது குறிக்கப்படவில்லை. ஆனால் பிரிந்திருக்கும் பெண்ணின் மனவுணர்வுகள் எடுத்துரைக்கப் படுகின்றன. அவள் நெஞ்சம் திருமாலையும், அவனுடைய திருமேனி வண்ணத்தையும் இடையறாது நினைத்து மயங்குகிறது. தன்வரை கடந்து செல்லும் நெஞ்சின்மீது ஆற்றாமை மிகுகின்றது. அவனைச் சார்ந்த பொருள்கள் அவனுக்குத் துணையாக இருக்கின்றன. நமக்குச் சொந்தமான நெஞ்சம் மட்டும் நம்மை உதறித் தள்ளிவிட்டு அவனுடைய திருத்துழாய் மாலையை நாடிச் செல்கிறதே. இக்கொடுமையை நான் யாரிடம் சென்று உரைப்பேன் என்று முறையிடுகின்றார்.

## 1.10. மெய்ப்பாடு :

மெய்யின்கண்படுதல் மெய்ப்பாடு. அகஉணர்வுகளை ஆராய்ந்தறியாமல், இனிதறியப் புலப்படுத்தும் இயற்புறவுடல் குறியாகும். செய்யுள் உறுப்புக்களுள் மெய்யப்பாடு சிறப்பிடம் பெறுவது. உள்ளத்தால் ஒன்றுபட்ட தலைமக்களுக்குத் திருமணம் ஆகும்வரை நிகழும் மெய்யப்பாடுகள் குறித்துத் தொல்காப்பியம் விரித்துரைக்கிறது.

> "வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
> ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
> நோக்குவ எல்லாம் அவையே போறல்
> மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்
> சிறப்புடை மரபினவே களவென மொழிப" (கள.நூ.9)

என்பது நூற்பா. "இவற்றை அவத்தைகள் எனினும் குற்றமில்லை" என்று குறிப்பிடுகின்றார் இளம்பூரணர். களவில் முதலில் இடம்பெறும் 'காட்சியும்' இறுதியில் கூறப்படும் 'சாக்காடும்' தவிர எட்டு அவத்தைகள் களவு நிகழ்வதற்குக் காரணமாக அமையும் என்கிறார் தொல்காப்பியர். ஆண்டாள் படைப்புக்களில் இவ்வெட்டு மெய்ப்பாடுகளையும் காண முடிகின்றது.

### 1.10.1. வேட்கை :

தலைமக்கள் இருவரும் ஒருவரையொருவர் பெறவேண்டும் என்று எண்ணுகின்ற மனநிகழ்ச்சி "வேட்கை" என்று விளக்கப்படுகிறது.

கார்மேக வண்ணனைக் காணத் துடிக்கின்ற ஆண்டாளின் அளவு கடந்த வேட்கையே காமனை நினைத்து நோன்பு நோற்றல், கூடல் இழைத்தல் முதலிய செயல்களாக வெளிப்படுகின்றது.

### 1.10.1.1. காமன் நோன்பு :

பிரிந்திருப்பவர்களை ஒன்று சேர்ப்பவன் காமவேள். அதனால் அவன் காலில் விழுந்தாவது கருநிற அழகனைக் கூடவேண்டும் என்று எண்ணுகின்றாள். அதற்காக அதிகாலையில் எழுந்து துறை படிந்து நீராடி, வெள்ளை நுண் மணல் கொண்டு வீதியை அலங்கரித்து, மண்டல பூசைக்காக மேடை அமைக்கின்றாள். காப்புடை நெல்லும், கரும்பும், கருப்புக் கட்டியும், பச்சரிசியும் சேர்த்து பதமாகச் சமைத்து பூசைப் பொருளாகப் படைத்து வணங்குகின்றாள். தான் மேற்கொண்ட இந்த நோன்பிற்குக் கைமாறாக, கள்ளவிழ் பூங்கணைகளை எடுத்து, அதில் காயாம் பூவண்ணனின் பெயரெழுதித் தொடுத்து புள்ளின் வாய்ப்பிளந்தவனுக்குத் தன்மீது ஆசை பிறக்குமாறு செய்ய வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றாள். காமனுக்கு நோன்பு நோற்றுக் காதலனைப் பெற்றுத் தரவேண்டும் என்று விரும்பிப் பாடப்படும் இப்போக்கு சங்க இலக்கிய மரபிலிருந்து மாறுபட்டது.

### 1.10.1.2. கூடல் இழைத்தல் :

காதல் வயப்பட்ட மகளிர் தங்கள் காதல் நிறைவேறுமா என்பதனை அறிந்து கொள்வதற்குக் கூடல் இழைத்துப் பார்த்தல் உண்டு. சங்க காலத்தில் இம்மரபு சுட்டப்படவில்லை. திருமழிசைப்பிரானின் நான்முகன் திருவந்தாதியில் "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண இழைப்பன் திருக்கூடல் கூட" என்ற வரிகள் இடம் பெற்றுள்ளன. பக்தி இயக்க காலத்தில் இவ்வழக்கம் ஏற்பட்டிருக்கலாம். நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் திருமாலிருஞ்சோலை மணவாளனார் திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் பொழுது அவனுடைய திருவடிகளைத் தான் பிடித்துப் பணிவிடை செய்ய வேண்டும் என்று விரும்பிக் கூடல் இழைக்கின்றாள். இவளுடைய இவ்வெண்ணம் மனிதக் காதலிலிருந்து வேறுபடுகின்றது. இறைவனுடைய இணையடிகளில் இரண்டறக் கலந்துவிட எண்ணும் உயிரின் வேட்கையாக வெளிப்படுகிறது.

### 1.10.2. ஒருதலை உள்ளுதல் :

காதல் வலையில் சிக்குண்டவர்கள் இடையறாது தம் துணையை நினைத்துக் கொண்டிருத்தல் இயல்பு. இதனால் கனவு காணுதலும் உண்டு. ஏனென்றால் மனதில் ஆழமாகப் பதிவாகியுள்ள எண்ணங்களே இரவில் கனவுகளாகத் தோன்றும் என்பது உளவியலார் கூறும் கருத்தாகும். சங்கப் பாடல்களிலும் கனவு பற்றிய குறிப்புக்கள்

காணப்படுகின்றன. திருக்குறளில் "கனவு நிலையறிதல்" என்ற ஓர் அதிகாரம் அமைந்துள்ளது. ஆனால் ஆண்டாள தனக்கும் அரங்க நாதனுக்கும் மணவிழா நிகழ்வதாகக் கனவு கண்டு கூறுகின்றாள். திருமாலையே மணக்க வேண்டும் என்று திடமாக எண்ணும் அவளுடைய மனவுறுதியே இத்தகு கனவுக்காட்சி விரிவதற்கு காரணம் எனலாம். இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாமெல்லாம் வந்து மணம் பேசவும், துர்க்கை என்கின்ற நாத்தனார் கல்யாணப் பட்டினை உடுத்திவிடவும், மத்தளம், கொட்டவும், வரிசங்கம் நின்றூதவும், முத்துத் தாமம் நிறைந்த பந்தர்க்கீழ் அத்தை மகனாம் நம்பி மதுசூதனன் தன் கைத்தலம் பற்றக் கனாக்கண்டதாகக் கூறுகின்றாள். இக்காட்சி கூற்று முறையில் தோழியை விளித்துக் கூறுவதாக நாடக அமைப்பில் அமைந்துள்ளது. "ஆண்டாள் பரமாத்வாவின் சரீரமே தான் என்றும், தன் ஜீவாத்மா பரமாத்மாவின் இதயத்தில் நிலைபெற்றுள்ளது என்றும், இந்தக் கலியுகத்திலும் எம்பெருமான் தன்னை எப்படியும் தன் சரீரத்துடனேயே மாலை சூட்டி ஆட்கொண்டு விடுவான் என்றும் எண்ணி நினைவிலும், கனவிலும் வாழ்ந்தவள்" (சர்.ஆர்.இராமானுஜம், கோதையின் பக்திப்பாதை, ப.16) என்று இராமானுஜம் கூறும் கூற்று இவண் ஒப்புநோக்கத்தக்கது. இறுதியில் தன் உடலோடு அப்பெருமானுடன் சங்கமமாகிய ஒப்பற்ற நிலையினை எய்தினாள் என்று கூறப்படுகிறது.

### 1.10.3. மெலிதலும் ஆக்கஞ் செப்பலும் :

உண்ணாமையால் உடல் மெலிதலும், அதனால் உறுவது உரைதலும், மெலிதல் ஆக்கஞ் செப்பல் என்ற மெய்ப் பாடுகளாகும். ஆண்டாள் கருப்பு மாணிக்கம் அன்ன தன் கண்ணாளனைக் காணப் பெறாமல் மேனியழகு குன்றி, நிறமிழந்து, ஊன், உறக்கமின்றி உடல் மெலிந்து, வளை கழல சீர்குலைந்து தடுமாறுகின்றாள்.

"ஒளிவண்ணம் சிந்தை உறக்கத்தோடிவையெல்லாம்
எளிமையால் விட்டென்னை யீடழியப்போயினவால்"

என்று நொந்து வருந்தும் ஆண்டாள் இதனை யாரிடத்துச் சென்று கூறுவேன் என்று ஆதங்கப்படுகின்றாள்.

நாணுவரை இறத்தல் : நாணம் நீங்கப் பெறுதல். "உயிரினும் சிறந்தன்று நாணே. நாணினும் சிறந்தது கற்பு" என்று பெண்களுக்குரிய இயல்புகளாகத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற்குரிய" என்று வலியுறுத்துகிறது.

திருக்குறளில்,

"காமம் விடுவொன்றோ நாண்விடு நல்நெஞ்சே
யானோ பொறேனிவ்விரண்டு" (குறள். 1247)

என்ற குறள் ஒரு தலைவியின் மனப் போராட்டத்தைக் காட்டுகிறது. அத்தலைவி காமம் வேண்டுமென்றால் நாணத்தைத் துறக்க வேண்டும் என்று தன் நெஞ்சிற்கு அறிவுறுத்துகின்றாள். மாயவன் மீது மால் கொண்ட மங்கை ஆண்டாளும்,

"நாணியினியோர் கருமமில்லை
நாலயலாருமறிந் தொழிந்தார்" (நாலா. 618)

என்று கூறி நாணத்தைக் கைவிடத் துணிகின்றாா். களவில் பேசப்படும் அலர் பற்றிய குறிப்பு இங்கு சுட்டப்படுகிறது. தன்னிலை ஊரவருக்குத் தெரிந்து விட்டது. இனி தயங்கிக் கொண்டு இருப்பதில் பயனில்லை. ஊரார் உரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தைகளாகு மேயன்றி தன் காமநோய் தீர்வதற்குரிய வழியாகா. அந்நோய்க்கு மருந்தாக அமைபவன் மனம் கவர்ந்த கள்வனேயாவான் என்று முடிவு செய்கிறாள். "தந்தையும் தாயும் உற்றாரும் இருக்கத் தனிவழி போயினள்" என்னும் சொல் வந்தபின் பழியைப் போக்க இயலாது. அதனால் நந்தகோபன் கடைத்தலைக்கே நள்ளிருட்கண் தன்னைக் கொண்டு உய்க்க வேண்டும்" என்று மன்றாடுகின்றாள்.

மனதைத் திருடியவன் ஒருவன் இருக்க மாற்றானுக்கு மணம் பேசுதல் ஏதிலார் மணம் என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. கார்கடல் வண்ணனையே தன் கணவனாக மனதளவில் வரித்துக் கொண்ட ஆண்டாள் பிறரை நினைத்துப் பார்க்கவும் விரும்பவில்லை.

"மானிடர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய்" (நாலா. 505)

"அவன் முகத்தன்றி விழியேன்" (நாலா. 620)

என்று வன்மையாகச் சாடுகின்றாள். கோவிந்தனையன்றிச் சிறு மானிடரைக் காணவும் நாணும் அவளுடைய மனவுணர்வு இவ்வாறு வெளிப்படுகிறது. "மனிதநிலையில் உடலின் நினைவோடு இரு ஜீவன்கள் அப்படியே லயித்து ஒன்றாக ஐக்கியமாகி விடவேண்டுமென்று துடிக்கும் தவிப்புதான் காதல். ஞானநிலையில் உடல் நிலையையும் தாண்டி நின்று பரமாத்மாவோடு ஜீவாத்மா அப்படியே ஐக்கியமாகிவிட வேண்டுமென்று கொள்கிற மானசீகக் காதல் பக்தி" (ஆய்வுக்கோவை, 2005, ப. 1103) என்று கூறுகிறாா் அரு. ராமநாதன்.

"உண்ணும் சோறு, பருகும் நீர் தின்னும் வெற்றிலையும்
எல்லாம் கண்ணன் எம்பெருமான்" என்று நம்மாழ்வார் கூறுவதும்

இக்கருத்தை வலியுறுத்துகிறது. அரங்கநாதனோடு ஒன்றாக ஐக்கியமாகி விட வேண்டும் என்று ஏங்கும் ஆண்டாளின் பக்தி உணர்வுகளும் அவளுடைய பாசுரங்கள் வழி வெளிப்படுகின்றன.

### 1.10.4. நோக்குவ எல்லாம் அவையே போறல் :

தன்னால் காணப்பட்ட பொருள்களெல்லாம் தன் அன்பிற்குரியவனின் அங்க அடையாளங்களாக எண்ணி மாய்ந்து போதல் "நோக்குவ எல்லாம் அவையே போறல்" என்னும் மெய்ப்பாடாகும். கார்காலம் வந்து விட்டது. மேகம் மழையைப் பொழிகின்றது. அப்பருவத்திற்குரிய மலர்கள் மலர்ந்து மணம் வீசுகின்றன. மயில்கள், மாங்குயில்கள் போன்ற உயிரினங்கள் வந்து உலவுகின்றன. இவை அனைத்தும் அகிலம் அளந்தவனின் அடையாளங்களாகக் காணப்படுவதால் ஆண்டாளின் உயிர் ஊசலாடுகிறது. இனி தப்பிப் பிழைக்க முடியாது என்று முடிவு கட்டுகிறாள். சிந்துரச் செம்மை கண்முன் விரிகிறது. பூம்புறவில் கொடி முல்லைகள் மலர்ந்து கோவிந்தனின் தவள நகையினை நினைவூட்டு கின்றன. "கருவிளை மலர்களே காயாம் பூக்களே என்னை முடிக்கும் வகை ஒன்றுதான் கற்றீர்களோ! பிழைக்கும் வகை சொல்ல மாட்டீர்களோ! என்று உயிர் நலியக் குரல் மெலிந்து கேட்கிறாள். குயில், மயில், கருவிளை, காயாம்பூ இவ்வைந்தும் தலைவனைப் பிரிந்த நேரத்தில் தன்னைத் தேற்ற வேண்டிய இவைகள் உயிரை வருத்துகின்ற காரணத்தால் "பஞ்சமாபாதகிகள்" என்று அவற்றைப் பழித்துரைக்கின்றாள். அவளுடைய விரக தாபத்தின் வேகம் இத்தகைய வசைச் சொற்களாக வெளிவருகின்றது.

### 1.10.5. மறத்தலும் , மயக்கமும் :

காதல் எல்லை மீறுகின்ற பொழுது பித்தாதலும், மயக்கம் கொள்ளுதலும் உண்டு. கண்ணன் என்னும் கருந்தெய்வத்தின் காட்சியிலேயே மயங்கிக் கிடந்த ஆண்டாள் பித்தேறிப் பிதற்றத் தொடங்குகின்றாள். அச்சுதன் பயன்படுத்தும் பொருள்கள் மேல் மோகம் கொள்கின்றாள். தன் துன்பத்தைத் துடைப்பதற்குரிய அப்பொருள்களைக் கொணருமாறு வேண்டுகின்றாள். "பெருமான் அரையின் பீதகவண்ண ஆடை கொண்டு வாட்டம் தணிய வீச வேண்டும்" (நாலா. 628) "அவன் மிதித்த அடிப்பொடித்துகள் கொணர்ந்து பூச வேண்டும்" "அவன் மார்பில் அணிந்த வனமாலை வஞ்சியாமே தருமாகில மார்பில் கொணர்ந்து புரட்ட வேண்டும்" என்று ஆற்றவொண்ணாக் காதல் நோயின் வெம்மையினை வெளிப்படுத்தி அதனை மாற்றுவதற்குரிய உபாயத்தையும் சிறிதும் கூச்சமின்றி வெளிப்படையாகக் கூறுகின்றாள்.

## 1.11. காமம் மிக்க கழிபடர் கிளவி :

ஒருசார் காமப் பொருளில் தலைமக்களிடம் நிகழும் கூற்று "ஒருகூற்றுக் கிழவி" என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

"உறுப்புடையது போல் உணர்வுடையதுபோல்
மறுத்துரைப்பது போல் நெஞ்சோடு புணர்த்துஞ்
சொல்லா மரபினவற்றோடு கெழீஇச்
செய்யாமரபில் தொழிற்படுத்தடக்கியும்" (பொருளியல். நூ. 2)

கூற்று நிகழும் என்கிறார் தொல்காப்பியர். இதனைக் காமம் மிக்க கழிபடர் கிளவி என்றும் கூறுவர். நாம் கூறுவதைக் கேட்டுப் பதில் சொல்லாதவற்றைப் பதிலுரைப்பது போன்றும், செய்யச் சொல்லுகின்ற காரியத்தை செய்யாதனவற்றை அவை செய்வன போன்றும் நினைத்துக் காதலர்கள் அவற்றோடு பேசுதல் உண்டு. ஆண்டாளும் வெண்சங்கை விளித்து திருவேங்கடத்தானின் வாயமுதம் பற்றிக் கேட்கிறாள்.

"கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்திக்குமோ"

என்று வினவுவது பேதைப் பெண்ணின் காதல் உள்ளத்தை உணர்த்துவதாக உள்ளது. சங்கை விளித்து வாயமுதச் சுவைபற்றிப் பேசும் நிலை, வேறு பக்தி இலக்கியங்களில் காணப்படவில்லை.

## 1.12. தூதுவிடுத்தல் :

தெய்வத்தின்மீது காதல் கொண்ட தலைவி ஏதேனும் ஒரு பொருளைத் தூதாக அனுப்புதல் "கடவுள் மாட்டு மானிடப் பெண் நயந்த பக்கம்" என்று கருதப்படும். ஆண்டாள் மேகத்தையும், குயிலையும் தூதாகச் செல்லுமாறு வேண்டுகின்றாள்.

"அன்புடையாரை பிரிவுறு நோயது நீயறிதி
புண்ணியனை வரக்கூவாய்" (நாலா. 548) என்று குயிலிடம் குழைந்து கேட்கின்றாள்.

## 1.13. முடிவுரை :

சங்க இலக்கியம் அகம், புறம் என்ற இருவகைப் பொருளில் படைக்கப்பட்டுள்ளன. சங்கம் மருவிய காலத்திலும் அகமரபு பேணப்பட்டுள்ளது. பக்தி இயக்கக் காலத்தில் இம்மரபு மாற்றமும் புதுப்பொலிவும் பெற்றது. பக்தி இலக்கியங்களில் பேசப்படும் காதல், உலகியல் காதலிலிருந்து வேறுபட்டது. ஜீவாத்மா பரமாத்மாவினை அடைய விரும்பும், இரண்டறக் கலக்க நினைக்கும் சரணாகதித் தத்துவ நிலையில், அகப்பொருள் அமையப் படைக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு

வழிகாட்டியவர்கள் நாயன்மார்களும், ஆழ்வார்களுமாவர். இவர்கள் பாடல்களில் நாயக நாயகி பாவனை முறை பின்பற்றப்பட்டது. ஆழ்வார்களுள் பெண் ஆழ்வாராகச் சிறப்பிக்கப்படும் ஆண்டாள் திருவரங்கப் பெருமாள்மீது காதல் கொண்டு அவனையே கணவனாக அடைவதற்கு ஆசைப்பட்டுத் தன் காதல் உள்ளத்தினைப் பாசுரங்களாகப் படைத்தருளியளள். அதனால் அவளுடைய பாடல்களில் பக்தி உணர் வோடு காதல் உணர்வும் இணைந்து இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது.



# ஆண்டாளும் அழகுத் தமிழும்

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பெரும்பாலானவை சமய சான்றோர்களால் உருவாக்கப்பட்டவை. "தன்னேரிலாத தமிழ்" எனப் போற்றப்படும் தமிழ் சமய இலக்கியங்களால் வளர்ந்தது. சமயமும், சமய உணர்வும் இல்லையானால் தமிழ் எப்பொழுதோ, எங்கேயோ, யாராலோ அழிக்கப்பட்டிருக்கும். திருக்குறளுக்குப் பிறகு ஐம்பெருங் காப்பியங்களிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய வள்ளற் பெருமானின் திருஅருட்பா வரை தமிழின் வளர்ச்சிக்கு அல்லது பாதுகாப்பிற்குத் துணை புரிந்திருப்பது சமய இலக்கியங்கள்தான். சமய இலக்கியங்களின் நோக்கம் சமயத்தை வளர்ப்பது மட்டுமன்று, அதனினும் மேலாகத் தமிழையும் வளர்ப்பது. ஆழ்வார்களும், நாயன்மார்களும், சமயக் குரவர்கள் என்பது உண்மை. அவர்கள் நூல்கள் சமய நூல்கள் மட்டுமன்றி, அவை தமிழ் வளர்த்த நூல்கள், தமிழில் இசை வளர்த்த நூல்கள். மக்களிடையே தமிழ் பரப்பிய நூல்கள். இந்தப் பெரியவர்கள் அன்றைய சூழ்நிலையில் தமிழின் வாழ்வுக்கு, வளர்ச்சிக்கு, மறுமலர்ச்சிக்கு இயக்கமே நடத்தியவர்கள். "தமிழ்மொழி சற்று விந்தையான வரலாற்றை உடையது, தமிழ்மொழி பல காரணங்களால் சங்கம் மருவிய காலம் முதல் இன்றுவரை தற்காப்புக்காகப் போராடும் சூழ்நிலையில் இருந்து வந்திருக்கிறது. இந்தத் தற்காப்புப் போரில் முன்னின்றவர்கள் ஆழ்வார்களும், நாயன்மார்களும். ஆழ்வார்கள் தமிழுக்கான போராட்டத்தைக் கி.பி. 5-ஆம் நூற்றாண்டிலே தொடங்கி விட்டனர்" என்ற இராம. வீரப்பனின் கருத்து ஆழ்வார்கள் தமிழுக்குச் செய்தத் தொண்டினைப் புலப்படுத்தும்.

தமிழ்ப் பக்தி இலக்கியம் படைத்த வைணவக் கவிஞர்களான பன்னிரு ஆழ்வார்களுள் ஆண்டாள் நாச்சியார் ஒருவர். ஆழ்வார் பன்னிருவருள் இவர் ஒருவரே பெண். ஆண்டாள் பாடியவை திருப்பாவை (30 பாடல்கள்) நாச்சியார் திருமொழி. (143 பாடல்கள்) ஆகும். திருமால் மேல்கொண்ட தன் காதல் உணர்வை இயல்பாக சுந்தரத் தமிழில் பாடிய பெண் கவிஞர்கள் அவருக்கு முன்னும் இல்லை, பின்னும் இல்லை.

முத்தமிழ் வளர்க்க முச்சங்கம் நிறுவிய பாண்டிய நாட்டின் சிறந்த ஊர்களில் ஒன்றான ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளின் பிறப்பிடமாகும். பெரியாழ்வாரால் திருத்துழாய் செடியின் நடுவே கண்டெடுக்கப்பட்டு அருமையாக வளர்க்கப்பட்டவள். கோதை வளர வளர திருமால் மேல்

அவள் கொண்ட அன்பும் பெருகி வளர்ந்தது. ஓங்கியுலகளந்த உத்தமனுக்காக தந்தை வைத்திருந்த பூமாலைகளை எடுத்து அணிந்து பார்த்து, அம்மாலை கார்முகில் கண்ணனுக்கு ஏற்றதுதானா என்று பார்த்து, பார்த்து வைத்தாள். ஆண்டாள் சூடிக் களைந்து வைப்பதை அறியாமலேயே பெரியாழ்வார் அம்மாலைகளைப் பெருமானுக்கு சார்த்தி வந்தார். ஒருநாள் ஆண்டாள் வழக்கம்போல மாலைகளையணிந்து நிலைக் கண்ணாடியில் அழகு பார்க்கும்போது, பெரியாழ்வார் கண்டு, கோதையிடம் எம்பெருமான் திருவடிகளுக்கு அபசாரம் செய்து விட்டாயே, இனி வேறு மாலைகட்டி, சார்த்த நேரம் இல்லையே நான் என்ன செய்வேன் என வருந்தி வேறு பூக்களைப் பறித்து மாலையாக்கி சார்த்தினார். அன்றிரவு கனவில் இறைவன் தோன்றி நும் திருமகளாகிய சுடர்க்கொடி சூட்டிய மாலையை அணிவதற்கே நான் இங்கு பள்ளி கொண்டிருக்கிறேன் எனக்கூறி மறைந்தான். கோதையின் பெருமையினை உணர்ந்த பெரியாழ்வார் மாலைகளைச் சார்த்தினார். ஆண்டாளுக்கு ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாக மாறியது. தோழிகள் கோபிமார்கள் வடபெருங்கோயிலுடையான் திருக்கோயிலே நந்தகோபருடைய திருமாளிகையாய் விளங்கியது. தன்னைக் கவர்ந்த கண்ணனை வேண்டி 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்று நோன்பிருந்து, கோதை நாச்சியார் கண்ணனின் நிழற்படத்தை அழகுத் தமிழால் தீட்டிக் காட்டினார். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் பூமாலைகளை மட்டுமேயன்றி பாமாலைகளையும் பாடிக் கொடுத்தார்.

"பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேத மனைத்திற்கும் வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பது வம்பு"

என்று நாச்சியாரின் நற்றமிழ் பாசுரங்களை அறியாதவர்கள் பூமியில் இருப்பதே பூமாதேவிக்குப் பாரமாம் என்ற திருப்பாவையின் பெருமையைக் கூறும் இப்பாடல் ஆண்டாள் பாடிய பாசுரங்களின் வளத்தை நமக்குச் சொல்லும்.

"அஞ்சுகுடிக் கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையனாய்ப் பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பக்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து"

என மணவாள மாமுனிகள் ஆண்டாளின் அருந்தமிழின் உயர்வைப் போற்றிப் புகழ்கின்றார். "திருப்பாவைப் பாடல்களின் அமைப்பு புதுமையுடையது. வினைச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளமை பாராட்டும் தன்மையது. தமிழ் இலக்கியத்தில் இஃது மிகப் புதுமையானது.

ஆண்டாளின் திருப்பாவை வேறு சில இலக்கிய வகைகளுக்கான வித்துக்களையும், பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி என்ற பிரபந்தக் கூறுகளையும் கொண்டது" என்ற ம.பெ. சீனிவாசன் தன் வைணவ இலக்கிய வகைகள் நூலில் கூறுகின்றார். மேலும் அவர் "தேசமுடையார் திற", "மாமன் மகளே மணிக்கதவம் தாள் திறவாய்", "சீரார் வளை யொலிப்ப வந்து திறவாய்" என்பன திருப்பாவையில் வரும் நடைதிறப்பு, கலிங்கத்துப்பரணி போன்ற பரணி இலக்கியங்கள் அமைவதற்கு வழிகாட்டியானது என்றும் கூறுகின்றார்.

விலங்குகளாய் வாழ்ந்த மக்களை கூட்டுறவு கொண்டு வாழ்தற்கு மொழியே காரணம். அந்தந்த நாட்டிற்கேற்ப மொழிகள் வேறுபட்டுள்ளன. தமிழ் என்பதற்கே இனிமை என்பது பொருள். தமிழின் ஒலியும் இனிமை, சொல்லும் இனிமை, பொருளும் இனிமை என்பதற்கு ஏற்ப ஆண்டாள் தமிழ் மொழியில் தன்னுடைய பாசுரங்களை இயற்றினார். மற்ற அடியார்கள் தம் பாக்களைத் தமிழில் பாடியிருந்தாலும், ஆண்டாள் தமிழும், தம் பாசுரங்களும் வேறல்ல என்ற தன்மையில்,

"கோதை வாய்த் தமிழ் வல்லவர்"
"தூய தமிழ் மாலை ஈரைந்தும் வல்லவர்"
"கோதை தமிழ் ஈரைந்தும்"
"செந்தமிழ் பத்தும் வல்லார்"
"புதுவையர் கோன் கோதை தமிழ்"

என்ற பாசுரங்களில் தமிழைப் பற்றிப் பேசியுள்ளார். ஆண்டாளின் பாசுரங்கள் தமிழன்னையின் வடிவம். இவரது பாசுரங்களில் அமைந்துள்ள அகப்பொருள் தத்துவங்கள் தமிழ்த்தாய்க்கு உயிருக்குயிராய் இலங்குகின்றன.

இயல், இசை, நாடகம் என்ற மூன்றும் இணைந்ததே தமிழ். ஆண்டாள் இயற்றிய பாசுரங்களில் இவை மூன்றும் வரவியிருத்தலைக் காணலாம். மற்ற ஆழ்வார்களின் சீரிய அமைப்பு வாய்ந்த பாக்களைக் காட்டிலும், ஆண்டாள் இயற்றிய பாக்கள் உயர்வும், அழகும், சீர்மையும், இனிமையும் வாய்ந்து நுட்பப் பொருளைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருப்பதால் இவை இயற்றமிழிற்கு இருப்பிடம் எனக் கூறலாம்.

உலகம் இசையால் ஆக்கப்பட்டுள்ளது
"ஆடி ஆடி சுகம் குழைந்து - இசை
பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி"

என்று பாடிய நம்மாழ்வாரின் வரிசையில், ஆண்டாளும் தன் பாசுரங்களை இசையோடு இசைத்துள்ளதாக இயம்புகிறார்.

"இன்னிசையால் சொன்ன மாலை ஈரைந்தும்
இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை"

என்றும் பரமனடிப் பாடி, உத்தமன் பேர் பாடி, வாயினால் பாடி, கேசவன் பேர் பாடி, பாடிப்பறை கொண்டு, முகில் வண்ணன் பேர் பாட, மனத்திற்கினியானைப் பாடவும், கீர்த்திமைபாடி, பங்கயக் கண்ணனைப் பாட, மாயனைப் பாட, துயிலெழப்பாடுவான், உன் மைத்துனன் பேர் பாடத் திருத்தக்க செல்வமும் சேவகமும் பாடி, கோவிந்தா உன் தன்னைப் பாடி என்று ஆண்டாள் பாசுரங்களை இசையோடு பாடும் மரபில் வைத்து தமிழிசைக்கு உயிர் கொடுத்தாள்.

"குதி கொண்டரவில் நடித்தாய்"
"வாய்த்த காளியன் மேல் நடமாடிய கூத்தனார்"
"கணமா மயில்காள் கண்ணபிரான் திருக்கோலம்"
"போன்று அணிமா நடம் பயின் றாடுகின்றீர்"

என்று நாடகத் தமிழிற்குரிய அமைப்புகளும் ஆண்டாள் பாசுரங்களில் காணப்படுகின்றன. கண்ணனைக் கூத்தனென்றே அழைக்கின்றாள். மயில்கள் கண்ணன் கோலத்தைக் கொண்டு தம்முன் நடிப்பதை ஆண்டாள் கண்டு மகிழ்கின்றாள்.

தமிழின் தன்மையை முழுவதும் விளக்குதற் பொருட்டே ஆண்டாள் தம் பாசுரங்களில் முத்தமிழையும் பொருத்தி, திருப்பாவையின் இறுதியில் "சங்கத் தமிழ்மாலை முப்பதும்" எனக் கூறியுள்ளார்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் பழமையுடைய தமிழ்மொழி விரிந்த இலக்கியப் பரப்பினைத் தன்னகத்தேக் கொண்டுள்ளது. வைணவ இலக்கியங்கள் தமிழுக்குத் தந்த இலக்கிய வகைகள் எண்ணற்றவை. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள "பல்லாண்டு" "பள்ளியெழுச்சி" "பாவை" "மடல்கள்" "மாலை" ஆகிய இலக்கிய வகைகள் காணப்படுகின்றன.

தமிழர்கள் உயிரெனப் போற்றி வந்த அகத்திணை ஒழுகலாறுகளைச் சங்க இலக்கியங்களின் வழி நாம் அறிந்துகொள்ள முடியும். தமிழர்கள் போற்றிய அகத்திணை நெறி சங்ககாலத்திற்குப் பிறகு பிற சமயங்களின் ஊடுருவலால் புறக்கணிக்கப்பட்டது. ஆனால் பக்திக் காலத்தெழுந்த ஆழ்வார்கள் வைணவ நெறியைப் பரப்ப முன் வந்தாலும், தமிழருக்கே உரிய அகத்திணை நெறியை நாயக-நாயகி பாவமாக மாற்றிக் காதல் பாசுரங்கள் பாடி மக்களை ஈர்த்தனர்.

தான் விரும்பிய கண்ணனை அடையும் பொருட்டு, நோன்பு நோற்க விரும்பிய கோதை ஆண்டாள், தமிழ் மரபில் விளங்கிவந்த, பாவை நோன்பை தன் கையில் எடுத்து தித்திக்கும் செந்தமிழால் திருப்பாவையை சித்தம் உருக பாடிச் சென்றாள்.

**பாவை :**

திருப்பாவை ஆண்டாள் அருளிச்செய்த நூல்கள் இரண்டனுள் முதல் நூலாகும். மார்கழி மாதத்தில் ஆண்டாள் கண்ணனை அடைதற் பொருட்டு நோற்ற நோன்பைக் குறித்துச் சொல்லப்படுகிறது.

**பாவையின் தோற்றம் :**

பழங்காலத்தே பெண்கள் கடற்கரையில் மணலாற் பாவை செய்து விளையாடுவர். இது "பாவை பாடல்" என அழைக்கப்பட்டது.

"நேரிழை மகளிர்வார்மணல் இழைத்த
வண்டற்பாவை"

"வாலிழை மடமங்கையர்
வரிமணல் புனைபாவைக்குக்" (புறம் 11:2-5)

"பொய்கை சூழ்ந்த பொழில் மனைமகளிர்
கைசெய் பாவை" (அகம் 181:16)

என்ற பாடல்களிலிருந்து மகளிர் பாவையோடு நீர்த்துறைக்குச் சென்று விளையாடுவர் என்பது அறியப்படுகிறது.

அதுபோல "நீராடல்" என்பது தமிழர்களுக்குரிய ஒன்றாகக் காணப்பட்டது.

"நறு வீரியம்மான் மகளிராடும்
தைஇத் தண்கயம் போலப் பலர் படிந்து" (ஐங்குறு 34)

"வான் பெய னைந்த புறத்த நோன்பியர்
தையூணிருக் கையின்" (நற் 22)

என்ற சங்ககால இலக்கியங்களில் பேசப்படும் தை நீராடல் எனும் தமிழர் தம் பழக்கத்தினையும் மனதில் கொண்டு "பாவை"யை உருவாக்கினாள்.

மார்கழி மாதத்தில் விடியற்காலையில் எழுந்து, குளிரைப் பொருட்படுத்தாது, நீராட்டத்துக்கு விருப்பமுடைய பெண்களெல்லாரும் ஒருமித்து வந்து பாவை நோன்பு நோர்த்தால் நாடு செழிக்க நல்ல மழை பொழியும், வழிபடும் கன்னிப் பெண்களுக்கு நல்ல கணவன்மார்கள் கிடைப்பார்கள். பாவை நோன்பு என்பது சங்க காலத்தில் தனித்துவம் பெற்று விளங்கியது. கார்த்தியாயினி என்னும் கண்ணனுக்கு முன் பிறந்து தெய்வ வடிவினனாகிய காளியை வணங்கும் வழிபாடு. இந்த வழிபாட்டினை கண்ணனின் நந்தகோபன் மாளிகை சென்று அவனை இசையோடு போற்றுவதான தெய்வீக நிலைக்கு உயர்வுடை இலக்கியமாக ஆண்டாள் மாற்றினாள்.

ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரை ஆயர்பாடியாகவும், வடபெருங் கோயிலை நந்தகோபரின் திருமாளிகையாகவும் கொண்டு பாவை நோன்பு நோற்கிறாள். தமிழ் நாட்டின் பழைய வழக்கத்தைத் தழுவியதே திருப்பாவையில் ஆண்டாள் நோற்ற நோன்பு என்பதற்கு திருப்பாவைத் தனியனில் "தொல் பாவை" என வருவதும், மேலும் முன்னோர் வழக்கைப் பின்பற்றியே இந்நோன்பு நடைபெற்று வந்தது என்பதற்கு "மேலையார் செய்வகைகள்" என்று திருப்பாவையில் வரும் ஆண்டாள் வாக்கும் ஆதாரமாகின்றது. (வைணவ இலக்கிய வகைகள் பக். 99)

"நம் பாவைக்கு செய்யும் கிரிசைகள்
நம் பாவைக்குச் சாற்றி நீராடினில்
பிள்ளை களெல்லாரும் பாவைக் களம்புகார்" (தி.பா. 2:3-13)

என்னும் திருப்பாவைத் தொடர்கள் தமிழகத்தின் பழைய பாவை நோன்பினை ஆண்டாள் கையாண்டுள்ளமையைப் புலப்படுத்தும்.

ஆண்டாள் இயற்றிய பாவை பிற்காலத்தில் பலர் பாவை பாடல்களை பாடுவதற்கு அடிப்படையாக அமைந்தது எனலாம். இன்றைய சூழ்நிலையில் பாவையின் நடை, வடிவு, மொழித்திறன் இவற்றை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் உணர்ச்சி, சமுதாய உணர்வு ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு, தமிழ்த் திருப்பாவை, தைப்பாவை, செந்தமிழ்ப் பாவை, திருமணப் பாவை போன்ற நூல்கள் வெளிவந்துள்ளன.

## பிள்ளைத்தமிழ் :

"பிள்ளைத்தமிழ்" என்பது பிற்காலத்தே நன்கு வளர்ந்த ஓர் இலக்கிய வகையாகும். ஆனால் இதற்கான வித்து தொல்காப்பியத்திலேயே காணப்படுகிறது.

"குழவி மருங்கினும் கிழுவதாகும்" என்றொரு நூற்பா குழந்தையைப் பொருளாக வைத்துப் பாடும் மரபு தோன்றிவிட்டதைக் கூறுகின்றது. சங்க இலக்கியத்தில்

"குறுகுறு நடந்து சிறுகைநீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை ............" (262 புறநானூறு 188-3-6)

என்ற தொடர்கள் பிள்ளையை மையப்படுத்திப் பாடல்கள் புனையப்பட்டமையை நமக்கு விளக்குகின்றன.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள பெரியார் திருமொழியில் தான் பிள்ளைத் தமிழுக்கான முன்னோரின் கூறுகளை முழுமையாக

நாம் காண முடிகிறது. "கண்ணனின் பிறப்பு, தாலாட்டு, அம்புலி, செங்கீரை, சப்பாணி, தளர்நடை, அண்மை வருகை, புறம்புல்கல், அப்பூச்சி காட்டல், அம்மம் உண்ணல், காதுகுத்தல், நீராட்டல், குழல்வாரல், பூச்சூட்டல், காப்பிடல், ஆய்ச்சியர் முறையிடல், அன்னை அம்மம் தர மறுத்தல், கன்றின் பின் போகவிட்டு இரங்கல், கன்னியர் காமுறல் என்று பிற்கால பிள்ளைத்தமிழ் இலக்கணத்தின் முன்னோடியாகத் திகழ்ந்தன.

பெரியாழ்வார் பாடிய பிள்ளைத் தமிழ்ச் செய்திகளுட் சில ஆண்டாளின் நாச்சியார் திருமொழியிலும் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக "சிற்றில் சிதைத்தல்" நாச்சியார் திருமொழியில் காணப்படுகின்றது.

## சிற்றில் சிதைத்தல் :

சிற்றில் என்பது சிறுபெண்கள் விளையாடும்போது மணலாலே வரம்பு கட்டி வீடாகக் கட்டுவது. ஆயர்பாடிப் பெண்ணாக தன்னை நினைத்துக் கொண்ட ஆண்டாள், காமதேவன் வரவை நோக்கித் தெருவிற்கு அலங்காரமாக, காமதேவனுக்காக செய்ததாலே அதை பிடிக்காத கண்ணன் இதை அழிக்க முற்பட்டான். அப்படிப்பட்ட கண்ணனிடம் நாள் முழுவதும் நாங்கள் சிரமப்பட்டு இழைத்த சிற்றிலை, நீ உன் கண்களால் பார்க்காது சிதைக்காதே. உன் மனம் வருத்தப்படும்படி ஒருவார்த்தை சொல்ல மாட்டோம், எங்கள் சிற்றிலின் அழகைப் பார்த்து, நீ சிதைக்காதே என்று கண்ணனிடம் வேண்டுவதாக ஆண்டாள் நயம்படப் பாடித் தந்திருக்கிறாள்.

## தூது :

ஒருவர் தம் கருத்தை மற்றொருவருக்குத் தெரிவிக்க இடையே வேறு ஒருவரை அனுப்புவதே தூதாகும். புறப்பொருள், அகப்பொருள் ஆகிய இருவகைகளிலும் தூது அனுப்புதல் உண்டு என்பதைத் தொல்காப்பியத்தின் வாயிலாகவும், சங்க இலக்கியங்கள் வாயிலாகவும் உணரலாம்.

கண்ணனை நாயகனாகவே கொண்டு வழிபட்டவள் ஆண்டாள். அந்தக் கண்ணனிடம் தான் கொண்ட அன்பை, பக்திப் பெருக்கத்தைத் தெரிவிக்க மேகத்தைத் தூதாகச் சென்று வருமாறு வேண்டுகின்றாள். காலமும் கார் காலமாய் வாட்டுகிறது. மேகங்கள் மின்னி முழங்கிக் கொண்டிருந்தன. கண்ணன் முன்பு பிரிந்து சென்றபோது மறுபடியும் கார்காலத்தில் உன்னை வந்து கூடுவேன்" என்று சொன்ன சொல் நினைவுக்கு வந்தது. அவன்தான் சொன்னபடியே அந்த மேகங்களோடு வந்திருப்பானோ என நினைத்தாள், கார் மேகங்களோ ஒன்றும் கூறவில்லை, கண்ணனும் வரவில்லை. மேகங்களாவது தன் ஆற்றாமை தீரும்படி தூது சென்று வருமா என்று அவற்றை யாசிக்கின்றாள்.

"விண்ணீல மேலாப்பு விரித்தாற் போல் மேகங்கள்
தெண்ணீர்பாய் வேங்கடத்து என் திருமாலும் போந்தானே

கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோராச் சோர்வேனே
பெண்ணீர்மை யீடழிக்குமிது தமன் கோர் பெருமையே
என மேகங்களை விழித்து,

"உலங்குண்ட விளங்கனிபோல்
உள்மெலியப்புகுந்து, என்னை
நலங் கொண்ட நாரணற்கென்
நடலை நோய் செப்புமினே"

என்றும்,

அங்குயிலே! உனக்கென்ன மறைந்துறைவு
ஆழியும் சங்கு மொண்தண்டும்
தங்கியகை யவனைவரக் கூவில் நீ
சாலத் தருமம் பெறுதி

என்று ஆண்டாள் மேகத்தையும், குயிலையும் தூதுவிட்டு தமிழில் தூது என்ற வகைக்கு ஏற்றம் கொடுத்துள்ளாள்.

## கூடல் இழைத்தல் :

கூடல் இழைத்தல் என்பது காதல் கொண்ட தலைவி, தலைவன் தன்னை வந்து கூடுவானோ, கூடமாட்டானோ என்பதையுணரக் கையாளும் ஓர் செயலாகும். பூமியில் மணலைப் பரப்பிக் கண்களை மூடிக்கொண்டு, தம்முடைய நான்கு விரல்களையும் மடக்கிச் சுட்டுவிரலால் வட்டமாகக் கீறி, கீறும்போது ஊன்றிய இடத்தில் சுட்டுவிரல் நுனிவந்து பொருந்தியதாவென்று பார்த்தல். அங்ஙனம் பொருந்துவது தலைவன் வருவான் என்பதையும், பொருந்தாமை தலைவன் வரமாட்டான் என்பதையும் அறிந்துகொள்ள இயலும் வழியாகக் கருதுவது தமிழ் மரபு.

திருவரங்கன்மீது காதல் கொண்டு அவனையே மணப்பதென்று உறுதி கொண்ட ஆண்டாள் தான் தலைவனைக் கூட இயலுமோ என ஏனைய பெண்கள்போல கூடலிழைத்துப் பார்க்கின்றாள்.

"ஆய்ச்சி மார்களும் ஆயரும் அஞ்சிடப்
பூத்த நீள்கடம் பேறிப் புகப் பாய்ந்து
வாய்த்த காளியன்மேல் நடமாடிய
கூத்தனார்வரிற் கூடிடு கூடலே"

என்று கூடல் இழைக்கின்றாள்.

## தமிழ் அகத்துறையில் ஆண்டாள் செய்த புதுமைகள் :

தமிழ் அகத்திணைக் கூறுகளைத் தனதாக்கிக் கொண்டு ஆண்டாள் நாயக நாயகி பாவத்தில் பாசுரங்கள் பாடி இறைவனை அடைய வேண்டி காமனையும், சாமனையும் வேண்டுகிறாள். மன்மதனும், அவன் தம்பி சாமனும் சிறு தெய்வங்கள். இவர்கள் மூவரான, தேவர்க்குக் கட்டுப்பட்டவர்கள். இங்கு ஆண்டாள், திருமாலை மணந்துகொள்ளத் திருமாலுக்குக் கட்டுப்பட்ட சிறு தேவரான மன்மதனையும் அவன் தம்பி சாமனையும் நோக்கி நோன்பிருக்கிறாள். இது ஆண்டாள் பாடிய புதுமையாகும்.

ஆண்டாளின் சிந்தனைத் துணிவும், இலக்கிய நேர்மையும் வேறெந்தப் பெண் படைப்பாளியிடமும் காண முடியாது. காதல் படைப்புகளில் பாடு பொருளாக மட்டுமே பெண் இருந்த பொழுதில், காதலையே பாடு பொருளாக்கிய முதல் பெண் கவி ஆண்டாள்தான். அகம் சார்ந்து பாடாமல் புறம் மட்டுமே பாடிய பெண் புலவர் ஏராளம். பெண்ணின் பணி அலங்காரமும், ஆடலும், பாடலும், பிள்ளை பெறுதலுமே என்றிருந்த நேரத்தில் பாமாலை சூடினாள் ஆண்டாள். அதுவும் காதல் பாமாலை. மேலும் சங்ககால இலக்கியக் காதல் பாடல்களில் காதலர் பெயரைச் சுட்டும் வழக்கம் கிடையாது. ஆனால் ஆண்டாள் துணிச்சலாக தான் நேசித்தவனின் பெயரை வாயார, மனமார அழைத்து புதுமை செய்தாள். மேலும் பீடுடைய மார்கழி மாதத்தில் காலையில் எழுந்து, சமையலறைக்குள் முடங்காமல், ஒவ்வொரு நாளையும், சோம்பிக் கழிக்காமல், அலங்காரத்தில் தொலைக்காமல், வெற்று வாயாடல்களில் இழக்காமல் மனக்கட்டுப் பாட்டுடன் பெண்கள் நோன்பு நோற்று, எய்த வேண்டிய இலட்சியத்தை நோக்கி நடைபோட வேண்டும் என்று தமிழுக்குப் புதுமை செய்தாள். "ஆடிப்பூரம் உதித்த தமிழ்க் கற்பூரம் அவள். பெண்ணுறக்கம் தீரக் கவிதைக் கழல் கொண்டு வந்தவள். அழுகுக்கிறக்கம் தீர ஆன்ம நெருப்பு மொண்டு வந்தவள். அந்தக் கோதைத் தமிழ் அமுதக் கடல். தமிழ் மணக்கும் தாழம்பூ மடல். தமிழ்க்காதல் கொள்வோர்க்குக் பொங்குமாக் கடல், தமிழ் தன் அழகு பார்க்கும் கண்ணாடிக் கிணறு (பெண் எழுத்து பக். 23) என்ற ஆண்டாள் பிரியதர்ஷினியின் ஆண்டாள் பற்றிய கூற்று ஆண்டாளுக்கும் தமிழுக்கும் இருந்த இணைப்பினை நமக்கு உணர்த்தும்.

## தமிழகத்தை அடையாளம் காட்டியவள் :

தொல்காப்பியத்தில் "மாயோன் மேய காருறையுலகம்" என்ற நூற்பாவிலிருந்து மாயோனாகிய திருமால் வழிபாடு தமிழகத்தில் இடையறவுபடாது தொடர்ந்து வருவதை நாம் உணர முடிகின்றது. அத்தகைய திருமாலை முழுமுதல் தெய்வமாகக் கொண்டு பாடல்

புனைந்த ஆண்டாளின் பாடல்களின் வழி தமிழ் நாட்டின் சில மரபுகளை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது. திருப்பாவை, தமிழர்கள் கடைபிடித்து வந்த காத்தியாயினி நோன்பினையும், நாச்சியார் திருமொழி காமன் நோன்பினையும் உணர்த்துகின்றன.

திருப்பாவை பெண்களில் பலர்கூடி நோன்பு நோற்பதையும், நாச்சியார் திருமொழி தனி ஒரு பெண் நோன்பு மேற்கொண்டு வழிபடுவதையும் பேசுகின்றது. நோன்பு செய்யும் இடத்தைத் தூய்மை செய்து, அங்கு மேடைகட்டி நோன்புக்களத்தை அமைத்து, வீட்டின் முன்புறம் தெருவில் நுண் மணலைப் பரப்பித் தூய்மை செய்வது. கிழக்கு வெளுக்கும் முன்னர் நீராடுவது என்றும், நோன்பு காலத்தில் நெய், பால், உண்ணாமல், கண்ணுக்கு மையெழுதாமல், கூந்தலுக்கு மலரிட்டு முடியாமல், கோள் சொற்களைக் கூறாமல் நோன்பிருக்க வேண்டும் என்று தமிழக நோன்பு முறைகளை ஆண்டாள் அடையாளம் காட்டுகின்றாள்.

கோயில்களிலுள்ள வழிபாட்டு மரபுகளையும் ஆண்டாள் பல இடங்களில் சுட்டுகின்றாள். "புள்ளரையன் கோவிலில் வெண்சங்கினை ஒலிப்பது, கோவில் காப்பது, அடியார்க்குச் சேவை சாதிப்பது, தெய்வங்களின் உருவத்தை ஒவியமாக எழுதிக் கோவில்களில் வழிபடுவது தெய்வர் பேர்களை சுவரில் எழுதி வழிபடுவதினை "சுவரிற்புராணநின் பேரேழுது" என்ற பாசுரக் குறிப்பு நமக்கு உணர்த்துகின்றது. மேலும் ஆண்டாள் மலரிட்டு வழிபடுதல், திருவமுது படைத்தல், பிரசாதம் பெறல், இறைவனுக்கு காணிக்கை தருதல், சங்கல்பம் செய்தல் போன்றவற்றையும் கூறுகின்றாள். நாச்சியார் திருமொழியின் ஆறாம் பதிகம் திருமணச் சடங்குகள் பற்றி விவரித்துக் கூறுகின்றது.

ஆண்டாள் பாசுரங்களில் மிஞ்சியிருப்பது சமய உணர்வா? தமிழ் உணர்வா என்று பார்த்தால் சமய உணர்வின் வழி தமிழ் உணர்வு வெளிப்பட்டிருக்கிறது என்ற முடிவிற்கு நம்மால் வரமுடியும். தமிழ்மொழி ஆற்றல்மிக்க மொழியாக, சிறந்த மொழியாக, சமய கருத்துக்களை எடுத்துச் சொல்லுகிற மொழியாக இருக்க முடியும் என்ற உணர்வினை ஆண்டாள் பாசுரங்கள் நமக்கு உருவாக்கித் தந்திருக்கின்றன என்றால் அது மிகையாகாது.



# ஆண்டாள் பாசுரங்களில் தொன்மக்கதைகள்

**'வேயர்புகழ் வில்லிபுத்தூ ராடிப்பூரம்**
**மேன்மேலும் மிகவிளங்க விட்டுசித்தன்**
**தூய திருமகளாய் வந்தரங்க னார்க்குத்**
**துழாய் மாலை முடிசூடிக் கொடுத்த மாதே!**
**நேயமுடன் திருப்பாவைப் பாட்டாறைந்தும்**
**நீயுரைத்ததை ஒருதிங்கட் பாமாலை**
**ஆயபுகழ் நூற்று நாற்பத்து மூன்றும்**
**அன்புடனே அடியேனுக்குக் கருள் செய்நீயே'**

- ஸ்ரீ ஆண்டாள் துதி.

பல்லோராலும் பரவப்பட்டும், பிறமொழியாளராலும், தமிழிலே இசைக்கப்பட்டும், மதுரபக்தியின் வெளிப்பாடாகத் திகழும் ஆண்டாள் பாசுரங்களில் பல களங்கள் பொதிந்துக் காணப்படுகின்றன. அங்களங்களில் தொன்மம் (myth) என்ற தளத்தின் வழியே ஆண்டாளால் எடுத்தாளப்பட்டுள்ள தொன்மக் கதைகளின் துணைக்கொண்டு பாசுரங்களின் உன்னதச் சிறப்பை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

## தொன்மம்

மித் (myth) என்ற ஆங்கிலச் சொல்லுக்குச் சமமானத் தமிழ்ச் சொற்களாகப் புராணக்கதை, புனைகதை, தொன்மம், பழங்கதை, பழமரபுக்கதை, புராண மரபுக்கதை போன்ற பல்வேறுபட்ட சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. எண்வகை வனப்புகளை விளக்கிய தொல்காப்பியர்,

**'தொன்மை தானே உரையொடு புணர்ந்த**
**பழமை மேற்றே'** எனக் குறிப்பிட்டுள்ளார்.

**'புகழ் வாய்ந்த பழங்கதைகள் பற்றியது என்று'**

உரையாசிரியரும் மேற்கோள் காட்டியுள்ளனர். இதனால் **'புராண மரபுக் கூறுகள்'** என்பதைத் 'தொன்மம்' எனக் குறிப்பிடலாம்.

தமிழ்ச்சூழலில் தொன்மக்கதை என்பது மித், லெஜண்ட் ஆகிய இரு இலக்கிய வகைகளின் பண்புகளையும் உள்ளடக்கிய ஒரு இலக்கிய

வகையாக விளங்குகிறது. சி.இ. மறைமலை கூறுகையில், **'ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் கூட்டு முயற்சியால் உருவாகி அச்சமுதாயத் தினரின் நம்பிக்கைகளைப் புலப்படுத்தும் வண்ணம் அமைந்து செவி வழக்காக வழங்கிவரும் பழங்கதையே தொன்மக்கதை எனப்படும்'** என்கிறார்.

மனிதனைவிடச் சக்திவாய்ந்த ஆற்றல்களின் பழைய செயல்களைப் பற்றியும், என்றும் வாழும் இயல்புகளைப் பற்றியும், அவை நம்மால் நம்பமுடியாத சூழ்நிலைகளில் நடந்ததாகவும் தொன்மக்கதைகள் கூறுவதாக வில்லியம் ஷெர்வுட்பாக்ஸ் குறிப்பிடுகிறார். வெண்டி டொனிகர் கூறுகையில், **'தொன்மங்கள் தெய்வங்களைப் பற்றிய கதைகள் ஆகும். மனிதனைப் பற்றிய கதைகளிலிருந்து இவை முழுவதும் வேறுபட்டவை'** என்கிறார். எனவே புராணங்களை உற்பத்தி செய்யக்கூடிய கருவாகவும், ஒரு குறியீட்டு விளக்கமாகவும், மனிதனின் அடிமனத்தைக் காட்டுவதாகவும் தொன்மங்கள் உருவாகி கதைகள் அமைகின்றன.

## ஆண்டாள் பாசுரங்களில் தொன்மக்கதைகள்

திருப்பாவையில் 30 பாடல்களும், நாச்சியார் திருமொழியில் 143 பாடல்களும் ஆக 173 பாடல்கள் ஆண்டாளின் படைப்பாகத் திவ்விய பிரபந்தத்தில் உள்ளன. இப்படைப்பில் பாவைப்பாடல்கள் நாடகபாவனை முறையிலும், நாச்சியார் திருமொழி தன்னுணர்வாகவும் பெரும்பாலும் அமைந்துள்ளமை வெள்ளிடமலை வேதங்களும், உபநிடதங்களும் கூறுகின்ற நுட்பமான ஆன்மீக நீதிக்கருத்துக்களையும், அவதார நாயகர்களின் வாழ்க்கைகளையும், விளக்கிக் காட்டும் புராண மரபுக் கூறுகளாகிய தொன்மங்களும் இப்பாசுரங்களில் காணக்கிடைக்கின்றன.

திருமாலின் துணைவியாகிய பூமித்தாய் ஆண்டாளாகப் பிறந்து திருவரங்கப் பெருமானை மணந்தாள் என்பது ஆண்டாள் குறித்த கதை. இருப்பினும் திருப்பாவைப் பாடல்களில் ஆயர்க் குலப்பெண்கள் மார்கழி நோன்பு நோற்றுக் கண்ணனைப் பரவுவதையும், நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் தனது காதலனாகிய கண்ணனை அடைவதற்கான ஏக்கமுமே மையப்பொருளாகப் பாடப்பட்டுள்ளன. இவற்றினூடே ஆண்டாள் தான் அடைய விரும்பும் திருமாலின் உன்னதத் தன்மைகளைத் தொன்மங்களின் வாயிலாகப் புலப்படுத்துவதை அவர் தம் பாசுரங்களின் வழி அறிய முடிகின்றது.

ஆண்டாள் பாசுரங்களில் தொன்மக் கூறுகளும் பல இடங்களில் விரவிக் காணப்பட்ட போதிலும் ஈண்டு தொன்மக் கதைகளாகப் பத்துக் கதைகள் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## 1. கஜேந்திரனுக்கு மோட்சம் அளித்த கதை

இந்திரத்தையும்நன் என்னும் அரசன் அகத்தியமுனிவரால் சாபத்திற்குள்ளாகி கஜேந்திரன் எனும் யானையாக மாறி காட்டில் திரிந்தான். முதலை வாய்ப்பட்டபோது **'ஆதிமூலமே'** என்று கூவியழைக்க, திருமால் யானைக்கு அருள் செய்தார்.

இதனைத் தம் பாசுரத்தில் மூன்று இடங்களில் பேசுகின்றார். **'சிற்றில் சிதையேல்'** எனும் இரண்டாம் திருமொழியில், ஆயர் பெண்கள் அமைக்கின்ற சிறிய விளையாட்டு வீடுகளை கண்ணன் அழிக்க முயல்கையில் எமது **'சிற்றிலைச் சிதையாதே'** என பாடுகையில்,

**'மதயானை கோள் விடுத்தாய்'** (516) என்றும், **'கூடல் இழைத்தல்'** எனும் நான்காம் திருமொழியில், ஆயர்மகள் கோடிட்டு **'கோவலனவரின் கூடிடுகூடலே'** என்று குறிபார்க்கையில்,

> **' . . . . . . . . . . . மதம்**
> **ஒழுகு வாரணம் உய்ய அளித்தஎம்**
> **அழகனார் . . . . . . . . . '** (543)

என்றும், 'பிருந்தாவனத்தே கண்டோமே' எனும் பதினான்காம் திருமொழியில் ஆண்டாள் பிரிவுத் துன்பத்திலிருந்து மீண்டு பெருமகிழ்வு அடைந்தாள் என்று கூறுகின்ற போதில்,

> **'பருந்தாள் களிற்றுக்கு அருள்செய்த**
> **பரமன் தன்னைப் பாரின்மேல்**
> **விருந்தா வனத்தே கண்டோமே'** (646)

என்று முதலை வாய்ப்பட்டக் களிறு பகவான் அருளால் மீட்கப்பட்டுத் துயர் தீர்ந்ததுபோல் ஆண்டாளின் பிரிவுத்துயர் நீங்கிற்று என்று கூறப்பட்டுள்ளது.

## 2. காளியன் மேல் நடனம் ஆடிய கதை

யமுனை நதியின் ஓர் மடுவில் வெகுகாலம் வாசம் பண்ணிக் கொண்டிருந்த காளியன் என்னும் கொடிய ஐந்தலை நாகம், தன் விசத்தன்மையால் நீரையும் விசமாக்கிற்று. இதனால் அந்நாகத்தின் படங்களின் மேல் ஏறித் துவைத்து நர்த்தனம் செய்து தண்டித்து பின் மோட்சம் நல்கினான்.

இச்செய்தி மூன்று இடங்களில் கூறப்பட்டுள்ளன. **'கன்னியரோடு கண்ணன் விளையாடல்'** எனும் மூன்றாம் திருமொழியில்,

**'குதிகொண் டரவில் நடித்தாய்'** (528) என்றும்

**'கூடல் இழைத்தல்'** எனும் நான்காம் திருமொழியில் கண்ணன் வருவானா?

என பாடுகையில்

**'வாய்த்த காளியன் மேல்நட மாடிய**
**கூத்தன் . . . . . . . . . . . . . . .'** (537)

என்றும், 'கண்ணன் இருக்குமிடம் எனை சேர்மீர்கள்' எனக் கோதை தன் தமர்க்குக் கூறிய 12 - ஆம் திருமொழியில்,

**'நீர்க்கரை நின்ற கடம்பை யேறிக்**
**காளிய னுச்சியில் நட்டம் பாய்ந்து**
**போர்க்கள மாக நிருத்தஞ் செய்த**
**பொய்கைக் கரைக்கென்னை உய்த்திடுமின்'** (621)

என்றும் கூறப்பட்டுள்ளது.

## 3. கோவர்த்தன மலை எடுத்தமை

இந்திரனின் கர்வத்தை அடக்க நினைத்துப் பெருமான் நந்த கோபரைக் கொண்டு பூசை பண்ணுவித்தார். இதனால் அவமானம் அடைந்த இந்திரன் கோபத்தினால் கோகுலம் நாசம் அடைய மழையை வருவித்தான். ஆனால் பகவான் தன் லீலையால் படைத்த கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து கோகுலத்தைக் காப்பாற்றினார். இதனை மூன்று இடங்களில் ஆண்டாள் குறிப்பிட்டுள்ளார்.

**'குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி'**

என்று திருப்பாவையிலும் 12-ஆம் திருமொழியில்,

**'காலிகள் உய்ய மழை தடுத்து**
**கொற்றக் குடையாக வேந்தி நின்ற**
**கோவர்த் தனத்தென்னை உய்த்திடுமின்'** (624)

என்றும்,

'அச்சுதன் அணிபொருள் கொண்டு அவலம் தணிமின்' எனக்கூறும் 13-ஆம் திருமொழியில்,

**'கொள்ளைக் கொள்ளிக் குறும்பனைக்**
**கோவர்த் தனனைக் கண்டக்கால்'**

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## 4. சகடாசுரனை அழித்த கதை

கண்ணன் தொட்டிலில் இருக்கையில் கம்சன் ஏவலால் சக்கர உருவாய் வந்து வஞ்சனை செய்த சகடாசுரனை, குழந்தைகள் காலால்

இயற்கையாய் உதைப்பதுபோல் கண்ணன் உதைக்க அவ்வுதைபட்டு மாய்ந்தான்.

இச்செய்தி இரு இடங்களில் பேசப்படுகின்றது. திருப்பாவையில் அரி என்று எங்கும் பேரொலி எழுப்பியதைக் கூறுகையில், **'கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி'** (497) என்றும் திருப்பாவையிலே, ஆயர் பெண்கள் கண்ணன் தன்மீது இரங்குதல் வேண்டும் என்று கூறும் போது,

**'பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி'** என்றும் பாடுகின்றனர்.

## 5. சிசுபாலன் வதம் செய்த கதை

சிசுபாலன் சேதி நாட்டு அரசன். இவனுக்கு மணம் பேசப்பட்ட ருக்மணியைக் கண்ணன் கவர்ந்து மணம் செய்து கொண்டதால் பகைமை ஏற்பட்டது. இறுதியில் கண்ணனுடைய ஆழியினால் தலை துணிக்கப்பட்டு இறந்து பின் எம்பெருமானது திருவடி அடைந்தனன். இதனை 4-ஆம் திருமொழியில் **'கூடலிழைத்தல்'** எனும் பகுதியில்,

**'அன்றின் னாதன செய்சிசு பாலனும்**

. . . . . . . . . . . . . . . . . .

**வீழ, முன்**
**கொன்ற வன்வரில் கூடிடு கூடலே'** (540) எனக் கூறியுள்ளார்.

## 6. புள்ளின் வாய் பிளந்த கதை

கம்சனால் ஏவப்பட்டுக் கொக்கின் வடிவம் கொண்டு வந்தவன் பகாசுரன். இவன் கண்ணனை விழுங்கிவிட, அவ்வசுரனுடைய நெஞ்சில் கண்ணன் நெருப்பைப்போல எரிக்கவே, அவன் பொறுக்க முடியாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கினால் குத்த நினைக்கையில், கண்ணபிரான் அவனது வாயலகுகளைத் தனது இரு கையினாலும் பற்றி விரைவாகக் கிழித்து அழித்தான்.

இக்கதை நான்கு இடங்களில் குறிக்கப்படுகிறது. திருப்பாவையில்,

**'புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா வரக்கனை'** (486)

என்றும், காமனைத் தொழுகின்ற இடமான முதல் திருமொழியில்,

**'புள்ளினை வாய்பிளந் தானென்பதோர்**
**இலக்கினில் புகவென்னை எய்கிற்றியே'** (505)

என்றும், 4-ஆம் திருமொழியில்,

**'புள்ளும் வீழ முன் கொன்றவன் வரில்**
**கூடிடு கூடலே'** (540)

என்றும் 14-ஆம் திருமொழியில்,

**'புள்ளும் உடன்மடிய வேட்டையாடி**
**வருவானை விருந்தாவனத்தே கண்டோமே'**

என்றும் கூறப்பட்டுள்ளது.

## 7. மருதமரத்தை வீழ்த்திய கதை

கண்ணன் குழந்தையாயிருக்கும் காலத்தில் தாய் யசோதை திருக்கயிறு கொண்டு உரலிலே கட்டினார். கண்ணன் உரலுடன் இரட்டை மருத மரத்திற்கு நடுவே இழுத்துக் கொண்டு வந்தபோது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்ட போது மரம் முறிந்து வீழ்ந்து அழிந்தது. கம்சனால் ஏவப்பட்ட இரு அசுரர்கள் இம்மரங்களில் அவேசித்து இருந்தனர். இக்கதையானது மூன்று இடங்களில் கூறப்பட்டுள்ளது.

4-ஆம் திருமொழியில்,

**'அற்றவன் மருதம் முறிய நடை**
**கற்றவன் . . . . . . . . .**
**. . . . . . மதுரைப் பதி**
**கொற்றவன் வரில் கூடிடு கூடலே'** (539)

என்றும்,

**'நின்ற நீள்மருதும் வீழ'** (540)

என்றும், 7-ஆம் திருமொழியில் வெண்சங்கைப் பதுமநாபனோடு சுற்றமாக்கி பாடுகையில்,

**' . . . . . . .**
**நின்ற புணர் மருதம்**
**சாய்த் தீர்த்தான் கைத்தலத்தே'**

என்றும் கூறப்பட்டுள்ளது.

## 8. பேய் முலை நஞ்சு உண்ட கதை

பூதகி ஒரு அரக்கி கம்சன் ஏவலையேற்றுக் கோகுலத்தில் இருந்த கண்ணனுக்கு வஞ்சனையால் முலைப்பால் ஊட்டி மாய்க்க முயலுகையில் கண்ணனால் முலை வழியாக உயிருண்ணப்பட்டு மாய்ந்தாள். இக் கதை இரு இடங்களில் சுட்டப்படுகின்றது.

திருப்பாவையில்,

**'பேய் முலை நஞ்சுண்டு'** (479)

என்றும் 3-ஆம் திருமொழியில் கண்ணன் கோபியர்களின் சேலைகளைக் கவர்ந்துக் கொண்டு விளையாடுகையில் தயைச் செய்து எங்கள் சேலைகளைக் கொடுத்துவிடு என்னும் பாவனையில் ஆண்டாள் அருளிச் செய்த பாடலில்

**'வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட**
**மகிமையி லீகூறை தாராய்'** என இடம் பெற்றுள்ளது.

## 9. மல்லரை வீழ்த்திய கதை

கண்ணன் கம்சனாய் ஏவப்பட்ட சாணூரன், முஷ்டிகள் முதலிய பெரு மல்லர்களை மற்போரிலே கொன்று வெற்றி பெற்றான். இக்கதையானது திருப்பாவையில்

**' . . . . . மல்லரை மாட்டிய**
**தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்'** (481)

என இடம் பெற்றுள்ளது.

## 10. யானை மருப்பொசித்த கதை

கம்சனால் ஏவப்பட்ட குவலயாபீடம் என்னும் மதயானையைக் கண்ணன் எதிர்த்து நின்று அதன் தந்தங்கள் இரண்டையும் பறித்து அதனை ஆயுதமாகக் கொண்டு அடித்துக் கொன்றான். இக்கதையானது இரு இடங்களில் பேசப்படுகின்றது. 4-ஆம் திருமொழியில்,

**'மாட மாளிகை சூழ்மதுரைப் பதி**
**நாடி, நந்தெருவின் நடுவே வந்திட்டு**
**ஓடை மாமத யானை உதைத்தவன்,**
**கூடுமாகில் நீ கூடிடு கூடலே'**

என்று மதயானை உதைத்தவன் என்னைக் கூடுவானா? என்று பாடுகின்ற இடத்தும், 7-ஆம் திருமொழியில், மாதவனின் வாய்ச்சுவையும், பரிமளமும் எத்தகையவை என வெண்சங்கை நோக்கி ஆண்டாள் பாடுகையில்,

**'மருப்பொசித்த மாதவன்தன்**
**வாய்ச்சுவையும் நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன்**
**சொல்லாழி வெண்சங்கே'**

என்றும் கூறுமிடத்து யானை மருப்பொசித்த கதை சுட்டப்படுகின்றது.

## தொன்மக் கோட்பாடு

பல்வேறு தத்துவப்பள்ளிகள் தோன்றிய காலத்தில் கடவுளரைப் பற்றி விளக்கிய மரபு வழிப்பட்ட சமயங்களும், தொன்மக் கதைகளும் எப்படி உண்டாயின என்ற கேள்வி முதன்மையாக எழுந்தது. அப்போது இரண்டு வகையான கோட்பாடுகள் அதற்கு விடைகூறும் வகையில் உருவாயின. அவற்றில் முதல் கோட்பாட்டின் பெயர் யூகெமெரஸ் (Euhemerist Theory) என்பதாகும். இக்கோட்பாட்டை உருவாக்கியவரின் பெயரே கோட்பாட்டிற்கும் வைக்கப்பட்டுள்ளது. கி.மு. 300-இல் வாழ்ந்த அறிஞர் யூகெமெரஸ் ஆவார்.

இக்கோட்பாட்டின் அடிக்கருத்து, **'கடவுளர் எல்லாரும் ஒரு காலத்தில் வாழ்ந்து மடிந்த அரசர்களே'** என்பதுதான். தொன்மக் கதைகளில் காணப்படும் பல கடவுள் செய்திகள் இவ்வாறு நடந்த செய்திகளாகவே காணப்படுகின்றன.

புராணங்களில் காணப்பெறும் பல்வேறு தெய்வப் பாத்திரங்கள் முன்னர் வாழ்ந்த அரசர்கள் தாம் என்று கருதுவர். சிவபெருமான், மீனாட்சி, இராமன், கண்ணன் ஆகிய பலரும் ஏதோவொரு காலத்தில் ஆட்சி புரிந்த வலிமைமிக்க அரசர்களேயாவார் என்ற கருத்து நிலவுகிறது.

இராமன் வாழ்ந்த அயோத்தியும், கண்ணன் ஆண்ட துவாரகையும் சில ஆண்டுகளுக்கு முன் அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பெற்றதாகச் செய்தி வெளிவந்துள்ளது. இக்கோட்பாட்டின்படி திருமாலின் அவதாரமாகிய இராமன், கண்ணன் அரசராய் இருந்து தெய்வமாகி இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. மேலும் ஆண்டாள் பாசுரங்களில் காணலாகும் தொன்மக் கதைகள் இக்கோட்பாட்டிற்கு உட்பட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

இரண்டாவது கோட்பாடு **'தொடர் உருவக முறை'** (Allegerical Method) என்ற பெயர் கொண்டது. உயர் கடவுளரைத் தெய்வத்தன்மை வாய்ந்தனவும் பிறவுமான செய்திகளின் உருவகமாகக் கருதுகிறது. இலக்குமி செல்வத்துக்கும், சரஸ்வதி கல்விக்கும் உரிய தெய்வங்களாக நாம் கருதுவது இக்கோட்பாட்டைச் சார்ந்ததேயாகும். இந்தமுறை கி.மு. ஆறாம் நூற்றாண்டில் எழுந்தது. பாசுரத்தில் குறிக்கப்படும் திருமால் காத்தல் புரிகின்ற தெய்வமாக உள்ளமை புலனாகிறது.

இதன்வழி ஆண்டாள் பாசுரங்களில் தொன்மக்கதைகள் பழமையின் பெட்டகமாய் மிளிர்வதை நாம் அறியலாம். இவ்வாறு 24 இடங்களில் இடம்பெற்றிருக்கின்ற தொன்மக் கதைகள் ஆண்டாளால் கண்ணனின் சிறப்புக்களைக் குறிக்கும் தொன்மங்கள் ஆகும்.

இவை மட்டுமின்றி திருமாலின் அவதாரங்களுள் வராக அவதா;ம் 1 இடத்திலும், நரசிம்ம அவதாரம் ஒரு இடத்திலும், வாமன அவதாரம்

13 இடங்களிலும், இராமாவதாரம் ஒன்பது இடங்களிலும், கிருஷ்ண அவதாரம் 46 இடங்களிலும் பேசப்பட்டுள்ளன. இவையாவும் தொன்மக் கதையாகவே காணப்படுகிறது. இவற்றில் கிருஷ்ண அவதாரம் அதிகமாகப் பேசப்படுவதற்குக் காரணம் ஆண்டாள் தன்னை ஆய்ச்சியாக அனுக்காரம் செய்து கொண்டமையே ஆகும். மேலும் பாவையும், நாச்சியார் மொழியும் ஆயர்பாடியைக் களமாகக் கொண்டு பாடப்பட்டனவாம்.

இத்தொன்மக் கதைகள் குறிக்கும் புராணச் செய்திகளின் முழுமையைப் புராணத்தின் வாயிலாகவே அறியமுடியும். கி.மு.வினைக் காலமாகக் கொண்டிருந்த பதினெண் மகாபுராணங்கள் பிரமன், சூரியன், அக்னி, சிவன், திருமால் ஆகிய தெய்வங்களைப் பற்றி கூறுகின்றன. இவற்றுள் திருமால் குறித்து 8 புராணங்கள் உள்ளன. அவையாவன நாரத, பாகவத, கருட, விஷ்ணு, பதும, வராக, வாமன, மச்ச என்பனவாம். இவை வரலாற்று நோக்குடன், மிகத் தொன்மைக் கருத்துக்களைக் கொண்டு, சமய தனிநிலைக் குழுவினரால் எழுதப்பட்டவை ஆகும்.

கி.மு.வில் உருவாகிய புராணங்கள் குறித்த தொன்மச் சிந்தனை கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் அவதரித்த ஆண்டாளால் கையாளப் பட்டுள்ளமைப் போற்றத்தக்கதாகும். மேற்கூறப்பட்ட இத்தொன்மக் கதைகளில் கஜேந்திரனுக்கு மோட்சம் அளித்த கதை, கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த கதை, என்ற இரண்டினைத் தவிர மற்றவை அசுரர்களை வதம் செய்கின்றமையையே வெளிப்படுத்தி நிற்கின்றது. இதில் பகவான் அசுரர்களை அழிப்பதுடன் மட்டுமின்றி, இறுதியில் அவர்களுக்கு திருவருள் நல்குகின்ற தன்மையையும் காணமுடிகின்றது.

திருவரங்க நாதனைக் கைப்பிடிக்க பூமாலையைச் சூடிக் கொடுத்ததோடு மட்டுமின்றி பாமாலையும் தந்த ஆண்டாள் தம் பாசுரத்தில், இத்தொன்மங்களின் வழி, தன்னைக் கண்ணன் ஆட்கொள்வான் என்ற பொருளமைதியிலே பாடப்பட்டுள்ளமை வெளிப்படுகிறது.



# பாவைப் பாடல்களில் தன்னுணர்ச்சி வெளிப்பாடு

நந்தவனத்தில் திருத்துழாய் செடிகளிடையே கிடந்து, பெரியாழ்வாரால் எடுத்து வளர்க்கப்பட்ட தெய்வக் குழந்தை ஆண்டாள். கண்ணனையே தன் மணாளனாகக் காதலித்தார். இவர் பாடியவை திருப்பாவையும், நாச்சியார் திருமொழியும் ஆகும். இவற்றுள் நாச்சியார் திருமொழி பாடல்களில் பயின்று வரும் தன்னுணர்ச்சிக் கருத்துக்களை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

இலக்கியம் வடிவம் நோக்கிச் சிலவகையாகவும், பொருள் நோக்கிச் சில வகையாகவும், புலவர்கள் மனநிலை பற்றி வேறு சில வகையாகவும், பாகுபாடு செய்யப்படும். (Dr. மு.வ. - இலக்கிய மரபு, 1968). தன்னுணர்ச்சிக் கவிதை புலவர்களின் மனநிலையை ஒட்டிப் பாகுபாடு செய்யப்பட்ட இலக்கிய வகையைச் சார்ந்ததாகும். ஒரு கவிஞன் தன்னுள்ளே தான் ஆழ்ந்து, தன் உள்மனத்தின் உணர்வுகளை நெளிவு, சுழிவு இல்லாமல் அப்படியே பிறர்க்கு உணர்த்தும் இசைப்பாடல்களையே தன்னுணர்ச்சிக் கவிதை என அழைக்கிறோம். ஆங்கில இலக்கியம் இதனை **'லிரிக்'** (Lyric) என்ற பிரிவில் அடக்கும். நாயகன், நாயகி பாவனையில் பாடல்கள் பாடிய ஆண்டாளை ஒரு தன்னுணர்ச்சிக் கவிஞராகவும், அவரது பாடல்களைத் தன்னுணர்ச்சிப் பாடல்களாகவும் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஆங்கிலத்தில் லிரிக் என்னும் சொல்லுக்கு **'யாழ் போன்ற இசைக்கருவிகளை இசைத்துப் பாடும் பாட்டு'** எனும் பொருள் உள்ளது. ஒரு தனிமனிதனின் அகமன உணர்வுகளைச் சித்தரித்துக் காட்டும் கவிதை தன்னுணர்ச்சிக் கவிதை எனப்படும். தன்னுணர்ச்சிக் கவிதைகள் அனைத்தும் இசைக்கருவிகளை இசைத்துப் பாடப்படுவதல்ல. ஆனால் இவ்வகைக் கவிதைகளில் இயல்பாகவே ஒரு இசைத்தன்மை அமைந்துள்ளது எனலாம். **'ஒரு தனிச்சம்பவம் அல்லது உணர்ச்சி அல்லது வருணனை எடுத்தாளப்படும் தனிப் பிண்டமான சில கவிதைகளை லிரிக் என்று கூறுவார்கள்'** எனப் புதுமைப்பித்தன் உரைக்கிறார்.

## இலக்கியங்களில் தன்னுணர்ச்சி

1. காலத்தின் கண்ணாடியாக விளங்கும் இலக்கியங்களுள் முதன்மைப்படுத்திப் பேசப்படுவதும், பழந்தமிழர்தம் வாழ்வை சீரிய

முறையில் எடுத்துரைப்பதாகவும் அமைந்தவை சங்க இலக்கியங்கள். இவ்விலக்கியங்களில் குறிப்பிட்ட சில புலவர்களால் பாடப்பட்ட பாடல்கள், தன்னுணர்ச்சிப் பாடல்களாக அமைந்துள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது. சான்றாக ஔவையார், வெள்ளி வீதியார், நெட்டிமையார் போன்ற புலவர்களைக் குறிப்பிடலாம்.

சான்றுப் பாடல்:

1. **'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில் . . . . . . . .'**
2. **'கன்றும் உண்ணாது கலந்தினும் படாது . . . . . . . '**

**- வெள்ளி வீதியார்.**

பக்தி இலக்கிய காலத்தில் தோன்றிய சைவ, வைணவ சமயப் பாடல்களிலும் தன்னுணர்ச்சிக் கருத்துக்கள் காணப்படுகின்றன. நம்மாழ்வார், ஆண்டாள் போன்றோரை இதற்குச் சான்றாக்கலாம்.

## ஆண்டாள் பாசுரங்களில் தன்னுணர்ச்சி

ஆண்டாள் அடியவராகப் பாராட்டப்பெறுவதோடு இறையாக வழிபடவும் பெறுவர். பிற ஆழ்வார்கள் உள்ளத்தால் பெண்ணாக மாறித் திருமாலைக் குழந்தையாக, காதலனாகக் கண்டு மகிழ்ந்து பாடியுள்ளனர். ஆண்டாளோ தம் பெண்மையுணர்வு மிஞ்சத் தம் காதல் உணர்வுகளை வெளிப்படுத்துபவர்.

உலகியல் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டுள்ள பாவை நோன்பினை, பரமனை அடையும் வழியாகக் காட்டியவர் நம் பாவை நாச்சியார். ஒவ்வொரு உயிரும் இறையருளைப் பெற, இறையருளைத் தம் உணர்வுகளால் வடித்துக் காட்டியவர் திருப்பாவைச் செல்வி ஆண்டாள்.

ஆண்டாள் உள்ளத்தில் கனலாய் ஒளிவிட்ட காதல் தாகம், அவரைத் தீரமிக்க தன்னுணர்ச்சிப் பெண் கவிஞராக நமக்கு அடையாளம் காட்டுகிறது. ஆண்டாள் தம் எண்ணங்களை, உணர்ச்சிகளை, இலட்சியக் கனவுகளைத் தம் பாடல்களில் வெளியிட்டார். அவருடைய பாடல்களில் பெரும்பாலும் தன்னுணர்ச்சிக் கவிதையின் இலக்கிய அமைதி நிறைந்து காணப்படுகிறது.

ஆண்டாள் தன்னுடைய மன எழுச்சிகளை மறைக்காமல் பாடியிருக்கிறார். ஆண்டாள் திருவரங்கன்மீது அளவுகடந்த அன்பு கொண்டு, அவனை மணந்துகொள்ள முடிவுசெய்து, மார்கழி நோன்பிலிருந்து பாவை பாடினாள். இப்பாடலில் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தும், செய்யக்கூடாத செயல்களைத் தவிர்த்தும், எப்படியாவது இறைவனை அடைய வேண்டும் என்ற உறுதியோடு

பாடுவதை அறியமுடிகிறது. இப்பாடல்கள் எல்லாம் ஆண்டாளின் உள்ள வெளிப்பாடே ஆகும்.

ஆண்டாளின் பாடல்வரிகள், ஒரு குட்டிக்குரங்கானது தன் தாய் தூக்கிச் செல்லும்போது எவ்வாறு இறுகப் பிடித்துக் கொள்ளுமோ, அதைப்போல இறைவனுடைய திருவடிகளைப் பற்றிக் கொண்டு பாடிய பாடல்கள் அவரின் தன்னுணர்ச்சியினை நமக்கு அடையாளம் காட்டுகிறது.

## நாச்சியார் திருமொழியில் தன்னுணர்ச்சி

பாவைப்பாடல் பாடிய பின்பும் இறைவன் தன்னை மணம் செய்ய வராத காரணத்தால், விரகதாபத்தால் நாச்சியார் திருமொழி 143 பாடி ஊன் உருக, உள்ளம் நெகிழ, உயிர் மெலிய வாடினாள் என்பதைப் பின்வரும் செய்திகள் தெளிவுபடுத்துகின்றன.

எப்பெருமானின் தேவியாகும் தகுதிபெற்ற, நாச்சியார் என்ற அந்தஸ்திற்கும் ஆளான ஒரே மனிதகுலப் பெண்மணி கோதையே ஆவாள். நாச்சி என்றால் நாயகி என்பது பொருளாகும். பெரியாழ்வாரும் தொழுது வணங்கும் நிலைக்கு ஆளானவள் கோதை.

இவர் பாடிய நாச்சியார் திருமொழியுள் உள்ள 143 பாசுரங்களும், ஜீவாத்மா பரமாத்மா சரணாகதித்துவ சங்கம நிலையாகிய, நாயக, நாயகித்துவம் கொண்ட உணர்ச்சிகள் கொப்பளிக்கும் அதி அற்புதமான பிரபந்தப் பாசுரங்களாகும்.

நாச்சியார் திருமொழியில் உள்ள 14 பதிகங்களுள் ஒருசில பதிகங்கள் தவிர மற்றவற்றுள் தன்னுணர்ச்சிக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

இணையற்ற வடிவமான எம்பெருமானின் மனதில் மானசீகமாகத் தோன்றியவனே மன்மதன். இவன் பிரிந்திருக்கும் கணவனை, மனைவியுடன் சேர்த்து வைக்கும் ஆற்றல் பெற்றவன். இவனைத் தன் சகோதரனாக நினைத்து, தன்னைக் கண்ணனிடம் சேர்ப்பிக்குமாறு வேண்டுவதாக அமைந்துள்ள பாடல்களில் 4, 5, 7, 8, 9 ஆகிய பாடல்களில் தன்னுணர்ச்சி அமைந்துள்ளது எனலாம்.

4, 5, 7 ஆகிய பாடல்களில் தன்னுடைய உடலானது கண்ணனுக்கே உரியது என்றும், 8-வது பாடல் **'கேசவ நம்பியின் திருப்பாதம் பிடித்தவள் இவள்'** என்ற பேற்றினை அருள வேண்டும் என்றும், கூறுவதாக அமைந்துள்ளது. 9-வது பாடல் கண்ணனுக்குப் பணிவிடை செய்யும் பேறு கிடைக்கவில்லையாயின் **'அழுதழுது அலமந்து'** போகும் நிலைக்கு, அதாவது ஒரு பைத்தியத்தின் நிலைக்குத்தான் ஆளாகிவிடுவதாகக் கூறுகிறாள். இங்கு ஆண்டாளின் உள்ளன்பு வெளிப்படுகிறது.

**பழுதின்றி பாற்கடல் வண்ணனுக்கே**
**பணிசெய்து வாழப்பெறாவிடில் நான்**
**அழுதழுது அலமந்தம்மா வழங்க**
**ஆற்றவும் அது உனக்கு உரைக்குங் கண்டாய்**

அதாவது கோதையின் ஆழ்மனத்தில் எம்பெருமானே நிறைந்து நின்றமையால் அவனே தனது உடல், ஆத்மாவை அனுபவிக்கும் நாயகன் என்ற வைராக்கியமான முடிவிற்கும் வந்துவிட்டாள். இறைவன் மேல் கொண்ட காதலால் தன்னிலை மறந்து பேசும் ஆண்டாளின் நிலையைப் பாடல்வழி அறிய முடிகிறது.

4-ம் பாசுரத்தில், **'என் கைப்பற்றி தன்னொடும் கூடுமாகில் நீ கூடிடு கூடலே', 'கொற்றவன் வரில் கூடிடு கூடலே'** எனப் பாடல்கள் முடிகின்றன. தன்னிடம் கண்ணன் வரவேண்டும் என்றும் தன்னொடும் கூட்ட வேண்டுமென்றும் விரும்பும் கன்னியின் கூற்றுகளாக இவை அமைந்துள்ளன.

5-ம் பாசுரம் குயிலைத் தூது விடுவதாக அமைந்துள்ளது. முதலாவது பாடலில் தலைவனை நினைத்து நினைத்து தன் கைவளையல் கழன்று விட்டது என்றுகூறும் ஆண்டாள், **'தன்னை ஆசைப்பட்டவர்களுக்கு வளையிழந்து நிற்பதுதான் பலன்'** என்ற நியாயம் அவன் தந்த சாஸ்திரங்களில் உண்டோ என்று வினா எழுப்புகிறாள். மேலும்

**'என்புருகியின வேல் நெடுங்கண்கள் இமை பொருந்தா பல நாளும்**
**துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பதோர் தோணிபெறாது**
**உழல்கின்றேன்'**

என்னும் 4-ம் பாடலில், தலைவனையே நினைத்துக் கொண்டிருப்ப தால், எலும்புகள் எல்லாம் உருகிப் போனது மட்டுமல்லாமல், கண்ணிமையும் ஒன்றுசேர மறுக்கிறது என்று கூறுகிறாள். இந்நிகழ்ச்சி, தொல்காப்பியத்தில் காதல் வயப்பட்ட தலைவியின் மன உணர்வாகக் கூறப்படும் உடல் மெலிதல், வளையல் கழறல், தூக்கமின்மை ஆகியவற்றோடு ஒப்பிடத்தக்கது எனலாம். 6-வது பாடலில்தான் உயிர் தரித்து இருப்பதற்குக் காரணமே எம்பெருமான்தான் என்றும் 7-வது பாடலில்

**'என் கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதூகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யும்'** என்றும் குறிப்பிடுகிறாள். இவ்வரிகள் தலைவியின் அகமன உணர்வை வெளிக்காட்டுவதாக அமைந்துள்ளது.

6-ம் திருமொழியில், ஆண்டாளின் செயல்பாடு அனுபவிக்கத்தக்க ஒன்றாகிறது. தனக்கு நடக்கவிருக்கும் திருமண நிகழ்ச்சியை

நினைத்தும், கனாக் கண்டும், மகிழும் ஒரு மானுடப் பெண் போலவே, ஆண்டாளும், கனாக் காண்கிறாள். பொற்குடம் வைத்தல், தோரணம் கட்டல், மகட் பேசல், கோடியுடுத்தல், மணமாலை அணிவித்தல், கைப்பிடித்தல், தீயை வலம் வருதல், அம்மி மிதித்தல், பொரி தட்டல், மஞ்சன நீராட்டல் போன்ற மங்கள நிகழ்வுகளைக் குறிப்பிட்டுத் தனக்கு நடப்பது போன்ற இன்ப உணர்வு கொண்டவளாக ஆண்டாள் திகழ்கிறாள். **'ஆழ்மன எண்ணங்கள் கனவாக உருவெடுக்கும்'** என்ற உளவியல் நிகழ்வோடு இது ஒப்பிடத்தக்கது.

இந்த மங்கல மணவினைக் காட்சிகள் தன் தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. மங்கல மண முழக்கத்தோடு தன் திருமணம் முடிந்துவிட்டதாகக் கற்பனை மழையில் நனைந்தவை அவை.

8-ம் திருமொழியில் மேகத்தைத் தூதுவிடும்பொழுது, தன் எண்ணத்தை வெளியிடும் ஆண்டாள், தன் பாடலில்

1. **'என்னகத் திளங் கொங்கை விழும்பித் தாம் நாடோறும்**
   **பொன்னாகம் புல்குதற்கு என்புரிவுடைமை செப்புமினோ'**

2. **'கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்**
   **தங்குமேல் என்னாவிதங்கு மென்றுரையீரே'**

3. **'நீர் காலத்து எருக்கில் அம்பழவிலைபோல் வீழ்வேனை'**
4. **' . . . . . . . . . . . . . . . . . . . . ஓர் பெண் கொடியை**
   **வதை செய்தானென்னும் சொல் வையகத்தார் மதியாரே'**

என்றெல்லாம் குறிப்பிடுகிறார். தன்மீது உரிமையுடையவன் இறைவன் என்றும், தான் கண்ணனுக்கே உரிமையுடையவள் என்றும் நிலைநாட்டுகிறாள் ஆண்டாள்.

10-ம் பாசுரத்துள் மழையைத் தூதுவிடும் ஆண்டாள்,

**'மழையே மழையே மண்புறம்பூசி உள்ளாய் நின்ற**
**மெழுகூற்றினாற்போல்'**

என்று குறிப்பிடுகிறாள். அதாவது, வெண்கலப் பாத்திரம் செய்பவர்கள் மண்ணை இணைத்து உள்ளிருக்கும் மெழுகைத் தள்ளிவிடுவது போல, பெருமானும், தன் உடல் சத்து அழியும்படிச் செய்கிறான் என்று கூறுகிறாள். தன் உடல் மாறுபாட்டிற்கு இறைவனே காரணம் என்பதை ஆணித்தரமாக எடுத்துரைக்கிறாள்.

11-ம் பாசுரத்தில் **'என் மெய்ப்பொருளும் கைக்கொண்டார்'** என்று கூறும் ஆண்டாள், தன் உடலையே கொள்ளை கொண்டவர் திருமால் என்று கூறுகிறார். மேலும்

**'தம்மை யுகப்பாரைத் தாமுகப்பர் என்னும் சொல்**
**தம்மிடையே பொய்யானால் சாதிப்பாரினியே'**

என்ற பாடலில், நன்னெறியை எடுத்துரைக்கும் இறைவனே நன்னெறியிலிருந்து மாறலாமா? அப்படியெனில் வேறு யாரிடம் இதை எதிர்பார்க்க முடியும் என்று கேள்வி எழுப்புகிறார். நம்மிடம் உரிமையோடு இருப்பவர்களிடம் பேசுவதுபோல் ஆண்டாள் பேசுவது அவரின் தன்னுணர்ச்சியை நமக்கு அடையாளம் காட்டுகிறது.

12, 13-ம் பாசுரங்களில், கண்ணனின் தொடர்புடைய பொருள்களைக் கொண்டு தன் விரக தாபத்தைப் போக்க வேண்டும் என்றும், தன்னைக் கண்ணனிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்றும் உறவினர்களிடம் பேசுவதாக அமைந்துள்ளது. முதல் பாடலில் இறைவனையே நினைத்து வாழும் எனக்கு நீங்கள் பேசும் பேச்சுக்கள் **'ஊமையரோடு செவிடர் வார்த்தை**'யாகப் படுகிறது என்கிறாள். மேலும் அவனது திருவடிபட்டு மிதித்த இடத்தில் உண்டான பாதத் தூளியையாவது கொண்டு வந்து என் உடம்பிலே பூசுங்கள் என் உயிர் தரித்திருக்கும் என்று கூறுகிறாள். இவை ஆண்டாளின் உள்ள வெளிப்பாடே ஆகும்.

14-ம் பாசுரம், தனது வாழ்க்கை துளசி வனத்திலேயே சங்கமமாகி முடிந்துவிட வேண்டும் என்ற நோக்கத்துடன் தன் பரமாத்மா கண்ணனைப் பிருந்தாவனத்தில் கண்டதாகப் பாடி தனக்குள் ஆத்ம அமைதி பெறுவதாக அமைந்துள்ளது. இவை ஆண்டாளின் மன எழுச்சிகளே ஆகும்.

## முடிவுரை

ஆண்டாள் மானுட மங்கையாக இருந்தும் இறைவனையே ஆட்கொண்டவள் என்பதை அவரது பாடல்களிலிருந்து அறியமுடிகிறது. குறையொன்றுமில்லாத கோவிந்தனின் புகழை ஆண்டாளின் தன்னுணர்ச்சிப் பாடல்களிலிருந்து அறிய முடிகிறது. இக்கட்டுரையின் மூலம் ஆண்டாளின் பாடல்கள் தன்னுணர்ச்சிப் பாடல்கள் என்பதை அறிய முடிகிறது.



# திருப்பாவையின் சிறப்புகள்

## முன்னுரை

திருப்பாவை ஒரு பக்திக் காப்பியம், ஒரு காதல் ஓவியம். எளிய தமிழில் இறையருளை விவரிக்கும் இனிய இலக்கியம். திருமாலின் அவதாரச் சின்னங்களை விளக்கும் ஒரு அறிவுப் பெட்டகம். திருமாலின் அன்பையும், அடியவர்களின் பண்பையும் எடுத்துக்காட்டும் தமிழ்ச் சோலையில் உதித்த அரும்பெரும் பாமாலையாகும்.

## நூற்பெயர் காரணம் :

பாவை - பிரதிமை மணலால் செய்யப்பட்ட காத்தியாயினி (மகாகாளி) யின் வடிவம். இச்சொல்லானது பாவையை குறித்துச் செய்யப்படும் நோன்புக்கு ஆகி பிறகு அந்நோன்பை தெரிவிக்கும் பிரபந்தத்துக்கு ஆயிற்று. பாவை என்பது நோன்பு.

இளங்கன்னிமார் தம்முடன் நோன்பு நோற்பதற்கு வர விரும்புபவர்களையும் அவர்கள் உறங்கினாலும் எழுப்பித் தம்முடன் அழைத்துக் கொண்டு செல்வார்கள். தாம் செய்யும் நோன்பில் இடையூறு வராமல் காக்கும்படி கிருஷ்ணனை வணங்கி நிற்பார்கள்.

கார்த்தியாயினியைக் குறித்து, “தேவி! நந்தகோபன் குமரனை எனக்குக் கணவனாகும்படி வரந்தருக என்று சொல்லிய வண்ணம் அருச்சித்துக் கொண்டே பெருஞ்சோற்றை மாத்திரம் உண்பவராய் ஒருமாத காலம் கழித்தனர். பெண்களின் மெய்யன்பை கண்டறிந்த ஸ்ரீகிருஷ்ணன் நோன்பு நோற்ற இடைச் சிறுமியரின் கருத்தை உணர்ந்து அருளினான்” என்று ஸ்ரீபாகவதத்தில் கூறப்பட்டுள்ளது.

திருப்பாவையின் மகத்துவத்தை “ஆமுக்த மால்யதா” என்னும் காவியமாக்கி தெலுங்கு மக்களுக்கு “கிருஷ்ண தேவராயர்” அர்ப்பணித்து உள்ளார்.

இக்கட்டுரையில் நோன்பின் பயனாக, ஆண்டாளின் பக்தியுணர்வை வெளிப்படுத்துவதும், பாவை நோன்பின் முக்கியத்துவத்தையும், திருப்பாவையில் வரும் சிறப்பம்சங்களையும் வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இதனைக் கீழ்க்கண்டத் தலைப்புகளில் வகைப்படுத்தப்படுகிறது.

1. உரையாடல் சித்திரம்
2. கோள் கணிப்பு நூல்

3. மோட்ச வாயிலின் திறவுகோல்
4. கண்ணனின் வரலாற்றுச் செய்திகள்
5. இயற்கை எழில் காட்டும் கிராமத்துப் பாவை
6. பாவையின் பக்தியும் இறைவனின் அருளும்
7. வைணவ தத்துவத்தின் கொள்கைகள்
8. வேதத்தின் மாண்பும், தத்துவமும்
9. திருப்பாவை காட்டும் இறைவனின் தோற்றம்
9.1. அவதார சிறப்பு
9.2. அவதார ரகசியம்
10. நோன்பு நோற்கும் பெண்களின் நிலை
11. பாவையரின் சமூக நிலைப்பாடுகளில் ஆண்டாள்
12. பக்தியின் வெளிப்பாடு
13. முடிவுகள்

## உரையாடல் சித்திரம்

திருப்பாவையில் ஒரு தோழி இன்னொரு தோழியுடன் உரையாடுவது போன்று பாசுரங்கள் காணப்படுகின்றன.

ஒரு பெண் தன் தோழியை அழைத்து, நோன்பு நோற்போம் வா, என அழைக்க, மற்றொரு பெண்ணானவள் நோன்பு எதற்கு என்று கேட்க, மனதுக்குப் பிடித்த மணாளனை அடைவதற்கு என்று பதிலளிக்க, அவள் சரியென்று சொல்ல, இருவரும் சேர்ந்து தம் தோழியர்களையெல்லாம் எழுப்பி, நோன்பு நோற்க தலைகட்டி விடிகாலையே எழுந்து, சுனையாடி, திருச்சுன்னம் தரித்து, நோன்பிருப்போம் என்று சொல்ல, விடிகாலையில் சென்று எழும்பும்போது, ஒரு தோழியானவள் அதற்குள்ளாகவா விடிந்துவிட்டது என்று கேட்க, விடிந்ததற்கான அடையாளங்களை விவரிக்க, அதற்கவள் உமது மனோ நிலையின் வெளிப்பாடுகளே. இந்த விடியல் உணர்வு என்று பதிலளிக்கிறாள்.

விடியவில்லை என்று உணர்ந்த இவர்கள் விடியலுக்கான அடையாளங்களைக் காட்டும் வகையில் இயற்கையின் நிகழ்ப்பாடுகளாக, பறவைகள் சிலம்புவதையும், கோழி கூவுவதையும், தயிர் கடையும் சத்தத்தையும், முனிவர்கள் எழுந்து பூஜை செய்ய முற்படும் ஓசையையும், கோயில்களில் கேட்கும சங்கநாதத்தையும், கறவையினங்கள் மேய்ச்சலுக்கு செல்வதையும் சுட்டிக்காட்டி ஒரு உரையாடல் நாடகமே நிகழ்த்துவதை அறிய முடிகின்றது.

## கோள் கணிப்பு நூல்

நோன்பு நோற்பதற்கு ஆண்டாள் மார்கழி மாதத்தைத் தெரிவு செய்கிறாள். மாதங்களில நான் மார்கழியாய் இருக்கிறேன் என்று பகவான் கிருஷ்ணன் கீதா உபதேசத்தில் தெரிவித்ததைக் கிருஷ்ண பிரேமையில் மூழ்கிய ஆண்டாள் அந்த நினைவிலே மார்கழியைத் தெரிவு செய்திருக்கிறாள்.

சத்யலோகம் என்பது பிரம்ம உலகம். இந்த தேவருலகத்தில் நமக்கு 1 வருடம் அவர்களுக்கு 1 நாள், 6 மாதம் பகல், 6 மாதம் இரவு. ஆடிமுதல் மார்கழி வரை 6 மாதம் தட்சினாயண புண்ணிய காலம் என்றும், தை முதல் ஆனி முடிய உத்ராயண புண்ணிய காலம் என்றும் கூறப்படும்.

ஆடிமாதம் நமக்கு ஆரம்பிக்கும்பொழுது அவர்களுக்கு இரவு நேரம் ஆரம்பம். இரவுபொழுது நீண்டு வளர்ந்து, நள்ளிரவாகி, சாமமாகி, விடிகாலைப் பொழுது வருவது மார்கழி மாதம் ஆகும்.

தேவர்களால் தொழப்படும் மார்கழி மாதத்தின் விடியற்கால நேரத்தை ஆண்டாள் தெரிவுசெய்து, இறை உணர்வில் பக்தியுடன் நோன்பு நோற்கத் தெரிவு செய்தமை சிறப்புறத்தக்கது.

காலத்தை மட்டும் தெரிவு செய்தது மட்டும் அல்லாமல், மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாள் என்ற திருப்பாவையும் துவங்கியிருப்பது ஆராய்ச்சிக்கும், வியப்புக்கும் உரியது.

மார்கழி மாதம் தனுசு ராசியில் சூரியன் இருப்பான். இதற்கு 7-வது ராசியான மிதுன ராசியில் திருவாதிரை நட்சத்திரத்தில் சந்திரன் வரும் தினமே பௌர்ணமியாகும். '**வானவியல் ரீதியாக இந்த நிகழ்வும் பல ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் நிகழ்வும் ஆகும்.**'தனுசு பக்தியைத் தரும் வியாழனின் வீடாகும். மிதுனம் அறிவைத்தரும் புதனின் வீடாகும். சூரியன் ஆன்மாவைக் குறிக்கும் கிரகமாகும்.

சந்திரன் அறிவைக் குறிக்கும் கிரகமாகும். இவ்வாறு மார்கழி மாதம் சுக்கிலபட்ச பௌர்ணமியில் மார்கழி நோன்பு துவங்குவதாகக் கூறப்பட்டுள்ளது. மழை பொழிதல் வேண்டி கேட்கும் பொழுதும் **'சாரங்கம் உதைத்த சரமழை'** என்கிறார் ஆண்டாள். சாரங்கம் மார்கழியில் நீராடுவதற்காக மழை பொழிந்து பயனுள்ளதாக இருக்க வேண்டுமென்று விடிகாலைப் பொழுது வேண்டுவதாக ஆண்டாள் உரைக்கிறார்.

வெள்ளி எழுந்து, வியாழன் உறங்கிற்று என்று திருப்பாவையின் பதின்மூன்றாவது பாசுரத்தில் தரப்பட்டுள்ளது. இவ்வாறு வானியல் அடிப்படையில் திருப்பாவை நூல் விளங்குகிறது என்பதை நாம் அறிய முடிகிறது.

## மோட்ச வாயிலின் திறவுகோல்

நிலையற்ற பூமியில் நிகழக்கூடிய சுகங்களில் ஆழ்ந்து கிடக்கும் ஜீவன் மோட்சம் அடைவதற்கான காலம் வரவில்லையென மீண்டும், மீண்டும் இன்பங்களை அனுபவிக்கின்ற நிலையில் உள்ளது. இந்த ஜீவாத்மாக்களுக்கு, இந்த நிலையற்ற வாழ்வை உணரச்செய்து அறிவுறுத்துகின்றது இத்திருப்பாவை.

ஆண்டாளின் பாசுரங்களில் மேற்கூறப்பட்ட தத்துவங்கள் இழையோடுகிறது. திருப்பாவையின் பதினான்காம் பாசுரத்தில், **'எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய்'** என்னும் பாடல் விவரிக்கிறது. முக்தியடைவதற்கான பக்தி மார்க்கத்தைக் காட்டி, பரம்பொருள் தத்துவத்தை விளக்கி, பாதைகாட்டி வழிநடத்திச் செல்ல குரு தேவை. அவ்விதமே குருவிடம் சரணடைவதே பதினேழாம் பாடல்.

**'அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும்**
**எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்**
**கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!**
**எம்பெருமாட்டி! யசோதா! அறிவுறாய்'** என்கிறது.

இவ்விதம் குருவை முன்னிட்டு சரணாகதி செய்துகொண்டு, மோட்சத்தில் நாட்டமுடைய ஆத்மாவிற்கு பக்குவம் வருகின்றபொழுது ஆண்டாளே தலைமையாக இருந்து (புருஷாகாரமாக) இந்த ஜீவனுக்கு மோட்சமளிக்க வேண்டுமென்று பெருமானிடம் சிபாரிசு செய்யும் தத்துவம் பதினெட்டாம் பாடலில் கூறப்படுகிறது.

**'உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்**
**நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னாய்**
**கந்தம் கமழும் குழுகீ கடைதிறவாய்**
**வந்தெங்கும் கோழி யழைத்தனகாண் மாதவிப்**
.............................'

இவ்வாறாகத் திருப்பாவையின் ஆழ்ந்த பொருளானது மோட்ச வாயிலின் திறவுகோல் என்று கூறலாம்.

## கண்ணனின் வரலாற்றுச் செய்திகள்

நாராயணன்தான் நந்தபோபன் குமரனாகத் தோன்றினானென்று கண்ணனின் அவதாரச் சிறப்பைக் காணமுடிகிறது. கண்ணன் சிறுகுழந்தையாக இருந்தபோது, கம்சனால் ஏவப்பட்ட பூதகி என்னும் அரக்கி ஒரு தாயின் வடிவத்தில் வந்து, தனது முலைப்பாலைக் கொடுத்து, கண்ணனைக் கொல்ல நினைக்கையில் அவ்வரக்கியின் விஷம் முழுவதையும் உண்டு அவளை மாய்த்தார். சகடாசுரன் என்னும்

மாயாவியான அசுரன் நந்தகோபரின் வீட்டின் முன் நின்ற வண்டியில் பிரவேசித்து கண்ணனைத் தாக்க வந்தான். அந்த வண்டியின் அச்சும், சக்கரங்களும் உடையுமாறு உதைத்து, நொறுக்கினான் குழந்தை கண்ணன். இந்நிகழ்வுகளை,

'. . . . . . . **பேய்முலை நஞ்சுண்டு என்றும்**
**கள்ளச் சகடம்கலக்கழியக் காலோச்சி'**

என்றும் ஆண்டாள் குறிக்கிறாள்.

இந்த அரக்கர்கள் மாய்ந்த பிறகு குதிரை வடிவங்கொண்ட கேசி என்னும் அரக்கனை கம்சன் அனுப்பினான். கண்ணன் அதன் வாயைப் பிளந்து தூக்கியெறிந்தான். இதன்பிறகு சானூரன், முஷ்டிகள் என்னும் இரண்டு மல்யுத்த வீரர்களை அனுப்பினான். அவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தான். இதனை,

"மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய தேவாதி தேவனை என்றும்" ஆண்டாள் குறிக்கிறார்.

இவ்விருவரும் மாளக்கண்ட கம்சன் புள்வடிவம் கொண்ட பகாசுரன் என்னும் அரக்கனை அனுப்பினான். அவனையும் கொன்றான் கண்ணன். இதனைப், **'புள்ளின் வாய் கீண்டானை'** என்கிறார் ஆண்டாள். இதன்பின் கம்சன் குவாலய பீடம் என்னும் பட்டத்து யானையினை ஏவி கண்ணனைக் கொல்ல யத்தினித்தான். கண்ணன் அந்த யானையின் தந்தங்களை முறித்து வானத்தில் தூக்கி வீசினான். இதனை, 'வல்லானை கொன்றானை' என ஆண்டாள் குறிப்பிடுகிறாள்.

விளாங்கனி வடிவத்தில் இருந்தான் ஒரு அரக்கன். கன்றின் வடிவத்தில் இருந்தான் மற்றொரு அரக்கன். இவ்விருவரையும் ஒரு சேர அனுப்பி வைத்தான் கம்சன். கன்றின் வடிவத்தில் இருந்த அரக்கனின் கால்களைப் பிடித்து, விளாங்கனி வடிவத்தில் இருந்த அரக்கனின் மீது எறிந்தான். இருவரும் மாண்டனர். இதனை,

**'கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி'**

என்கிறார் ஆண்டாள்.

இதுபோன்ற வீரதீரச் செயல்களைப் பாராட்டியது மட்டுமின்றி கண்ணனின் மேன்மைகளையும் திருப்பாவை விளக்குகிறது.

கண்ணன் குன்றெடுத்து ஆநிலை காத்ததை,
**'குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி'** என்றும்,

மதுராவில் பிறந்து கோகுலத்திற்கு வந்து வளர்ந்ததை **'ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர'** என்றும்,

கோபிகைகள் எல்லாம் கண்ணனைக் குறித்தே நோன்பு நோற்பதை **'சுற்றத்துத் தோழிமாரெல்லாம் வந்து நின்முற்றம் புகுந்து முகில் வண்ணன் பேர் பாட'** என்றும் விளக்குகிறார்.

## இயற்கை எழில் காட்டும் கிராமத்துப் பாவை

விடியற்காலத்தின் வருகையை உணர்த்த, கிராமத்தில் சப்தங்களை அடையாளமாகக் காட்டும் பாங்கு திருப்பாவைக்குத் தனிச்சிறப்பு ஊட்டுவதாகும்.

கிராமத்துவிடியல்

**'வந்தெங்கும் கோழி அழைத்தென காண்**
**மாதவி பந்தல் மேல் சல்கால் குயிலினங்கல் கூவின காண்'**

என்றும்,

**'கீச்கீசென்றெங்கும் ஆனை சாத்தம் கலந்து**
**பேசின பேச்சரவம் கேட்டிலையே'** என்றும்

இத்தகைய வரவேற்போடு விடிகிறது. வெளீரென விடிந்தது. பல பலவென விடிந்தது. கிழக்கு வெளுத்துவிட்டது என்று கிராமத்தினர் உரைப்பர்.

இதைத்தான் ஆண்டாள், **'கீழ்வானம் வெள்ளென்று'** என கிராமத்துப் பாணியாகப் பாடியுள்ளார். கீழ்திசையானது, அதிகாலையில் சூரியன் வெளுத்து வருகின்ற நேரம், கறவையினங்கள் மேய்ச்சலுக்குச் செல்வதை, **'எருமை செல்வேடு மேய்வான் பரந்தனகாண்'** என்கிறார் ஆண்டாள். கிராமத்து வயல்களில் மலர்ந்த மலருக்குள் வண்டுகள் தேனை உண்டு மயங்கிக் கிடப்பைத **'பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண்படுப்ப'** என்றும் கிராமத்துப் பண்ணை வீடுகளில், பெரிய மாடங்களையுடைய அறைகளிருப்பதும், அதைச்சுற்றி விளக்குகள் வைக்கப்பட்டிருப்பதும், மாடத்தில் கட்டிலின் மேல் மெத்தையிட்டுத் தூங்குவதை,

**'தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய தூபம்**
**கமழத் துயிலணைமேல் கண் வளரும்'**

என்றும் ஆண்டாள் கிராமத்து இயற்கையை வருணிக்கிறாள்.

கிராமத்து வீடுகளின் தோட்டத்தில் அதிகாலையில் மலரும் மலரின் மணம் காற்றில் உலாவி, கிராமத்து வீடுகளைச் சூழ்ந்து மணம் பரப்பும்.

**'உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்**
**செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாள்'**

என்றும் கிராமத்துத் தென்றலை ஆண்டாள் புகழ்ந்து பாடுகிறாள்.

விடியற்காலையில் கறவையினங்களிடம், பால் கறப்பதற்கு முன் தாய்ப்பசுக்களானது தன்னுடைய கன்றுகளை மனதில் எண்ணி, தாமாகவே பால் சொரிகின்றது. இதனை ஆண்டாள்,

**'கனைத்து இளம் கற்றெருமை கன்றுக்கு இறங்கி**
**நினைத்து முலைவழியே நின்று பால் சோர'**

என்றும் ஆயர்குலப் பெண்கள் காலையில் தயிர் கடையும் சத்தம் கேட்டு, அடுத்த வீட்டுப் பெண் தயிர் கடைவாள். இவ்வாறு ஒவ்வொரு வீட்டுத் தயிர் கடைகின்ற சத்தமும் அதிகாலைப் பொழுதை முழக்கமிட்டு வரவேற்பதைப் போலத் தோன்றும், இவற்றை,

**'. . . . . . ஆய்ச்சியர் மத்தினால் ஓசைப்படுத்த தயிரரவம்'**

என்று இயற்கை எழிலைத் திருப்பாவையில் ஓவியமாகத் தீட்டியுள்ளார்.

## பாவையில் பக்தியும் இறைவனின் அருளும்

நாராயணனை வணங்கும்போது வாயினால் இறைவனின் திருநாமத்தை சொல்லிக் கொண்டும், பாடியும் இருக்கும்போது, மனம் வேறுபடாது இருக்க

**'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க'**

என்றும் பக்தியோடு கூறுவதை காணமுடிகிறது.

பரம்பொருளானவன் எல்லா வகை நற்குணங்களிலும் சிறந்தவன். குணங்களின் தொகுப்பானவன். பசுமையும், நீர்மையும் உடையது பரத்துவம் என்பார் பெரியவாச்சான்பிள்ளை. பரம்பொருள் ஒன்று. அவன் தான் நாராயணன். அவனே தன்னை ஐந்து நிலைகளில் விரிவுபடுத்தி, இறைவனின் தன்மைகளை விளக்கி, பண்புகளையும் தமது பாடல்களில் எடுத்துரைக்கிறார்.

இறைப்பண்பு, என்பது தேவர்கட்கும், பக்தர்கட்கும் தன்னை அண்டினவர்கட்கும், துன்பம் ஏற்படும் நேரத்தில் முன் சென்று நின்று அருள் புரிந்து காத்து நிற்கும் மேன்மையே இறைப்பண்பாகும்.

**'முப்பத்து மூவர் அமரர்க்கும் முன் சென்று**
**கப்பம் தளிர்க்கும் கலியே'**

பல பிரிவுகளையுடைய தேவர் கூட்டத்தில் உண்டாகும் அச்சத்தைப் போக்கி அவர்களுக்குத் துன்பம் ஏற்படும் முன் அதைத் தவிர்த்து காத்து நிற்கும் ஆற்றல் சக்தியினை உடையவன் இறைவன்.

தேவர்களுக்கு மட்டுமில்லாது இவ்வுலக உயிர்களின் துன்பத்தைக் காத்து நிற்கும் ஒளி தீபமாய் நிற்கின்றான் எம் பரம்பொருள். உலகின்

ஆதிமுதல் தோற்றமாய் நின்ற சுடர்தீபமே என்று பரமனை வாழ்த்தியுள்ளார்.

பகவானே கதியென்று இருப்பவர்கட்கு பகவான் சென்று அருளும் தன்மையை திருப்பாவை இருபத்தி மூன்றாம் பாடலில்,

**'மாரி மழை முழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்**
**சீரிய சிங்கம் றிவுற்றுத் தீ விழித்து**
**வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி**
**மூறி நிமிர்ந்து முழுங்கிப் புறப்பட்டு . . . .'**

என அழகுபடுத்தி இறைவனின் பண்புகளை தெரிவிக்கின்ற தெய்வத்தமிழ் பாடல்களாக திருப்பாவை விளங்குகிறது.

## வைணவ தத்துவத்தின் கொள்கைகள்

பரம்பொருளை எண்ணி நோன்பிருந்தால் அருள்புரிவான் என்றும், மோட்சமே பக்தியின் எல்லையாகவும், மோட்சம் பெறுவது ஜீவாத்மாவின் லட்சியம் என்பதும் வைணவக் கொள்கையாகும். அதற்கு சிறந்த வழியாகவும், பலனாகவும் இருப்பவன் பரம்பொருள் ஸ்ரீமத் நாராயணன் தான் என்று வைணவக் கொள்கை உரைக்கிறது.

செய்யத்தக்கவைகள், செய்யத்தகாதவைகள் என்ன என்னவென்று ஜீவாத்மாவுக்கு வழிகாட்டி உபதேசம் செய்கிறது. பக்தியின் அடிப்படை எவ்வாறு வேண்டும் என்பதை, மனதும் சொல்லும் செயலும் ஒன்றுபட்டு ஒருங்கி நிற்க உணர்த்துகிறது. இதையே நம்மாழ்வாரும் உள்ளம், உரை, செயல் உள்ள இம்மூன்றும் ஒருங்கே சேர்தலே பக்தி என்பதை விளக்குகிறார்.

நோன்பு நோற்பவர்கள் எதைப் பெற வேண்டும் என்று கண்ணன் கேட்க,

**'என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு**
**உற்றாமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்**
**மற்றை நம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்'**

என்றும், எத்தனை பிறவிகள் எடுத்தாலும் உனக்கே பணி செய்யும் பாக்கியம் வேண்டும் எனவும் ஜீவாத்மா என்பதே பரமாத்மாவிற்கு தொண்டு செய்தலே கடமை எனக் கூறப்படுகிறது.

**'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'**

என்பதே வைணவக் கொள்கை. இதன்படியே வையத்து மக்கள் யாவரும் வாழ்வீர்காள் என்று உலகத்தில் வாழும் ஜீவாத்மாக்களை மோட்சம் புக முயலுங்கள் என்று ஆண்டாள் அறைகூவல் விடுக்கிறாள்.

ஒவ்வொரு ஜீவாத்மாவையும் திருப்பாவையில் எழுப்பி எழுப்பி மானிடப் பிறவாகிய காலம் நேர்பட்டதையும், காலத்தே நாம் செய்ய வேண்டிய நேரம் கிடைக்கின்றபோது செய்ய வேண்டுமென வற்புறுத்தப் படுகிறது. நாராயணனின் அவதாரங்களை விளக்கி, பரம்பொருளின் திருவடியை அடைவதற்காக, நோன்பை உணர்த்தி ஒவ்வொரு தோழியாக எழுப்பி ஜீவாத்மாவின் நிலைமையினையும் பரமாத்தமாவின் பண்பையும் எடுத்துக்கூறி முன்னோர்கள் காட்டிய வழியையும் உணர்த்துகிறார்.

இறைவனின் குணங்களாக சொல்லுகின்ற போது ராட்சஸ குணம், தாமசகுணம், சத்துவகுணம் என்னும் மூன்று வகைகளாக சொல்லப்படுகிறது. இந்த மூவகைக் குணங்களும் ஜீவாத்மாக்கள் பெற்ற பரிணாம வளர்ச்சியினால் கர்மவினைகள் அடிப்படையில் அமையப் பெற்றவையாகும். இத்தன்மையில் வைணவத்தின் சமயநீதியைக் காணமுடிகிறது.

## இறைவனின் (வேதத்தின்) மாண்பும் , தத்துவமும்

திருப்பாவை இறைவனது அரியத் தன்மைகளை எடுத்து இயம்புகிறது. இறைவனது அவதாரங்களை விவரித்து கூறுகிறது.

பரம்பொருள் ஸ்ரீமத் நாராயணனே கண்ணனாக அவதரித்தார். இவர் இராமனாக அவதாரம் பெற்ற சித்திரை மாதத்தை ரிஷிகள் கொண்டாடினார்கள். கிருஷ்ண அவதாரகாலத்தில் இந்த ரிஷிகள் கோபிகைப் பெண்களாக அவதரித்து உள்ளனர். மாதத்தில் நான் மார்கழியாய் இருக்கிறேன் என்று பகவான் கண்ணனால் அருளப்பட்ட மார்கழி மாதத்தையே கிருஷ்ணானுபவம் பண்ணுவதற்கு ஏற்ற மாதமாகக் கொண்டு நோன்பு நோற்கிறார்கள்.

## திருமால் நெறி

இறைவன் எங்கும் நிறைந்து என்றைக்கும் நிலைத்து நிற்கும் பொருளுக்கும் 'பரம்பொருள்' என்று பெயர். எல்லாவற்றையும் கடந்து யாவற்றிலும் கலந்து இருப்பதால் அப்பரம்பொருளைக் **'கடவுள்'** என்று வழங்குவர்.

திருப்பாவை வேதத்திற்கு வித்தாக விளங்குகிறது. இறைவனது அவதாரங்களில் ஆயர்பாடியிலே, நந்தகோபனின் இல்லத்தில் அவனது திருக்குமரனாக அவதரித்துள்ளான். இவன் ஆயனுமல்லன், சிறுவனுமல்லன். அவன்தான் ஸ்ரீமந் நாராயணன். அவன்தான் பரம் பொருள். இவனை சிறு குழந்தையென்று நந்தகோபன் பிரிவு என்னும் குணத்தால் கண்ணனுக்கு துன்பம் நேராது காவல் காத்து நிற்கிறான்.

## திருப்பாவை காட்டும் இறைவனின் தோற்றம்

மழை கொட்டும் மேகத்தின் நிற மொத்த மேனியினையும், செந்நிறமாக அழகிய திருக்கண்கள் இரண்டினில் ஒன்று சந்திரனைப் போன்ற குளிர்ச்சியையும், மற்றொன்றில் சூரியனைப் போன்ற பிரகாசத்தையும், கொண்டு அவதரித்த இளஞ்சிங்கமாகிய கண்ணனின் பேரழகைப் பார்த்து கண்கள் அழகை உமிழ்ந்து ஜொலித்தது.

**'கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்**
**ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்**
**கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்**
**முகத்தான் நாராயணனே'**

என்று பரம்பொருள் நாராயணனே! நந்தகோபன் குமரனாக வந்துள்ளான் என்ற தத்துவ ரகசியத்தை நிரூபணம் செய்கிறாள் ஆண்டாள்.

நாராயணனே பரம்பொருள் அவனே சகல தெய்வத்தையும் படைத்தவன். சகல தெய்வங்களையும் படைக்கும் சக்தி பெற்ற அவனையே தெய்வமாக உபாசிக்கும் நமக்கே அவன் அருள்புரிவான்.

வைணவ சம்பிரதாயம் உலகுள்ளோர் அனைவரும் அறிந்து உய்ய வேண்டியது யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதன்றோ வைணவ தத்துவம்.

## அவதார சிறப்பு

பாற்கடலிலிருந்து திருமாலின் அவதாரங்கள் தோன்றுகின்றன. அவதார ரூபங்களாக இறைவன் இறங்கி வருவதை விபவம் என்பர். ஆண்டாள் ஸ்ரீமன் நாராயணனை உத்தமன் ஆக போற்றுகிறாள். மேலான தெய்வ நிலையிலிருந்து இறங்கி மனித வடிவங்கொண்டு இராமனாகவும், கிருஷ்ணனாகவும் அவதரித்து தர்மத்தை நிலை நாட்டினமையால் உத்தமனாகவும், வராக ரூபம் வடிவமைத்து இப்புவியைக் காத்தலால் உத்தமன் என்றும், திரிவிக்கிரமனாக நிமிர்ந்து உலகளந்து, விண்ணளந்து நின்று தன் மேன்மையைக் காட்டி நின்றதால் அவன் உத்தமன் என்று சிறப்பாக ஆண்டாள் உயர்த்திப் பாடுகிறாள்.

**'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி**
**நாங்கள் நம்பாவைக்குச் சாற்றுநீர் ஆடினால்**
. . . . . . . .
**தீங்கின்றி மாதம் மும்மாரி பெய்யும்'**

நாட்டில் செல்வச் செழிப்புக்கு மழை தேவை என்பதால் பரத்துவனாய, நாராயணனைக் குறித்து நோன்பு நோற்றால் நாட்டின் நலமும் வளமும் உயரும்.

பரம், வியூகம், விபவம் என்று பெருமானின் மூன்று நிலைகள் கூறிய ஆண்டாள் நான்காவது பாடலில் பகவானது அந்தர்யாமித்துவம் (அந்தர்யாமி - உள்ளுக்குள் உறையும் தன்மை) பற்றிப் பேசப்படுகிறாள்.

இவ்வுலகில் நிர்ணயிக்கப்பட்ட காலம் முடிந்து ஊழிக்காலத்தில் கர்ம வினையின் ஈடுபட்ட ஜீவாத்மாக்கள் போக்கிடமின்றி பெருமானது திருமார்பிலே சென்று மொய்த்து பெரிய பாரத்தை வைத்தது போன்ற சுமையை உண்டாக்கியது.

இதனால் அண்டவெளியில் எந்த இடத்தில் அமைப்பது என்று ஆழ்ந்த சிந்தனை விசாரத்திலே மூழ்கி நின்றார். அதன் காரணமாக முகத்தில் கருமை படர்ந்து கருத்து விடுகிறது. இந்த வடிவைத்தான் ஊழி முதல்வனுருவம் என்று ஆண்டாள் வர்ணிக்கிறார்.

பகவான் நாராயணனின் முதல் நான்கு நிலைகளைக் கூறிச் சிறப்புற்ற ஆண்டாள், நோன்பினால் முடியாத பழவினைகளின் கர்மத்தைப் போக்க நாராயணனின் கடைக்கண் பார்வைபட்டால் பாவங்கள் நீங்குவதாக உணர்த்துகிறாள்.

நாராயணனே கொடிய வல்வினைகள் தீர்ப்பவன். முன் பிறவிகளின் பாவங்கள் எல்லாம் ஒன்றாக மன்னி, ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து பதிந்து கிடக்கும் பாவங்கள் தீர்ப்பவன் நாராயணன் ஒருவனே.

**'மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்**
**தூயப் பெருநீர் யமுனைத் துறைவனை**
. . . . . . . . .
**வாயினால் பாடி மனதினால் சிந்திக்கப்**
**போய பிழையும் புகுதருவான் நின்றனவும்**
**தீயினால் தூசாகும்'**

இதன்படி இறைவனைத் தொழுவதால் இறையுணர்வு கிட்டும். அது நமக்கு வரும் துன்பங்களுக்குத் துன்பம் தரும் என்பதின் கருத்தாகும்.

அதுவும் **'உள்ளம், உரை, செயல், உள்ள இம்மூன்றையும் உள்ளிக் கொடுத்து அவன் உர்றி ஒருங்கே'** என்பார் நம்மாழ்வார்.

இவ்விதம் மனது, சொல், செயல் மூன்றும் ஒரு மிக்க ஒன்றில் ஆழ்வதே பக்தி எனப்படும். இந்த பக்தியுடன் வழிபட்டால்

**'போய பிழையும் புகுதருவான் . . . . . '**

என்ற வழிபாட்டு தத்துவத்தை ஆண்டாள் சிறப்புடன் வர்ணிக்கிறாள்.

## அவதார ரகசியம்

பரம்பொருளின் தத்துவமாக முதல் ஐந்து பாடல்களும், திருமாலின் நிலைகள் நோன்பின் காரணம், நோன்பிற்கான நெறிமுறைகளும் அவதார ரகசியமும் விளக்கப்படுகிறது.

**'பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு**
**கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி**
**வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை**
**உள்ளத்து கொண்டு முனிவர்களும் யோகிகளும்**
**மெள்ள வெழுந்து அரியென்ற பேரரவம்**
**உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்'**

என்ற பாடல் வழி, அரிதான மானிடப் பிறப்புத்தான் இறைவனை வணங்குவதற்கு சரியான தருணம். இப்போது அயர்ந்துவிடாமல் உலக வாழ்க்கையிலே சிக்கி அதனின்றும் மீள முடியாமல் உறங்கிக் கொண்டிருக்கும் ஆத்மாக்களை பக்குவம் அடையச் செய்து வழிகாட்டும் தன்மையில் பேசப்படுகிறது.

பரம்பொருளே கண்ணனாக அவதரித்துள்ளான். இப்பாடல் முதல் திருப்பாவையின் பதினைந்தாம் பாடல் முடிய உள்ளப் பாடல்களில் நோன்பிற்கு வருவதாக சொல்லிவிட்டு, உறங்குபவர்களை அதற்கான காலம் வந்தது என அறிவித்து எழுப்புவது போல் அமைந்துள்ளது.

## நோன்பு நோற்கும் பெண்களின் நிலை

நோன்பு நோற்கும் பெண்களின் மேன்மைபற்றிக் கூறுவதாக அமைந்த பாடல்

**'நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணமூர்த்தி**
**கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ**
**தேசமுடையாய் திறவேலோரெம்பாவாய்'**

நாயகப் பெண்பிள்ளாய், நாங்கள் நாராயணனை, கேசி என்ற அரக்கியைக் கொன்ற கேசவனை பாடிக்கொண்டு வரும் பேரொலியானது மகிழ்ச்சியுண்டாக்கும். இந்த ஒலியைச் செவியில் வாங்கிக் கொண்டே தனிமையில் கிருஷ்ணானுபவம் பண்ணிக்கொண்டு மார்பிலே கை வைத்து அந்த எண்ணங்களில் உனது முகமே பிரகாசம் அடைகிறது.

நோன்பின் பொருட்டு நீராடக் கூட்டமாகப் போகிறார்கள். ஆனால் நாங்களோ போகச் செல்பவர்களை தடுத்து, உன்னையும் அழைத்துச் செல்ல வேண்டுமென்று உனது வாசலில் நிற்கிறோம். உன்னைக் கண்டாலே கண்ணன் மகிழ்ச்சி அடைவான். பெண்ணே! எழுந்திரு என்று ஆண்டாளின் உளநிலை அறிந்து தோழியர் அழைக்கின்றனர்.

ஆண்டாள் கண்களை மூடித் துயில்கிறாள். கண்களை மூடிய நிலையில் தெரியும் இமைகள் மணிக்கதவமாம். எனவே துயில்நீத்து (இமைகளை நீக்கி) கண்களைத் திறக்குமாறு சொல்வதற்கே மணிக்கதவம் தாள் திறவாய் என்றனர்.

**'மாமீர் அவளை எழுப்பீரோ'** என்றனர். தாய் எழுப்பியும் சேய் எழவில்லை என்பதால், இரவெல்லாம் கிருஷ்ணனோடே ஆடிப்பாடி சோர்ந்து போய் எழவும் முடியாமல், பேசவும் முடியாமல் சாய்வான தன்மையில் இருப்பவர்களைப் போலவே அந்த அனந்தலிலே மையம் கொண்டுள்ளாள்.

> **'உம் மகன் தான் ஊமையோ அன்றி செவிடோ? அனந்தலோ?**
> **ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ?'**

எனச் சொல்லி ஆயிரம் பெயர்களுக்கு உரியதான ஆதி நாராயணனிடம் நோன்பு வேண்டி நாமங்கள்கூறி எண்ணங்களைக் கொட்டி குவிக்கிறாள்.

## பாவையரின் சமூக நிலைப்பாடுகளில் ஆண்டாள்

சமுதாய மரபில் ஒரு பெண் பெண்ணாக பிறந்த காரணத்தினால் அடக்கி ஆளப்பட்டிருக்கிறாள். அடக்குவதின் வழி பெண்ணின் ஆற்றல் சிதைக்கப்பட்டிருக்கிறது. சமூகத்தில் பல காரணங்களால் ஒதுக்கப் பட்டிருக்கிறார்கள். இத்தகைய பிரச்சனைகளையெல்லாம் வெளிப்படுத்தித் தடைகளைமீறி தன் மன உணர்வுகளை பக்தியின் வடிவில் வெளிக் கொணர்ந்தவள் ஆண்டாள்.

ஒரு பெண் ஒரு குடும்பத்தைச் சார்ந்து நிற்கும்போது, ஒரு குடும்பம் நல்லதொரு குடும்பமாகத் திகழ அப்பெண் புகுந்த இடத்து உறவுகளை அரவணைத்துச் செல்ல வேண்டும் என்ற மரபு இன்றும் சமுதாயத்தில் உள்ளது.

கண்ணனைப் புகழ்ந்து போற்றிய ஆண்டாளும் கண்ணனின் தாய், தந்தை தேவி முதலிய அனைத்து உறவுகளையும் எழுப்பி அருள்புரிய வேண்டுகிறாள்.

திருக்கோவிலுக்கு வந்தவுடன் வாயில் காப்பானிடம் கண்ணனை தரிசிக்கப்போய் **'நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்'** என்றுக் கதவைத் திறந்து விடுமாறு வேண்டுகிறாள்.

இவை போன்றவை பெண்ணின் தன்னை பாதுகாத்து கொள்ள காப்புநிலையும் எதையும் கேட்டுப்பெற வேண்டிய நிலையில் பெண்கள் இருந்த அன்றைய சமுதாய மரபையும் காட்டுகின்றன.

## பக்தியின் வெளிப்பாடு

நாயகன் - நாயகி பாவத்திலும் தனது பக்தி உணர்வை ஆண்டாள் வெளிப்படுத்துகிறாா். நாயகன் - நாயகி பாவம் மூலம் வெளிப்படும் பக்தி உயா்ந்தது. தீவிர உணா்ச்சி கொண்டது. ஆழ்ந்த இணை பிரியாத உறவு நிலை கொண்டது என்பா்.

கடவுள் மீது இடையறாது பக்தி கொண்டு அவனையே அடைய வேண்டும் என்று காதல் வழிப்பட்ட நெறியாளா்கள், தான் கொண்ட விரகதாபத்தை, பிரிவுத் துயரத்தை நாயகன் - நாயகி பாவம் மூலம் வெளிப்படுத்துகிறாள்.

(தொல்காப்பியம் மானிடப் பெண்டிா் கடவுளை விரும்பிய திறனை அகத்துறையாக குறிப்பிடுகிறது). எனினும் மானிடப் பெண்டிா், இறைவன்மீது கொண்ட வேட்கையும், தன் உணா்வு வேட்கை வெளிப்பாடும் ஆன்மீக நாட்டத்தின் வழி இறைமீது கொண்ட பக்தி காதலாக இங்கு மாற்றம் பெற்றுள்ளது.

ஆண்டாள் தன்னை ஆயா்குல மங்கையாகப் பாவித்து கண்ணன் மீதுள்ள தன் உள்ளத்து வேட்கையை ஆசையைப் பக்தி கலந்த நிலையில் வெளிப்படுத்துகிறாள்.

ஆன்மீக வாழ்க்கையிலும் பெண்ணே கற்பனை நிலையிலாவது ஆணைத் தேடிச் சென்று அடைவதாக சித்தரிக்கப்பட்டுள்ளது.

எனினும் கணவனாக நாயகன் நினைப்பில் ஆன்மீக உணா்வினில் தன் உணா்வை கரைத்து ஒன்றாகி வாழ்பவள் தான் பெண் என்ற ஒரு சமூக நிலைப்பாட்டை ஆண்டாள் வரலாறு உணா்த்துகிறது.

## இறைவனை வேண்டல்

விடியற்காலையில் வந்து உன்னைப் பணிவது இப்பிறவிக்கு மட்டுமல்லாது

**'என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு**
**உற்றோமே ஆவோம் உமக்கே நாம் ஆட்செய்வோம்'**

எங்களுடைய மற்ற ஆசைகளை விலக்கிவிட்டு உன் அருளை மட்டுமேப் பெறவே விரும்புகின்றோம். என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்னோடு ஒன்று சோ்ந்து உனக்கு மட்டுமே அடிமையாக அமைந்து பணி செய்ய விரும்புகின்றோம் என்கிறாா். ஆண்டாள் பக்தியின் வெளிப்பாடு ஆண்டாளின் உள்ளத்தில் வருவதை திருப்பாவை கொண்டு அறிய முடிகிறது.

## முடிவுகள்

திருப்பாவை என்பது வேதத்திற்கு வித்தாக விளங்குகிறது. இறைவனது தன்மையை விளக்குகிறது. இறைவனின்

அவதாரங்களையும், விரிவுகளையும் விளக்குகிறது. இறைவனை வழிபடும் முறைகளை காட்டுகிறது.

திருமாலின் வைணவத் தலங்கள் பலவும் தம்முள் சேர்ந்து செயல்படுமாறு அமைந்ததின் காரணமே ஆண்டாள் பாசுரம் என்பது குறிப்பிடத்தக்கது.

பகவானைப் பற்றி தெரிந்து கொள்ளவும், மனிதனின் ஆணவங்களை தவிர்க்கவும் ஆண்டாள் பாசுரம் வழிகாட்டுகிறது. பகவானுக்கும் தமக்கும் உள்ள உறவு நிலை பிரிக்க முடியாதது என்பதை உணரமுடிகிறது. குற்றங்களுக்கு மன்னிப்பு பெற்று இறைவனிடமே உபாயம் பெறுதல் என்பதை ஆண்டாள் திருப்பாவை வழிகாட்டியாக அமைகிறது.

பாவைப் பாடல்களில் பாவையார் ஆன்மீக மரபை வரையறை வட்டத்திற்குள் வைத்து கட்டுப்பட்டிருந்தார்கள். வரையறைகளைத் தாண்டுவதைவிட வேண்டிப்பெறுவது பெண்களின் இயல்பாக அமைந்துள்ளது. பெண்ணுக்கு தளரா முயற்சியும், சாதிக்கும் திண்ணிய நெஞ்சமும் வேண்டும் என்பதை பெண்களுக்கு ஆண்டாள் பாசுரம் உணர்த்துகிறது.

திருப்பாவையின் சிறப்புகளில் முக்கியமாக பங்குபெறுவது இறைவனின் அடியவர்களில் ஆண்டாள் போற்றப்படும் இறை பக்தி தனிச்சிறப்பு வாய்ந்தது. தன்னை ஒப்பாக மட்டுமல்லாது, இறைவனையே உறவாகக் கொண்டு மணமகனாகக் கொண்டு மணப்பதாகக் கூறப்படுவது ஆண்டாளின் ஒப்பற்றச் சிறப்பாகும்.

## துணைநூற் பட்டியல்


1. வை.மு. நரசிம்மன், ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை தி.உவே.வை.மு.கோபால கிருஷ்ணமாச்சாரி, 117, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, வை.மு. கோபாலகிருஷ்ண மாசாரியார் கம்பெனி.
2. டாக்டர். நா. சுந்தரப்பாப்பா, ஆண்டாள் பாடல்களும் வழிபாடும், முதற்பதிப்பு, வெளியீடு - 1990.
3. த.கோ. பரமசிவம், ப. நல்லநாயகி, தமிழ் உணர்த்தும் பக்தி ஆய்வுமாலை, தொகுதி ஒன்று, சுவாமி தயானந்த சரஸ்வதி ஆசிரமம், ரிஷிகேசம் - 2005, முதற்பதிப்பு-2005, மே மாதம்.
4. தி.முருக ரத்தினம், இரா. காஞ்சனா, தமிழிலக்கியத்தில் பெண்ணியமும், தலித்தியமும் ஞாலத் தமிழ்பண்பாட்டு ஆய்வு மன்றம் மதுரை, முதற்பதிப்பு - ஜூன் 2000.
5. கோதையின் பக்திப் பாதை.



# திருப்பாவையில் அவதாரங்கள்

**நீளா துங்கஸ்தனகிரி தடி சுக்த முக்தோக்தியா கிருஷ்ணம்**
**பாரார்த்யம் ஸ்வம் ஸ்ருதி ஷதா சிரா சித்தா முத்யாபந்தி**
**சோஸிஷ்டாயாம் ஸரஜி நிகளிதம் யா பலாக்ருத்யா புங்க்தே**
**கோதா தஸ்யைநம இதம் இதம் பூய யாவாஸ்து பூயஹா :**

ஸ்ரீ ஆண்டாள் எழுதின திருப்பாவையினை "வேதமனைத்துக்கும் வித்தாகும்" என பூர்வாச்சார்யலு வர்ணித்துள்ளார்கள் வேதங்கள் அனைத்திலும் உள்ள சாராம்சம் எல்லாம் சுருக்கமாக கொண்ட ஒரு முக்கியமான நூலாகும்.

திருப்பாவையில் ஸ்ரீ ஆண்டாள், தன்னைக் கோபிகையாக்கொண்டு ஸ்ரீமன் நாராயணனை வாயார அவருடைய அனைத்து கல்யாண குணங்களையும் பாடியிருக்கிறார்.

பாரத, பாகவத, ஸ்ரீராமாயண புராண கிரந்தங்களில் உள்ள ஸ்ரீ பகவானின் திருவிளையாடல்களைப் பக்தியுடன் நினைந்து பாடியுள்ளார்.

வாமன, ஸ்ரீராம, ஸ்ரீகிருஷ்ணா இந்த அவதாரங்களுக்குச் சம்பந்தப்பட்ட ஐதீயங்களை ஆண்டாள் திருப்பாவையில் எப்படி விவரித்தார்களோ அப்படியே இந்தக் கட்டுரையில் விவரிக்கப்பட்டுள்ளது.

## வாமன அவதாரம் :

திருப்பாவையில் ஆண்டாள்

**"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி" எனவும்**
**"அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த" எனவும்**
**"அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி" எனவும்**
**வாமன அவதாரம் பற்றி மூன்று இடங்களில் கூறியுள்ளார்.**

பக்தர்களைக் காப்பாற்ற வாமன மூர்த்தியாக பலி சர்க்கரவர்த்தி யிடம் சென்று மூன்று அடி நிலம் மட்டும் கேட்டு யாசகம் செய்து இரண்டடி மட்டும் வைத்து பூமி, ஆகாசம் இரண்டு மட்டும் பெற்றுள்ள அந்த நெடியோன் திருவிக்ரம அவதார வைபவம் பற்றி ஆண்டாள் பக்தியுடன் நினைந்துள்ளார்.

பலிசக்ரவர்த்தியின் செயலினால் தேவலோகம் அழியும் நிலையில் உள்ள ஆபத்துக் கருதி இந்திராதி தேவர்கள் எல்லாம் தங்களைக்

காப்பாற்ற வேண்டும் என பிரார்த்தித்தும் அந்த கடவுள், அய்யோ, என்னை அணுகியவர்களுக்கு இவ்வளவு ஆபத்து ஏற்பட்டுள்ளதா" என வருத்தமுற்று ஸ்ரீவாமன அவதாரம் எடுத்தார்.

சாதாரணமாக உலகத்தில் குட்டையான உருவத்தினை எல்லாரும் பரிகாசம் செய்வார்கள். ஆனாலும் ஸ்ரீபகவான் தனது பக்தர்களுக்காக அப்படி பரிகாசத்திற்குரிய குள்ள உருவத்தை எடுத்ததும் அல்லாமல், யாசகம் கேட்டும் லீலை புரிந்துள்ளார்.

**'சதைகரூப ரூபாயா :'** என்னும்படியாக எல்லா ஸ்ருதிகளும் சொல்லக் கூடிய விகார தோற்றமும், அசாதாரண சரீரமும் எடுத்தார்.

பலிச்சக்ரவர்த்தி, தான் மூன்று அடிநிலம் தருகிறேன் எனத் தெரிவித்ததும், தனது கோரிக்கை நிறைவேறியது என்ற மகிழ்ச்சியில் பெரிய தோற்றமான திரிவிக்ர அவதாரம் அடைந்துவிட்டார்.

பக்தர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்து தனது உடம்பினை சுருக்கி அந்த வாமனரூபம் எனப்படும் சரீர தோற்றத்தை எடுத்த அந்த ஸ்ரீபகவானின் திருநாமங்களை வாயாரப் பாட வேண்டும் என ஆண்டாள் கூறுகிறார்.

ஆண்டாள் இந்த பாசுரத்தில் அந்த பகவானுடைய நாமங்களைப் பாடுவதன் மூலம் பாவங்கள் அனைத்தும் போகும் என்றும், தேச முழுவதும் எந்தவிதமான தீமையும் இல்லாமல் மாதம் மும்மாரிப் பெய்யும், நாட்டில் எந்தவித வியாதிகளும் தோன்றாமல் இருக்கும் எனவும், செல்வ செழிப்பு குறையாமல் நிலைத்து இருக்கும் என்றும் ஆண்டாள் இந்தச் சந்தர்ப்பத்தில் திருநாமங்களின் சிறப்புப் பற்றி வர்ணித்துள்ளார்.

**"அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த**
**உம்பர் கோமனே உறங்காது எழுந்திராய்"**

என்று திருப்பாவை 17-ம் பாசுரத்தில் ஆண்டாள் ஸ்ரீவாமனாவதாரம் பற்றிக் கூறுகிறார்.

வானவெளியை ஊடறுத்து, ஓங்கி வளர்ந்து உலகத்தைத் திருவடியால் அளந்த தேவதேவனே, துயில் கொள்ளாமல் எழுந்திரு என வாமன அவதாரம் எடுத்த அந்த சின்ன கிருஷ்ணனை ஆண்டாள் எழுப்புகிறாள்.

பாம்புப் படுக்கையிலிருந்து எழுந்திருந்து சிம்மத்தைப் போன்று நான்கு கைகளுடன் நடந்து மிக அழகான சிம்மாசனத்தில் வீற்றிருந்த அந்த கிருஷ்ணனின் திவ்யமான ரூபத்தைத் தரிசித்து மெய்சிலிர்த்து ஆண்டாள் தன்னைக் காப்பாற்றிய கிருஷ்ணனின் திருப்பாதங்களுக்கு அவரின் பல பராக்கிரமங்களுக்கு மங்கள சாசனம் செய்துள்ளார்கள்.

"அதிச்ஸ்னேககா, பாப சங்ககா" எங்கு பாசம் அபிமானம் உள்ளதோ, அங்கு பயமும் உள்ளதன்றோ!

அந்த கிருஷ்ணனிடம் அபிமானமான பாசத்துடன் இருந்த ஆண்டாள் இந்த விதத்தில் மங்களாசாசனம் செய்ததில் எந்தவிதமான ஆச்சரியமும் இல்லை.

பகவானிடம் உள்ள பக்தி அந்த பக்தர்களுக்கே பாசமாக மாறுகிறது. பகவானை தனது குழந்தையாகப் பாவித்து அந்தக் குழந்தை நலமாக இருக்க வேண்டும் என மங்களா சாசனம் செய்யும்படியாக இருந்தது. இது வைஷ்ணவத்தின் ஒரு நிலைப்பாடாகும்.

பாண்டியராஜா, ஆஸ்தானத்தில் (சபையில்) எதிர் மதத்தினர் அனைவரும் ஓடக்கூடிய அளவில் ஸ்ரீமகாவிஷ்ணு ஒருவர்தானே சிறந்த கடவுள் என்று நிரூபித்தார் ஸ்ரீபெரியாழ்வார். அவ்வாறு வெற்றி கண்ட பெரியாழ்வார் யானைமீது ஏறி வந்தபொழுது அவருக்கு அந்த ஸ்ரீமகா விஷ்ணு நேரில் தோன்றி காட்சியளித்தார். அந்த பகவானின் திவ்யமான தோற்றத்தைத் தரிசித்து பெரியாழ்வார் மெய்மறந்து இப்படியான மங்களாசாசனம் செய்துள்ளார்.

**பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு**
**பலகோடி நூறாயிரம்**
**மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா**
**உன் சேவடி செல்வித் திருக்காப்பு.**

திருப்பாவை 24-வது பாசுரத்தில்

"அன்று உலகம் அளந்தாய் அடிபோற்றி" என்று ஆண்டாள் அந்த வாமன அவதாரத்தில் உள்ள பகவானுக்கு மங்களா சாசனம் செய்துள்ளது அறியப்படுகிறது.

ஸ்ரீதேவி தொட்டபொழுது சிகப்பாக மாறிய மிருதுவான உனது அழகிய திருப்பாதங்கள் ஏறி இறங்கி அளந்தபொழுது உனக்கு அந்த சமயத்தில் மங்களாசாசனம் சொல்ல முடியவில்லை.

இப்பொழுது நாங்கள் அந்த திருப்பாதங்களுக்கு மங்களாசாசனம் செய்வதற்காக வந்தோம் மூன்று உலகங்களையும் அளந்தபொழுது இரண்டடி மட்டுமே வைத்தாய் இன்று எங்களுக்காக பத்து அடிகள் நடந்து வந்தாயா, சுவாமி! என்று ஆண்டாள் சுவாமியின் சிறந்த குணங்களை நினைந்து பரவசமடைந்து உள்ளார்கள்.

பெரியாழ்வாரின் மகளான ஆண்டாள் தன்னுடைய தந்தை மாதிரி தானும் கூட சுவாமிக்கு மங்களாசாசனம் செய்ததில் ஆச்சரியம் என்ன உள்ளது.

## ஸ்ரீ ராமாவதாரம்

திருப்பாவையில் ஆண்டாள் 12-வது பாசுரத்தில்

**"சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக் கிடையானைப்"** எனவும்

13-வது பாசுரத்தில்,

**பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமைப் பாடிப்,** எனவும்

24-வது பாசுரத்தில்

**சென்றங்குத் தென்னிலங்கை சென்றாய் திறல் போற்றி** - எனவும்

மூன்று இடங்களில் ஸ்ரீ ராமாவதாரம் பற்றி தெரிவித்துள்ளார்.

**"சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக் கினியானை -** " என்றால்

தென்னிலங்கை வேந்தனாகிய இராவணனைக் கோபத்தினால் அழித்த நெஞ்சிற்கு இனியவனான இராமபிரான் எனப்படும்.

கருணையுள்ளங் கொண்ட பூமாதேவியைப் போன்று பொறுமையுடைய ஸ்ரீராமன் கோபமடைந்தான் என இவ்விடத்தில் ஆண்டாள் கூறுகிறார். இதற்கான காரணத்தை **ஸ்ரீ பூர்வாசார்யலு** இப்படிக் கூறுகிறார். தன்னிடம் தவறு செய்பவர்களிடம் கோபமடையாத, தன்னுடைய பக்தர்கள் விஷயத்தில் தவறு செய்பவர்கள் யாரேனும், அவர்கள்மீது கோபம் கொள்வது! என்பது ராமாயணத்தில் இதற்கான உதாரணங்கள் உள்ளன.

போராட்டக்களத்தில் தன்மீது அம்புபட்ட நிலையில் ஏதும் செய்யாத ஸ்ரீராமன், தனது பக்தனான ஸ்ரீஅனுமானுக்கு அம்புபட்டவுடன்

**"ததோ ராமோ மஹா தேஜாஹ் ராவணேன க்ருதவனம் திருஷ்டியா பிளபஹ சார்தூலம் கோபஸ்ய வசமேய்வான்"**

இராவணன் மூலம் அம்புக்காயம் அடைந்த பக்தன் ஆஞ்சநேயனைக் கண்டதும் ஸ்ரீராமன் கோபமடைந்தார் என ராமாயணத்தின் மூலம் அறியப்படுகிறது.

பக்தர்களுக்குத் துன்பம் விளைவித்தால் ஸ்ரீராமன் உடனே கோபமடைவார்.

தண்டகாரண்யம் என்ற வனத்தில் இருந்த முனிவர்கள், சீதாதேவி, ஜடாயு, விபீஷணன், ஆஞ்சநேயர் ஆகியோருக்கு இராவணன் துன்பமிழைத்தார்.

இராவணனுடைய சகோதரரான விபீஷணனே இராவணன் பற்றி "ராவணோ நாம துர்விரதோ ராக்ஷஷக" என்று சொன்னார் என்றால் ராவணன் எப்படிப்பட்டவர் என அறிந்து கொள்ளலாம்.

மாய வேஷத்தில் வந்து ஸ்ரீ சீதா தேவியினை அபகரித்து தூக்கிச் சென்ற நிகழ்வுதானே அவனது செயல்களில் மிகக் கொடூரமானது.

அதனால் ஸ்ரீ ஆண்டாள் தனது பாசுரத்தில் "பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை" என இராவண வீழ்ச்சியினை மிகச் சிறந்தமுறையில் சுருக்கமாக வர்ணித்துள்ளார்.

அந்த ராட்சசனுடைய தலையை, தளிரினைக் கிள்ளி எரிவது போல, கிள்ளி ஸ்ரீராமர் எறிந்தார் என ஆண்டாள் அற்புதமாகத் தெரிவிக்கிறார்.

அப்படிப்பட்ட ஸ்ரீராமனின் (புகழைப்பாடி)

"கீர்த்திமைப்பாடி" என்றால் அந்த ஸ்ரீராமனின் பராக்கிரமங்களை நமது வாயால் பாடிப் போற்ற வேண்டும் எனக் கூறுகிறார்.

## திருப்பாவை 24-வது பாசுரத்தில் :

**சென்றங்கு தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி!**

என ஸ்ரீராமாவதாரம் எடுத்த அந்த ஸ்ரீராம தேவருக்கு மங்களா சாசனம் செய்கிறார்.

வாமனாவதாரத்தில், இருந்த இடத்திலிருந்து மூன்று உலகங்களையும் இரண்டடியில் அளந்தாய், இங்கு கொடிய மிருகங்களும், கொடூரமான ராட்சதர்களும் நிறைந்த காட்டில் எப்படி நடந்து வந்தாயோ, இராமா! என்று ஆண்டாள் வருத்தமடைந்தார். புலிகள் வசிக்கும் குகைக்குள் சென்று அந்தப் புலிகளைத் தட்டியெழுப்புவது போன்று கொடூரமான ராட்சதர்கள் நிறைந்த இலங்கை மாநகருக்குள் சென்று அவர்களைப் போரிட்டு, சம்ஹாரம் செய்து அந்த நகரை அழித்து விட்டாய். அதனால் அந்த ஸ்ரீராமாவதாரத்தை வாயாரப் பாட வேண்டும் என்று ஆண்டாள் தெரிவிக்கிறார்.

திருப்பாவையில் ஆண்டாள் ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தைப் பற்றி 6 பாசுரங்களில் வர்ணனை செய்துள்ளார்கள்:

"பேய் முலை நஞ்சுண்டு" என்று பூதனை சம்ஹாரம் பற்றியும்

"மாவாய் பிளந்தானை" என்று கேசி ராட்சச சம்ஹாரம் பற்றியும்

"புள்ளின் வாய் கீண்டானை" என்று பாகாசுர சம்ஹாரம் பற்றியும்

| | |
|---|---|
| "வல்லானைக் கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனை" என்று | குவலயாபீடம் என்னும் வலிய யானையின் சம்ஹாரம் பற்றி |
| "மல்லரை மாட்டிய தேவாதி தேவனை" என்று | கம்சன் அனுப்பிய மல்லர்களை சம்ஹாரம் பற்றியும் |
| "கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி | வத்சாசுரன் சம்ஹாரம் பற்றியும் |
| "கொன்றச் சகட உதைத்தாய்! புகழ் போற்றி என்று | சகடாச்சுர சம்ஹாரம் பற்றியும் |
| கள்ளச் சாடம் கலக்கிளியாய் கலோச்சி | ,, |
| "குன்று குடையாய் எடுத்தாய்! குணம் போற்றி! | கோவர்த்தன மலையை குடையாகப் பிடித்த நிகழ்வு பற்றியும் |

விபரமாக விவரித்துள்ளார்.

சின்னக் குழந்தையான கிருஷ்ணனை கொல்வதற்கு கம்சன் ராட்சதர்களை ஏவினான். அவர்கள் மாயா உருவம் கொண்டு ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்வதற்கு கோகுலம் வந்தார்கள். சாதாரண மனிதர்களாக வந்தால் எதிரிகளாகக் கருதி கொன்று விடுவார்கள் என எண்ணி மாயா ரூபம் கொண்டு அனைவரும் வந்தார்கள்.

அழகான பெண்ணாக வந்த பூதகியை சிறிய கிருஷ்ணனுக்கு பால் கொடுப்பதாக நடித்து விஷமிட்டு கொலை பண்ணுவதற்கு முயற்சி செய்தான். அந்த மாயா ராட்சசியின் அந்த கெட்ட செய்கையை அறிந்து கிருஷ்ணன் அவளை கொன்றார்.

அவ்வாறே அசுர வேடத்தில் வந்த சக்கரத்தை சிரமமின்றி தன்னுடைய காலால் உதைத்து நொறுக்கி விட்டார்.

திருப்பாவை 7-வது பாசுரத்தில் ஆண்டாள் ஸ்ரீகிருஷ்ணனை கேசவனாக பாவித்தார்கள்.

தன்னைப் பிடிக்க வந்த கேசியன் என்னும் ராட்சசனைக் கொன்று தனக்கு உபகரணமாக்கினார். அவன் பரந்தாமன் எனப்பட்டார்.

**"எஸ்மாத் துவையையவா துஷ்டாத்மா! கதஹா கேசி ஜனார்த்தனா**
**தஸ்மாத் கேசவ நாமத்துவம் லோகே க்யாதி தமிஷ்யஹா!"**

ஓ, ஜனார்த்தனா! அந்த கெட்டவனான கேசி உங்களால் தானே கொல்லப்பட்டார். அதனால்தானே நீங்கள் கேசவன் எனப் புகழ் பெற்றீர்கள் என்று புராண புருஷர்களால் சொல்லப்பட்டது. அந்த விஷயங்களை ஆண்டாள் நினைவுகூர்ந்து இங்கு கேசவா என்று அந்த கிருஷ்ணனை அழைத்தார்.

அப்படியே கம்சனின் ஆணைப்படி ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்ல பகரூபத்தில் வந்த பகாசுரனை அழித்த நிகழ்ச்சியினை ஆண்டாள் "புள்ளின் வாய் கீண்டானை" எனக் கூறினார்கள்.

ஸ்ரீகிருஷ்ணனின் லீலைகளில் அந்த பகாசுரனை அழித்த நிகழ்ச்சியும் ஒன்று! நீர்நிலையின் ஓரத்தில் கொக்கு ரூபத்தில் இருந்து ஸ்ரீகிருஷ்ணனின் வருகைக்காகக் காத்து இருந்த அந்த பகாசூரனின் வாயை தனது இரு கைகளாலும் பற்றி பிளந்து விட்டார். அந்த கிருஷ்ணனைப்பற்றி ஆண்டாள் பாடினார்கள்.

"வல்லானை கொன்றானை, மாற்றாரை மாற்றழிக்க வல்லானை" என்று 15-வது பாசுரத்தில் குவலயாபீடம் நிகழ்ச்சியினை நினைவு கூறுகிறார்.

ஆண்டாள், ஓ, பத்மனாபா! எந்தவிதத்தில் குவாலயபீடம் என்றும் வலிய யானையை கொன்றாயோ, எந்தவிதத்தில் பகைவரின் செருக்கை அழிக்கச் செய்தாயோ, அந்தவிதத்தில் எங்கள் அனைவரையும் சேரும்படியாக உள்ள தடையினையும் கூட நீக்கக்கூடியவர் அல்லவா? என ஆண்டாள் கிருஷ்ணனைப் பிரார்த்தனை பண்ணுகிறார்.

திருப்பாவை 8-ம் பாசுரத்தில்

**"மல்லரை மாற்றிய தேவாதி தேவனை"** என்று

கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர்களை அழித்தவன் தேவர்கள் எல்லார்க்கும் பெரியதேவன்" என்று ஆண்டாள் கூறுகிறார்.

அந்த கிருஷ்ணன் இந்த உலகத்திற்கெல்லாம் கர்த்தாவும், சம்ஹாரம் செய்பவராகவும் இருந்தார். அனைத்து உயிர்களும் கிருஷ்ணனுக்காகவே உள்ளன. இதைக் கருத்தில் கொண்டு ஆண்டாள் ஸ்ரீகிருஷ்ணனை தேவாதி தேவா எனக் கூறுகிறார்.

ஸ்ரீ கிருஷ்ணர் தனது சக்தியை வெளிப்படுத்துவதற்காக, அந்த கோபாலர்களுக்கு அவர்கள் செய்யும் இந்திர பூஜையை விட்டுவிட்டு அந்த கோவர்த்தன மலையைத் தனக்கு அளிக்கும்படிச் சொன்னார். இந்திரன் தனது பூஜா பாகம் அபகரிக்கப்பட்டது என நினைத்து அந்த கோகுலம் முழுவதும் கல்மழை பெய்யுமாறு செய்தார். அப்பொழுது அந்த கோவர்த்தன மலையை உயரத்தூக்கி கோகுலத்தையும்

பசுக்களையும் காப்பாற்றினார். இந்தக் காரணத்திற்காக ஸ்ரீ கிருஷ்ணன் கோவிந்தன் எனப் பாவிக்கப்படுகிறார். அந்த ஸ்ரீகிருஷ்ணனின் அவதாரத்தை நினைத்து "குன்றுக்குடையாய் எடுத்தாய்! குணம் போற்றி" என்று ஆண்டாள் கிருஷ்ணனுக்கு மங்களாசாசனம் செய்தார்கள்.

திருப்பாவையில் ஸ்ரீ ஆண்டாள் மற்ற இதர அவதாரங்களை விட ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் பற்றிக் கூடுதலாகச் சொல்லியுள்ளார்கள். ஆண்டாள் மட்டுமன்றி இதர ஆழ்வார்களும் ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் பற்றியே அதிக ஈடுபாடு செய்துள்ளார்கள்.

இதற்கு காரணம் என்னவென்று **நஞ்சேயலு பட்டார்களிடம்** கேள்வி கேட்க அவர்கள் இவ்வாறு பதில் தெரிவித்தார்கள்.

ராமாவதாரத்தில் தந்தை - சம்பராந்தவர், ஊர் - அயோத்தியா, புரோகிதர் = வசிஸ்டர் - பிள்ளைகள் - குழந்தை வயதிலேயே ராட்சதர்களை அழித்தவர்கள். அந்த ராமனைச் சக்கரவர்த்தியாய் பார்க்க வேண்டும் என்று சொன்னவர்கள்தான் மக்கள்.

கிருஷ்ணாவதாரத்தில் பெற்றோர்கள் இருவரும் - யாதவ குலத்தைச் சேர்ந்தவர். ஊர் = கொல்லபள்ளி - கம்சனாதி ராட்சதர்கள் எதிரிகள். பிருந்தாவனம் முழுவதும் - மாயா ரூபத்தில் உள்ள ராட்சதர்கள் - அந்த பூதனாதி ராட்சதர்கள் மூலம் ஏற்பட்ட துயரங்களுக்கு அளவே இல்லை.

இராவணாதி ராட்சதர்கள் அனைவரும் ஸ்ரீராமனுடன் நேரிடையாக வந்து போர்புரிந்தார்கள். அப்பொழுது ராமர் இளைஞன் யுவனாக இருந்தார்.

ஆனால் இங்கே பிறந்த 7 நாட்களுக்குள்ளே ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஏற்பட்ட இன்னல்களுக்கு கணக்கே இல்லை. சகடாசுரன், பகாசுரன் ஆகிய ராட்சதர்கள் மறைமுகமாக வந்து கைக்குழந்தையாக இருந்த ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்ல முயற்சி செய்தனர்.

இந்தக் காரணங்களுக்காகவே ஆழ்வார்கள் அனைவருமே ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் பற்றி அபிமானித்தார்கள். ஆண்டாள்கூட இந்த காரணத்திற்காகவே இதர அவதாரங்களைவிட ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தை திருப்பாவையில் அதிகமாக எடுத்துரைக்கிறார்கள்.

இந்தவிதத்தில் ஆண்டாள் திருப்பாவையில் இந்த மகாவிஷ்ணுவின் திவ்ய அவதார மகிமை லீலா விநோதங்களையும் ரமணியமாக அபிவர்ணித்துள்ளார்கள்.

கோயில்பாளையம் என்னும்

# கௌசைத் தலபுராணம்

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

